# மணிவாசகர் சரித்திரம்

ஆக்கியோர்:

திருநெல்வேலி

ஸ்ரீமான்: பி. ஸ்ரீ. ஆசாரியார்.





வெளியிட்டவர்:

இ. மா. கோபாலகிருஷ்ணக் கோன்,

புத்தகவர்த்தகர், மதுரை.

1929.

[விலை அணா 12.

## நூற்பயன்.

சிற்றம் பலத்தே திருநடம் புரியும்
கற்றையஞ் செஞ்சடைக் கடவுளர் தமது
செய்ய திருவடி சேப்புறு மாறு
வையக மீது வைத்தடி நடந்து
வாசகப் பெம்மான் வைகல் நண்ணிப்
"பேசரும் பெரிய பெற்றியீர் நமது
முழுமுதற் கடவுண்மேல் மொழிந்தநும் பாடலை
எழுதுதற் பொருட்டே ஈண்டுவந் துள்ளனம்
செப்புக வென்றும் சிவனார் மீதோர்
ஒப்பருங் கோவை ஓதுக" வென்றும்
வேண்டி விரும்பி விரைவா யெழுதி
ஆண்டுநின் றகன்ற அரும்பெருஞ் செயலால்
நந்தமிழ் நாட்டில் நனிசிவப் பேறுய்
வந்தவ ரேமணி வாசக ரென்பர்
அன்னவர் சரிதை அரிதரி தெனவே
தென்னருந் தமிழில் திரட்டி எங்கள்
திருநெல்வேலி பி. ஸ்ரீ. ஆசாரியார்
ஒருநல் நூலென உலகுய உதவினர்
என்னே இதனை இயற்கலா சாலையுள்
பொன்னே யாமெனப் போற்றிப்
பாடமா வைத்துப் பயிற்றிடு வாரே

இங்ஙனம்,

நா. கிருஷ்ணசாமி நாயுடு,
தமிழ் வித்வான்,
மதுரை.

# முகவுரை.

தமிழ் நாட்டில் தெய்வ பக்தியின் முதிர்ச்சியால் பெரும் பேறு பெற்ற சைவத் திருப்பெரியாருள் மாணிக்க வாசகர் மிகச் சிறந்தவரென்பது எவரு முணர்ந்ததாம். இவர், பாண்டிவளநாட்டில் திருவாதவூர் என்னும் தலத்தில் அவதரித்துச் சிறந்த கல்வி கற்றுப் பாண்டிய மன்னன் அபிமானம் பெற்று, அவனுக் கமைச்சராகிப் பெரும் பதவியை அடைந்தும், அவ்வாழ்க்கை நிலையற்றதென் றுன்னி, அதிற் பற்றுவைக்காது, சிவபக்தியொன்றினையே சிறந்த பொருளெனக்கொண்டு, அப்பக்திப் பெருக்கால் நித்திய சுகத்தையடைந்து நிமலன்றாட்காளானவர். இவர் சிவபக்தியின் மேலீட்டால் செய்துகாட்டிய மகிமைச் செயல்களும், சிவபெருமான் இவர் பொருட்டுச் செய்தருளிய அற்புதத் திருவிளையாடல்களும் நமக்குப் பேரானந்தத்தையூட்டக்கூடியவைகளாயும்; சிவபக்தியையும், சிவஞானத்தையும், கல்வியறிவையும் அடியார் பக்தியையும் உண்டாக்கக்கூடியனவாயுமிருத்தலின், இவரது சரிதை தமிழர் ஒவ்வொருவரும் அவசியம் படிக்கக் கூடியதாகும். அங்ஙனமிருந்தும் இது, நல்ல ஆராய்ச்சிக் குறிப்புக்களுடன் இதுவரை வெளிவரவில்லை. அவ்வாறு வெளிவராதது தமிழர்க்கு ஒரு பெருங் குறையாயிருந்து வந்தது. அக்குறையை நீக்கும்பொருட்டே 'மாணிக்கவாசகர் சரித்திரம்' என்னும் இந்நூல், திருவாதவூரர்புராணத்திலுள்ள விரிவான கதைப்போக்கைத்தழுவிச் சுருக்கமாக நுணுகிய ஆராய்ச்சியுடன் ஆராய்ச்சி வல்லுநரால் எழுதப்பட்டு எம்மால் வெளியிடப் பட்டிருக்கிறது.

இதில், மாணிக்கவாசகர் சரிதை, சரித ஆராய்ச்சி, கால ஆராய்ச்சி குணதிசயம், வாழ்க்கை, கவிநயம், நூலாராய்ச்சி முதலியவெல்லாம் வெகு தெளிவாக எழுதப் பட்டிருக்கின்றன; இந்த அரிய நூல், பொதுவாகத் தமிழ் மக்கள் அனைவர்க்கும் நற்பயனளிப்பதெனினும் சிறப்பாக உயர்தர மாணவர்க்குப் பெரிதும் பயன்படத்தக்கது.

நமது தமிழ் நாட்டில் பழைய அரசர், புலவர், சமயாசாரியர் முதலிய பெரியார்களது வரலாற்றினைக் காலம் களம் முதலியவற்றோடு செவ்விதின் ஆராய்ந்து வரையப் புகுவது ஒரு பெருஞ்சிரமமான காரியமென்றும், அங்ஙனம் இம்மணிவாசகப்பெம்மான் வரலாற்றினை ஆராய்ந்து வரையப் புகுவது ஒருபுடை அதனினும் பெரிய சிரமமான காரியமென்றும் ஆராய்ச்சிவல்லுநர் அறிந்திருக்கின்றனர். இங்ஙனமிருந்தும் இந்நூலாசிரியரான திருநெல்வேலி ஸ்ரீமான் பி. ஸ்ரீ. ஆசாரியாரவர்கள் ஆயப்புகுவார் ஐயந்திரிபறத் தெளிந்துணருமாறு இந்நூலை "இன்னதல்ல திதுவென மொழிதல்" என்ற முறையில் தக்க சான்று காட்டி எழுதி இருப்பது பாராட்டற்பாலது.

ஆதலின், இதனைத் தமிழ்மக்களனைவரும் படித்துப் பொருளுணரும் வகையிலும், பிறர்க்குப் படித்துக்காட்டி நண்பொருளுணர்த்தும் வகையிலும் உயர்தர மாணவர்க்குக் கற்பிக்கும் வகையிலும் நன்முயற்சியோடு பயன்படுத்துவார்களென்று நம்புகிறோம்.

இங்ஙனம்,

**E. M. G.**

*MADURA.*

# பொருளடக்கம்.

விஷயம் | பக்கம்

# மணிவாசகர் சரித்திரம்

## மணிவாசகர் மந்திரியாதல்

" சோக்கன் அருள் நன்மைபெறு தோன்மைதிகழ் நன்னாடு "

என்ற வண்ணம் இறையருளுக்கு இலக்காகி நின்று, என்றும் வாடாத தொன்மைமாட்சியோடு இலங்குவது வையையாறு சூழ்ந்த பாண்டிவளநாடு. பண்டையோரான பாண்டியரது நலங்குலவும் இந்நாடே, முத்தமிழ்வளர்த்த அகத்தியமாமுனிவன் தங்கி வைகிய திருநாடாகவும் திகழ்கின்றது. இத்தகைய பெரும்புகழ் வாய்ந்த பாண்டிநன்னாட்டிலே, பல்வளப் பண்டசாலைகளாகவும் தமிழ் நாகரிகத்தின் வளர்ப்புப் பண்ணைகளாகவும் இருந்த ஊர்கள் பலவுண்டு. இவ்வூர்களின் நடு நாயகமாக விளங்கியது திருவாதவூர்.

இவ்வூரில், பழமறையென்றும் பொதுநூலென்றும் போற்றப்படும் நான்மறையும் ஓதித்தேர்ந்த அந்தணர்கள் நிறைந்திருந்தனர். அறிவுச் செல்வத்தோடு அருட்செல்வமும் கலந்து குலவிய மேன்மையால், இவ்வூர் தேவரூராகிய பொன்னகரினும் சிறந்து பொலிந்தது. இவ்வூரின் மறையோரில், ஆமாத்தியர் மரபில் வந்து, தன்னிகரில்லாத சிவநெறித் தலைவராயமைந்த ஓர் அருட்பெருஞ் செல்வர் உருவ அழகினும் குண அழகினும் ஒப்பற்றிருந்த மாதர் குலவிளக்காகிய தமது தேவியாரோடு இல்லறம் இனிது நடத்திவந்தார். இவர்க

ளது அருந்தவப் புதல்வராக, மணிவாசகப்பெருமான் திரு வவதாரஞ் செய்தார்.

"பொய்ம்மையாம் உலகில் மாயப்
பொங்கிருள் அகல, அன்னோர்
தம்மைஆழ் நரகில் தள்ளும்
சமய தாரகை மழுங்க,
எம்மை யாளுடையான் அன்பர்
இதயதா மரைக ளெல்லாம்
செம்மையாய் மலர ஞான
தினகரர் உதயஞ் செய்தார்."

பொங்கிப்பரந்த உலகமாயை என்னும் பொய்ம்மையிருள் நீங்கவும், அவ்விருளில் கிடந்துழல்வோரை ஆழ் நரகில் தள்ளும் நாத்திகம் உலகாயத முதலிய சமய தாரகைகள் மழுங்கவும், திருநெறித் தொண்டர்களாகிய மெய்யன்பர்களுடைய இதய தாமரைகளெல்லாம் செம்மையாகி மலரவும், மணிவாசகராகிய ஞானசூரியர் உதயஞ்செய்தருளினார்.

இவரது பிள்ளைத்திருநாமம் திருவாதவூரர் என்பது. தவமெனும் வித்துள் தங்கிமுளைத்து அருளெனும் குருத்துவிட்டுச் சிவபோகமென்னும் விளைவுண்டாக வளரும் தெய்வச் சாலியென வாதவூரர் நாளொருமேனியும் பொழுதொரு வண்ணமுமாக வளர்ந்து வந்தார். இவர்க்கு அமுது நுகர்வித்தல் (அன்னப்பிராசனம்), குடுமிவைத்தல் (சௌளம்), முந்நூல் தரித்தல் (உபநயனம்) ஆதியசடங்குகள், குலமுறைக் கேற்றவாறு நிறைவேறின. கருவிலே திருவுடையராகிய திருவாதவூரர் தம்பால் இயற்கையாகக் கமழும் சிவமணத்தோடு, தக்க நல்லாசிரியர்பால் கல்விமணமும் பெற்றுப் பதினாறாண்டெல்லையினில் பல்வேறு கலைகளிலும் தேர்ந்து விளங்கினார். பின்னாளில் உலக

மெலாம் உண்மையறிந்துய்யுமாறு அருட்கவிபாடும் பேரறி வாளராக விளங்குதற்குரிய முற்குறிகளெல்லாம் வாலிப வாத வூரர்பால் அமைந்து விளங்கின.

இங்ஙனம் இவர் கல்வியறிவொழுக்கங்களாற் சிறந்திருந் ததைத் தமிழ்மாறன் தக்கோர் உரைப்ப அறிந்து அவரை யழைத்துத் தனக்குரியவராக்கி அவருக்கு ஆவிநேர் நண்ப னுயினுன். வாதவூரண்ணலின் வல்லமை தெரிந்ததும், அவன் இவரே தகுதியுடையவரெனத் தெளிந்து இவரை நிலம்புரந்து நீதிமுறைமை நடத்தும் முதன் மந்திரியாக்கினுன்; பின்னும் மன்னரெல்லாரும் மதிக்கும்படி 'தென்னவன் பிரமராயன்' எனச் சிறந்ததோர் பட்டப்பெயருமளித்து, நவமணிப்பூண், பொன்னுடை, வெண்மதிக்கவிகை, சிவிகை, வெண்சாமரம், வேழம் ஆகிய வரிசைகள் வழங்கிச் சிறப்புஞ் செய்தான்.

இந்திரச் செல்வம்போல இசைந்த பாக்கிய மெய்தப் பெற்ற வாதவூரர், ஏனைய மந்திரிபிரதானிகள் தற்சூழச் சுந்தரவானச்சுடர்களோடும் அந்தரத்திழிந்து மண்மேல் அமர்ந்த வெண்மதியம் ஒத்துவிளங்கினுர். பாண்டியமன்னன் கவலைமுழுதும் நீங்கத் தாமே பூபாரம் தாங்கி இறைவனுணை யைப் பொதுவற நடத்துங்காளில், மக்களெல்லாம்,

"காதலித் தறஞ்செய் வோர்க்குக்
கவசமும் கண்ணு மாகி
ஏதிலர்க் கிடும்பை யாகி
இறைஞ்சினர்க் கின்ப மாகி
ஆதுலர்க் கன்னை யாகி
அரன் அடிக் கன்பு மிக்கார்"

வாதவூரரே யென்று மனமார வாயார வாழ்த்தினர். வாத வூரரோ, மந்திரத்தலைமைபூண்டு நீதிமுறை நடத்திவரும்

போதே, உலக வாழ்க்கையின் மர்மங்களேயும் சிவாகமங்களின் மர்மங்களேயும் ஒருங்குணர்ந்து, கடமைக்குக் கையும் கடவுளுக்கு இதயமுமாய்த் ‘ தாமரையிலேத் தண்ணீர்போல் ’ ஜகத்தொடும் கூடி வாழ்ந்தார்.

இந்நிலேயில், இவர் அதிதீவிர பக்குவமெய்தித் திருவைந்தெழுத்தின் குறிக்கோளாகிய சிவமெனும் செம்பொருளேத் தமக்கு அறிவிக்கும் ஞானகுருவின் திருவடியைக் கூடல் வேண்டுமென்று கருதினர். குரங்கினல் விளவின் கனிபெற விரும்பி நயந்து கல்லெறிவார்போல, இவரும் தருக்கமாதிய கலேகளில் வல்லவரான ஞானசைவர்களோடு வாதம் செய்து வந்தார். இங்ஙனம் கேள்விச் செல்வம் துய்த்ததோடு வாதவூரர்,

“ வளங்கெழு புவியி னுள்ள
வாவியும் காவும் ஓடி
விளங்கிசை வண்டு தண்டேன்
மிகுமலர் தேடு மாபோல்
உளங்கொள நிமலன் நன்னூல்
ஓதினர் .........”

இத்தகைய கல்வி கேள்விகளோடு இவர், உண்மையெலாம் அளந்துணர்ந்த ஞானசாரியர் யாவரென்று ஆராய்ந்த வண்ணமாக விருந்தார்.

ஒருநாள், மங்கையர் வீசிய சாமரை அசைந்தெழ, அருந்தவர் அந்தணாளர் கவிஞர் நெருங்க, அரிமர்த்தன பாண்டிய மன்னன் உத்தமாங்கமாகிய தன் சிரத்தினே அழகு செய்த மணிமுடியோடு அரியாசனத்தே வீற்றிருந்தான். அப்பொழுது சில தூதர்கள் அரசன்முன்னே வந்து வணங்கி, “ சோழ தேசத்தைச் சேர்ந்த கடற்கரையிடத்தே குற்ற

மற்ற நல்லிலக்கணம் வாய்ந்த குதிரைகள் கொண்டு ஆரிய நாட்டார் வந்திருக்கின்றார். அரசே! யாம் அது கண்டோம்" என்று விளம்பினர். பாண்டியனும், தமது ஏவலாளருள் இவர்களே விசேஷ ராஜபக்தி வாய்ந்தவர்களென்று கொண்டாடினன்; பின்பு உத்தமசாதிக்குதிரைகளை வாங்கிவாருமென்று தனது உடலும் உயிருமாகிய வாதவூரர் முகநோக்கி மொழிந்தான்.

செந்தமிழ் வேந்தன் ஆணையின்படி சிவநேசச் செல்வராகிய வாதவூரர் உடன்பட்டார். மன்னனும் முகமலர்ந்து, குதிரைகொள்ளும்படி, அறவழியில் ஈட்டிய தன்னுடைய பொருளிலே நாற்பத்தொன்பதுகோடிப் பொன் வழங்கினன். அரசன் உதவிய திரவியத்தைக் கொண்டு சிறந்த குதிரைகளைக் கொள்ளுதற்கு நல்லவேளையிற் பிரயாணம் கொண்டார் வாதவூரர். அவரைச் சூழ்ந்து யானைகளும் குதிரைகளும் காலாட்படைகளும் நெருங்கின. கொங்கணர், கலிங்கர், சிங்களர், துளுவர், ஒட்டியர், தெலுங்கர், கொங்கர், சீனர், மாளவர், மலையாளரெல்லாரும் தம்மில் ஒன்று கூடி எங்கணும் நிறைந்தனர். பரிமீது நல்லிசைத் தமிழ்ப்புலவர் சூழ்ந்தனர். இளம் பெண்கள் இருமருங்கும் திரண்டு மொய்த்து மங்களகீதம் பாடினர். வீணையும் வேய்ங்குழலும் முன்னர் இசை விளம்பின. வெண்பனிக் கவரி வீச, வட்ட வெண்குடை வயங்க, முரசமார்ப்ப, காளமொடு சங்கங்கறங்க, பாடகர் வியந்து வாழ்த்த வாதவூரர் முத்துச்சிவிகை மீதிவர்ந்து திருவாலவாயான் திருக்கோயிலை நண்ணினர். இறைவனைத் தொழுது விடை பெற்று, மதிகுலப் புங்கவனுகிய பாண்டிய மன்னனது கயற்கொடி யிலங்கும் அரண்மனைக்குச் சென்றார். அங்கு அரசன்பால் விடை கொண்டு சோணடு செல்வார், குன்றனைய

மாட மாளிகைகளும் கூட கோபுரங்களும் நெருங்கிய மதுரா புரியை நீங்கினர்.

"நெடுங்குட திசைக்கடல் நிறைந்தொலி சிறந்தே
உடைந்துதய நற்றிசையில் உற்றுவரு மாபோல்
மிடைந்த பதியும் கடமும் வெற்பும் இவையெல்லாம்
கடந்து வழி சென்றுபல காவதம் அகன்றார்"

நெடிய மேற்றிசைக்கடல் உடைந்து பொங்கி ஓசை மிகுந்து கீழ்த்திசையிற் புரண்டுவருவதுபோல, வாதவூரர் தமது ஆடம்பர வைபவங்களோடு நாடுங்காடும் மலையுங்கடந்து சோழ நாட்டை நோக்கிப் பலகாதவழி நடந்தார்.

---

## II

## திருப்பெருந்துறையில் உபதேசம் பெறுதல்

தில்லைவாழந்தணர் வணங்கப் பொன்னம்பலத்தே ஆனந்த திருத்தமிடும் கருணைக்கடலாகிய சிவபெருமான், உமாதேவியார் மகிழ, மழுவுமானும் திருக்கரங்கொண்டு, வெள்ளியங்கிரியில் பொன்மயமானதோர்மணிமண்டபத்தில் எழுந்தருளியிருந்தார். புதுமலர்தூவிப் பழமறையோதி முனிவர்கள் எம்பெருமான் திருமுன்னே, "உமக்கு வழிவழியாகிய அடிமையுடையோம்" என்று வரிசை வரிசையாக நின்று வணங்கினர். அரியும் அயனும் எழுந்து, இதுவே இறைவன் அருள்வழங்குந் தருண மென்று மகிழ்ந்து, தத்தம் பதம் நிலைபெற அருளுமாறு திருவடிகளில் இறைஞ்சினர். மணிவிளங்கிய படத்தையுடைய அரவங்களையணிந்த அரனுடைய அங்கமும், தண்ணொளி பொழியும் முத்துமாலைகள் திகழும் மலைமகள் வடிவமும், இரவியும் மதியமும் இசைந்திருத்தல்போல எதிரெதிரிலங்

கின. இக்காட்சியின்பத்தைக் கண்ணால் முகந்து பருகிய அன்பர் "அரகர சிவசிவ" வென்று காதலாகிக் கசிந்துருகி ஆனந்தக் கண்ணீர் வடித்தனர். இந்திரன் முதலிய தேவர்கள், "தேடிய புண்ணியமெல்லாம் பொன்னுலகில் அனுபவித்தபின் அடியற்ற மரம்போல நொந்து அவனியில் விழுவதொழிந்து, பரம்பொருளாகிய உன்னுடன் உறையும் பெருமையினை யருளுங் காலமும் எமக்குண்டோ?" என்று தெய்வமணங்கமழும் ஐந்தரு மலர்களைப் பன்முறையுந் தூவி இறைஞ்சினர். நந்தியெம் பெருமான் உடைவாளும் பிரம்புமேந்தி இறைவனருகே நின்றார். அழகுத் தெய்வமாகிய மலர்மகளும் நிலமகளும் தெய்வமங்கையரும், அன்னையாகிய உமாதேவியின் பக்கத்திலிருந்தனர். பூதகணநாதர் நெருங்கிப் புடைசூழ்ந்து நின்றனர். கின்னரர், கந்தருவர் இன்னிசை பாடினர். இறைவனது சடைமுடியில் அலைவீசியோங்கும் கங்கை வெள்ளம்போல இருமருங்கும் வெண்சாமரைகள் ஓங்கி யழகுசெய்தன.

இவ்வண்ணம் பெருஞ்சிறப்போடு விளங்கிய அம்மையப்பனாகிய இறைவன் சிவஞான அமுதந்தோன்றுஞ் செந்தமிழ்க் கடலாகிய வாதவூரடியாரை ஆண்டருள விரும்பினார்; "கடல் சூழ்ந்த காசினியில் மனிதருருவில் வாருங்கள்" என்று அடியார்க்கும் கணநாதர்க்கும் ஆணைதந்தார். தாமும் சிறந்த தேசிக வடிவங்கொண்டு கைலையங்கிரி நீங்கிக் கால் நிலந்தோய நடந்து தெய்விக வளம்பதியாகிய திருப்பெருந்துறைக்கு எழுந்தருளினார். வெம்மைதரும் பிறவிக் கடலில் வீழ்ந்து கிடப்பவரெல்லாரும் சிவநாமமென்னும் நற்புணை பிடித்து அருட்கரை யேறுதற்கு ஏற்ற துறையாக அமைந்து விளங்கியது திருப்பெருந்துறை. அப்பதியின் மருங்கெல்லாம் புன்னை, சந்தனம், சண்பகம், நரந்தம், செருந்தி, கோங்கு,

பாதிரி, பலா, பைங்கமுகு, தெங்கு, குரவு, மா முதலியன நெருங்கி மலிந்திருந்தன. செருக்கோடு தோகை விரித்து மயில்களாடின. அஞ்சிறை யன்னங்கள் அணிமடவார் நடை பயின்றன. குயில்கள் வானவீதியில் இசையமுதம் பொழிந்தன. சோலைகளில் மந்திகள் பாய்ந்து குதிக்குந்தோறும் வண்டுகள் எழும்பி யெங்கணும் அடர்ந்து முழங்கின.

"வீழ்ந்தநற வத்துளி விழிப்புனல் தாகச்
சூழ்ந்துமுரல் வண்டினிசை தோத்திரமதாகத்
தாழ்ந்துமல ரேந்தியிறை தன்திருமு னின்றே
வாழ்ந்துருகும் அன்பரென மன்னுமொரு பூங்கா"

இவ்வாறு விளங்கிய சோலையின் நடுவே, ஓர் குருந்தமரம் தவமெனுங் கிளைபோக்கி, அறமெனுந் தளிர் தழைத்து, மெய்ம்மையாம் மலர்பூத்து, அறிஞர்போன்று அழகு சுமந்து நின்றது. இத்தகைய குருந்தமோடிலங்கிய பசுஞ்சுடர்ச் சோலையில் சேர்வோமென்று இறைவன் திருவுளங்கொண்டு, மான் காட்டி மான் பிடிப்பார்போல, மானுடவடிவந் தாங்கி நடந்தார். இவ்வாறு அடியார்கள் புடைசூழவந்து, கொத்துக் கொத்தாய் மலர்கள் நிறைந்த குருந்தமரத்தைக் கண்ணுற்று மகிழ்வெய்தி அதனடியில், திருவாதவூரர் பந்தமகலுங் காலம்பார்த்து, இறைவன் இனிது வீற்றிருந்தார்.

"பொங்கு புனல் யாறுபல போய்விழு கடல்போல்
எங்குமுள நல்லுயிர்கள் எய்தும்"

ஒளிக்கடலாகிய சிவபெருமான் இவ்வாறிருப்ப, வாதவூரர், பலரும் நெருங்கிச் செல்லும் வழியாக வந்தார். அந் நெறியிலே செவ்வழியுள்ளத்து வாதவூர்ச்செல்வரைப் புல்லாத பொய்-மயக்கம் விளைக்கும் பாசம் போல், காயா மரங்களில் கரிய மலர்கள் மலர்ந்தன. எம்மயக்கையும் ஒழிக்கும் இவருக்கு இனிப்

பிறவியில்லை யெனக் கைமறித்துக் காட்டுவனபோல அங்குள்ள காந்தளெல்லாம் மலர்ந்தன. ஐம்புல வேடர் அலைத்து இடர் செய்யும் முன்வினைப் பெருங்காட்டகத்தே புகாத திருவாத வூரர் இவ்வகையான காட்டு வழியைக் கடந்து வந்தார்.

"விரிந்தகட லுக்கிடை விழுந்திடர் உழந்தே
திரிந்தவர் நயந்துகரை சென்றணுகு மாபோல்
வருந்தவுழல் வித்தவினை யொத்தருள் வசத்தால்
அருந்தவர் பெருந்துறை மருங்கினில் அணைந்தார்"

"இவ்வுலகமே சிவலோகமாகும் வண்ணம் திருவாசகம் அருள வந்த வாதவூரடிகளுக்கு இறைவன் அருள் செய்ய வந்த இடமன்றோ இது!" என்று வியந்து விண்ணவர் தூவிய மலர் மாரிபோல், அப்பூஞ்சோலை மலர் சொரிந்து நின்றது. வழி நடந்திளைக்கும் மணிவாசகரை வரவேற்றுபசரிக்க, நீறணிந்து அமுதேந்தி எதிர் நிற்கும் அடியார்கள் போல, நெருங்கிய தாழைகள், மகரந்தம் பூசி வெள்ளிய மலர்க்குலை யேந்தி நிழல் செய்து நின்றன. எவ்வுலகமுங் கலந்து நின்ற பரம் பொருள் நிலம் வந்து குருந்தைநீழலில் எழுந்தருளி யிருந்தபடி கண்டு மனங்களித்துக் கண்ணீர் சோர மலர்ந்தொளிரும் பெருந்தவர் முகம் போலத் தாமரைகள் உள் நெகிழ்ந்து தேன் சொரிந்து மலர்ந்தன. தமது பெருஞ் செல்வத்தை யெல்லாம் பிறர் நுகரக்கண்டு அகத்தினிமைகொண்டு நிமிரும் நல்லறிவாளர் போலக் கரும்புகள் இனிமை நிறைந்து நெருங்கி யெழுந்தன. விளைந்த செந்நெற் பயிர்கள் நாயகர் முகங்கண்ட குலமாதர்போலத் தலை வணங்கின.

இங்ஙனந் திகழும் சோலையுங் கழனியுங் கண்டு உவகை கொண்டு, இனிப் புவியில் வாராத வாதவூரர் பெருந்துறை வளம்பதியை வந்தடைந்தார். அடைந்தவுடனே அருகே

குருநாதன் வைகும் சோலையகத்தே அடியார்களோதும் சிவாகம ஒலிப்பொலிவு கேட்டு ஏவலாளரை நோக்கி, "இதுயாது? அறிந்துறைமின்" என்றார். சென்றவர்கள் மீண்டுவந்து, "சிவனடியார் பலர் தம்மைச் சூழ்ந்திருக்கச் சிவபெருமானுக்கு ஒப்பான குணமலை யொருவர் அங்கேயுள்ள குருந்தமர நீழலில் எழுந்தருளியிருக்கின்றார்" என்று கூறினர். மணிவாசகரும் பெருமகிழ்வெய்தி அப்பெரியாரை யடையுங் காதல் தூண்டப் பூஞ்சோலையினை யணைந்தார். இவர் இதயம் வரம்பிகந்து விரிந்து அன்புமயமாக ஒளிர்ந்தது. திருவாதவூரர் தாமேறி வந்த மணிச்சிவிகையினின்றும் இழிந்து தெய்வமணங்கமழும் திருச்சபையைக் கண்ணுற்றார்.

அங்கே அடியார்கள் தொள்ளாயிரத்துத் தொண்ணூற்றென்பதுபேர் வேதாகமங்களை ஆராய்ந்து கொண்டிருந்தனர். இவ்வடியார் தொகுதிசூழ இறைவன் நடுவே வீற்றிருக்கக்கண்டு பெருவியப்புடன் அருகணைந்து, அன்பு மண்டிய நெஞ்சால் வணங்கி உடம்பால் வணங்காதவர்போல மந்திரியார் மேன்மையுடன் நின்றார். செவியிலும் சென்னியிலும் கண்டத்திலும் மார்பிலும், கையிலும் உருத்திராக்கமணிந்து நெருப்புக்கண்ணை ஒளித்த நெற்றியிலே வெண்ணீறு அழகுற வணிந்து விளங்கிய வேதியருடைய திருமேனி ஞானவொளி வீசியதைக் கண்டார். அகமகிழ்ந்து வாதவூரர் அவரை நோக்கி, "ஐயரே! உமது செங்கையில் திகழும் புத்தகம் யாது?" என்று வினவினார். ஞானமூர்த்தியும், அகநிறை யருள் மிகுந்து இளநகை யரும்பி, "இது பொய்ம்மையிலாச் சிவஞான போதம்" என்றார். இங்ஙனம் அவர் அருளிச் செய்தவுடனே வாதவூராரும், 'சிவமாவது யாது? ஞானமாவது யாது? போதமாவது யாது? இவற்றை நன்கு விளக்குவீராயின் அன்று கல்லால

விருக்ஷத்தின் கீழிருந்தபரமாசாரியன் நீரேயாவீர்! அடியேனும் நுமக்கு அடிமையாவேன்" என்று சொன்னார். குருநாதனும், "சிவமென்பது என்றும் நின்ற தனிமுதற்பொருள்: அதனைத் தேர்ந்தறிதலே ஞானம்: தேர்ந்ததைத் தெளிதலே போதம்." என்று சுருங்கச்சொல்லி விளங்கவைத்தார்.

இதனைக் கேட்டதும் வாதவூரர் மனமுருகி, "அந்தப் பொன்னம்பலத்திலே திருக்கூத்தாடும் ஐயனே இங்கு என்னையாளும் பொருட்டுக் குருமூர்த்தமாகி இத்திருமேனி தாங்கி வந்தனர்" என்று கருத்துட்கொண்டார்; "மின்னலைப் போல நிலையில்லாத துக்கத்தைத்தருகின்ற பொருள்கள் யாவும் வேண்டேன். என்னுயிர்க்கிறைவனே! உன்னடி யணைந்து நாயேன் பவப்பிணி யொழித்தல் வேண்டும். என்னை யின்றே அடிமை கொள்வாய்" என்று முகமெலாம் கண்ணீர்வார வணங்கி நின்றார். இவ்வகை யிரங்கிநிற்ப, இவர் அதிதீவிர பக்குவமடையுந் தன்மை வாய்ந்தவர் என்றறிந்து, "இவ்வடியாருடைய வெவ்வினையகற்றி யாளவேண்டும்" என்று அடியவரின் மிக்காரொருவர், தமக்குவமையில்லாத குருமூர்த்தியின் அடிதொழுது நின்றார். கருணைக்கடலான ஞானதேசிகரும், இனி யொரு கருவிலே சென்று, பிறத்தலை நினையாத வாதவூரர் மேல் கண்ணருள் செய்தார். ஆயிரங்கதிர்களைப் பரப்பி யிருள் கீறியெழும் பகலோன் முன்னர் மலர்ச்சிபெற்றிலகும் தாமரை போல, வாதவூரர் அகம்விரிந்து முகமலர்ந்து நின்றார். குருவும் இவர் முகம்நாடி, "இன்று உன்னை அடிமைகொள்ளும் பொருட்டு நீ முன்னியற்றிய தவத்தினாலே இத்திருப்பெருந் துறைக்கு வந்தோம். சஞ்சலப்பட்டு மனமழிதல் வேண்டாம்" என்று திருவாய்மலர்ந்தார். "நான் வறுமையுற்றேன். என் வறுமைநோய் களைதல்வேண்டும்" என்று சிந்தை நைந்து

வந்த ஒருவன்கையிலே செழும்பொருள் கொடுப்பவர்க்கு இந்த நாளே கொடுத்தற்குரிய நாளென்று பார்க்கும் விதியுண்டோ? அவ்வண்ணமே ஆன்மதாபமும் தாகமுங்கெட அருள் சுரக்க வேண்டுமென்ற வாதவூரர்க்கு அவர் அங்ஙனம் வந்த நாளே நன்னாளாகுமென மதித்து, ஞானகுருவும் அவரை ஆட்கொண் டருள வெண்ணினர்.

பின்னர் ஆசாரியரும் தமது அடியவரில் முதன்மையான ஒருவரை நோக்கி, "வித்தக! இவ்வாதவூரன் அருந்தவமுடை யான். இவன் அடைந்த துன்பத்தை நீக்கி ஆட்கொள்ளும் நாள் இந்நாளே. ஆதலின் இதற்குவேண்டும் கருமம் நீ விரை விற் செய்வாயாக" என்று அருளினர். அவர் அருளிய வாறே முயன்று முடிப்போமென்று தவத்தின்மிகுந்த அக்கண நாதர் விதம்விதமாகிய பூமாலைகளாலும், பொன்னிடையழுத்தி முத்தம்புனைந்து விளிம்பு செய்த பலவகைப் பட்டினாலும் அந் நெடுங்காவினிடத்து ஓர் பூங்கோயிலமைத்தார். அக்கோயி லூடு சிறந்ததோராசனம் சேர்த்தபின் அத்தொண்டர் இறை வனைச் சார்ந்து, "வஞ்சனையுடையவர் நெஞ்சிலே கனவி லுங் காணப்பெறாத நீலகண்ட குருவே! கோயில் வாய்ப்பாகச் சமைந்தது" என்றுரை செய்தார்.

குடபால் வெற்பில் ஆதவன் கரந்தான். ஞாலமெங்கும் இருள் பரந்தது. நள்ளிரவில் கடிகையோர் பதினைந்தாக, உயிர்களெல்லாந் துயில்பயிலுங்காலை, இறைவன் தூயதொண் டராகிய திருவாதவூரர்க்கு மாயை தொலையும் நல்ல சமயம் தோன்றியதென்று திருவுளங்கொண்டார்; உடனே திருச் சபை நீங்கி மஞ்சனச்சாலை சார்ந்து, குங்குமம், புனுகு, சாந்தங் குழைத்து மேனிமுழுதும் பூசிக் கங்கை நன்னீர் கலந்த மென்

பனி நீராடினர். திருமேனியிலே பொருந்தியநீரைத் துகிலால் மாற்றி, விலை மதிப்பில்லாத சித்திரப் பட்டாடையுடுத்துக் குருநாதன், தமது அடியார் காதலாற்சமைத்த கோயிலெய்தித் தென்றிசை நோக்கி, அங்கேயிடப்பெற்றிருந்த பெருந்தவிசின் மேல் அழகுற அமர்ந்தார். திருவாதவூரரும் நீராடி நிர்மலராய் வெண்துகில் புனைந்து வெண்ணீறு விளங்கிய மெய்யராகி விடுதலையருளத் திருமேனிகொண்ட ஞானதேசிகன் திருமுன் சென்றார்; தேவர்தேவன் திருவடி விளக்கிப் பூசனைபுரிந்து பனிநீர் தோய்ந்த சாந்தம்பூசிக் கழுநீர்மாலையை அணிந்த பின்னர், கண்குளிர ஆசைதீரக் கண்டு உளமகிழ்ந்தார். பருப்புடன் தேங்காய்த் துருவலுஞ் சேர்த்துச் சருக்கரை கலந்த பாலிலே சமைத்த நல்லமுதினைப் பொற்கலத்தில் விருப்பொடு படைத்து நெய்யும் முக்கனியும் பெய்து, "அரியும், அயனும் இந்திரன் முதலிய தேவர்களும் பிழைக்கும்படி முன்னாள் ஆலமுண்ட அருட்பெருஞ் சோதியே ! இத் திருவமுதினை உண்டருள்வாய்" என்று வாதவூரர் சீலமும் மகிழ்வும் பொங்கும் சிந்தையோடு வேண்டினர். இப்புதிய அடியாரது வேண்டுகோளின்படியே எம்பெருமான் அமுது செய்தருளினர். பின்னர் வெற்றிலையும் பாக்குங் கொடுத்துத் தூபதீபங் காட்டிக் கோல நன்னீறு சாத்திக் கண்ணாடி திகழ்வித்துத் தமது பரமாசாரியர் திருமுடிமேல் வாதவூரர் பட்டுக் குடையுங் கவித்தார். வெள்ளிய கவரியங் கற்றையும் செம்பொற் காம்பினையுடைய ஆலவட்டமும் அன்பொடு பற்றி வீசி அடியார் சூழப் பொற்றவிசிடையே மேவும் புண்ணிய மூர்த்தியின் சந்நிதியிலே, திருவாதவூரர் இரு கைகளிலும் மலரேந்தி வழிபட்டார். இவ்வாறு வழிபாடு செய்வார், சிந்தனைக்கரிய சிவத்துடன் அறிவுசேரப் பாசக்கட்டவிழத் தற்போத மிழந்து

நின்றார். இங்ஙிலையில் சற்குருவும் சீடர்மேற் பரிந்து அருட் பார்வை செய்து அன்பர்செவிப்புலன் வழியே சிந்தைபுகத் திருவைந்தெழுத்தினை உபதேசித்தருளினார்.

அன்பே வடிவமாக எழுந்தருளிய பரமாசாரியன் பார்வையினாலே, விளக்கின்முன் இருள் கெடுவதுபோல, வாதவூரரது வெந்துயர்ப்பவமும் ஒழிந்தது. அவரும் ஆனந்தக் கண்ணீருகுத்து இறைவனைத் துதிசெய்து திருவடி வணங்கியவராய்ப் பூமியிலே படிய வீழ்ந்தார். பக்திப் பெருங்காதலராகிய இவரது முடியிலே குருநாதன் இரண்டு திருவடிகளையும் மகிழ்வோடுஞ் சூட்டினார். அப்பொழுதே மணிவாசகரும் சிவானந்தப் பெருவாழ்வு வாழத் தொடங்கிவிட்டார். முன்னிருந்த பசுகரணங்கள் மாய்ந்தன! திருவருளாற் சிவகரணங்கள் தோன்றின! பொய்ம்மையறிவு போய்ச் சுக அறிவு பிறந்தது! வாதவூரர், தம் சென்னிமேல் வைக்கப்பெற்ற அடிமலரைக் கண்ணிணை சேர்த்து, இருகரத்தாலும் மார்பி லணைவித்து, உவகை கூர்ந்து மெய்யுணர்வில் திளைத்தார். அவ்வமயம் சோலையிலிருந்து மண்புதைய மலர்கள் உதிர்ந்தன. பூதரும் கணநாதரும் நல்லடியார்களும் மகிழ்வுபெற்றுப் பூரித்தனர்.

திருவாதவூரர் இறைவனை மீண்டு மிறைஞ்சி, "பூமியை அகழ்ந்தும் மேலே பறந்தும் திருமாலும் பிரமனும் கண்டு வணங்குதற்கரிய தேவரீர் அடியேனது அருந்துயர்ப் பவமகற்ற இங்கே குருவடிவங் கொண்டு வந்தது என்ன அருமை! என்னே எனது பேறு!!" என்றழுது மனமுருகினார்.

அற்றைஞான்று வாதவூரரது மாயைபோல் இருள் மாய்ந்து வைகறை யணைந்தது. அவர்பால் போதமாகி நின்று சுடர்வீசிய ஞானதீபம்போலக் காலை யிளம்பரிதி கடலிலே

உதயமாயிற்று. களங்கமொன்றில்லா வாதவூரர், குருவின் திருமேனி சாந்துடன் முயங்கு செங்கழுநீர் மாலையின் சுமை பொறுதெனக் களைந்து தம் துன்பம் நீங்கி, மெய்யடியார் குழாத்துடனிருந்தார். முன் காலத்தில் சனகர் முதலிய நால் வர்க்கும் கல்லாலின் கீழிருந்து அறமுரைத்த வேதநாதர் வாதவூரரை வேறுகொண்டிருந்து சிவாகமத்திற் சொல்லப் பட்ட அறிதற்கரிய பொருளைச் சொல்ல நினைந்தார்.

"இருள் வடிவமாகிய மலம் களிம்பு தோய்ந்த செம்பென உன்னைப் பொருந்தியிருந்தது. உன் தன்மை எதிரிட்ட வன்னங்களைப் பற்றும் பளிங்கு போன்றது. இம்மலத்தின் பற்றினால் உடல் பல எடுத்துழன்றாய். புவனந்தொறுஞ் செய் யும் உன் வல்வினைப் பயன்கள் வருகிற முறை வழியே, அளந்து நாம் நியதி செய்ய நீ அதனைப் புசித்து, அங்ஙனம் புசிக்கு மிடத்து ஆகாமிய வினையையும் விளைத்துக் கொண்டு அறியா மையால் திரிந்தாய். வினைகளைச் செய்த ஆன்மாக்களுக்கு வினைப்பயனை ஒருவர் இடைநின்று சேர்க்கவேண்டுவதில்லை யெனின், நீ சிற்றறிவினனாதலால் மேல்வருவ தின்னதென் றும் புசிப்பதின்னதென்றும் அறிந்து சேரமாட்டாய். வினை தானறிந்து சேருமோ வென்னில், சடமாதலின் அறியாது. உய்தலாகிய நன்னெறியுணராத உன்னையும் உன் வினைப்பயனை யும் அறிந்து இருள்வடிவமாகிய மலங்கழுவி விடுதலைவாழ்வு தருவோம் யாமென்று மதிப்பாயாக. இருவினைகளும் ஒரு துலையின் இருதட்டினு மிடப்பட்ட பொருளென நிறைநிகர்த் தால், அப்போதே பிறவித்துன்பம் நீங்கும்; நமது பதம் சித்தி யாகும். இங்ஙனம் இருவினை யொப்புவருதற்கு யாம் கோயில் கொண்டருளும் இடந்தொறும் இறைஞ்சிச் சிவபுண்ணியம் புரிவதோடு எமதடியார்க்கு ஏவற்பணிகளுஞ்செய்தல்வேண்டும்.

இங்ஙனம் சரியைத்தொழில் இயற்ற வல்லவர்க்கு எமது சாலோகபதவியைத் தருவோம். உள்ளும் புறத்தும் எம்மைப் பூசைசெய்து சிவாகமப்பிரகாரம் கிரியைத்தொழிலை விழைந்து செய்பவர் எம்மருகிருக்கும் சாமீப்பியம் பெறுவர். முக்குணங் களும் ஐம்பொறிகளும் அடக்கி அருள்வெளியிலே புகுவோர் எம்முருப்பெறுதலாகிய சாரூப்பியம் அடைவர். கலைஞான முழுவதும், ஆகம நூற்பகுதியும், பல சமயசாத்திரங்களும் தேர்ந்து தெளிந்து சிவபோதம் விரியப்பெற்ற நெஞ்சினராகிய வித்தகரே நம் மெய்ப்பதமாகிய சாயுச்சியம் பெறுவர். உருப் பொலாதவர் இழிகுலத்தவராயினும், அவர்களது மெய்யிலே வெண்ணீறும் சாதனவேடமும் கண்ட அளவிலே எதிர் சென்று வணங்கி, அவர்க்கு எளியராயிருந்து, அடியவர்க் கடியராவோர் யான் எனதென்னுஞ் செருக்கறத்துவாழ்வர். உன் உடல்பொருளாவியும் உன்னுடையவையல்ல; நம்முடையவையே. இங்கே உன்னைப்போல் மானிடவடிவந்தாங்கி வந்த நம் பெருவடிவை நின்கருத்தி லிருத்தி வைப்பாய் "என இவ்வாறு தேசிகவடிவங்கொண்ட இறைவன் திருவாய்மலர்ந்தருளினர்.

இவ்வமலவாசகங் கேட்டு மனமகிழ்ந்த வாதவூரர் பிறப்பறுக்கும் அடிமீது பணிந்து எதிரெழுந்து, "பேதையேன் பிழைதனக்கு இரங்கியருளிய பிஞ்ஞகா! பித்தனாகிய அடியேனையும் முத்தனாக்கி மெய்யருள் காட்டினை!" என மொழிந்து முடிமிசைக் கரங்குவித்தார்.

" 'என்னதாகமுன் நினைந்துள பொருளும்
இல்லதாகிய உடலமும் யானும்
நின்னவாக நின்னருள்கொடு நினைந்தேன்
நின்மலா!' என நின்று நின்றுருகா

மன்னு தானைதன் மேலணி கலன்கள்
மதுரை மீனவன் வான்பொரு ளிறையோன்
முன்னதாகவைத் திறைஞ்சினர், அறஞ்சேர்
முதல்வ னோர்முகம் மலர்வு கொண்டிருந்தார்."

"நின்மலனே, எனதென்று நான் முன்னே நினைத்திருந்த பொருளும், எனதில்லமாகிய உடம்பும், யானும் உம்முடையவையாகவே உமதருள்கொண்டு நினைந்தேன்" என நின்று நின்றுருகித் தமது பட்டாடைகளையும், அணிகலன்களையும், பாண்டியன் குதிரைகொள்ளக் கொடுத்த பொருள்களையும் தமது சற்குருவின் எதிரேவைத்து இறைஞ்சினர். அறப்பெருங் கடவுள் முகமலர்ச்சிகொண்டு அடியார்களிற் சிறந்த ஒருவர் முகநோக்கி, "இப்பொருள்களையெல்லாம் சிவாலயத் திருப்பணிக்குக்கொடும், அருந்தவர்க்குதவும், வறியவர்க்கு வழங்கும்," என்று கட்டளையிட்டார்.

தம்மிடத்திருந்த அபரிமிதமான திரவியத்தையெல்லாம் கொடுத்துவிட்டு வாதவூரர் தம் குருநாதனளித்த ஞானமருந்தினையருந்திப் பாசவெம்பிணியகற்றிச் * சீவன் முத்தராக விளங்கினர்.

" திருத்திகழ் கவிகைக் கீழும்
சிறந்தபொற் சிவிகைமேலும்
வரத்திரு மேவுதானை
மன்னவன் என்னவந்தார்
உருத்தெரியாத நீறும்
கோவண வுடையும் குஞ்சி
விரித்துள சிரமும் கண்ணீர்
மிகப்பொழி விழியுமானர்."

இந்நிலைமையுற்ற திருவாதவூரரை அவரது படைத்தலைவர்களும் பந்துக்களும் கண்டு தொழுது தென்னவன் முனி

யாதபடி குதிரை வாங்கிக்கொண்டு போகவேண்டும் என்ப தொன்றும் தெரியாதிருப்பது பழுதென்றிரங்கி, "ஐய! நீர் வருதல்வேண்டும்" என்று விரும்பி யழைத்தனர். திருவாத வூரர் அவர்களை நோக்கி, "அறியாமையில் மிகுந்த நீங்கள் யாவர்? மாயா பேதமாகிய உங்கள் பொய்யுரைகளெல்லாம் எம்மிடம் சொல்லத்தக்கனவல்ல. தூரப் போய்விடுங்கள்" என்றார். அவர்களும் தம்முளே துயரமெய்தி, "இவர் யாம் சொல்லுகின்ற சொல்லையும் கொள்ளார். நம்மேல் பரிவிலர்" என்று அவரைவிட்டகன்று பாண்டிய மன்னனுக்கு இதனை அறிவிப்போமென்று போனார்கள்.

சென்றவர் வையை வளநாடடைந்து மன்னன் முன்ன ரெய்தி, "வன்திறல் மன்னபோற்றி! மாமதுரேச போற்றி!" என்று வணங்கி, வாதவூரர் செய்தியெல்லாம் கவலைமிக்க உள்ளத்தோடு சொல்வாராயினர். "தென்னவன் பிரமராயனென்று உன் பெயர் புனைந்த உனது முதன் மந்திரியாகிய திருவாத வூரர் செய்கையை எங்ஙனம் யாங்கள் எடுத்துரைப்போம்? உன்னிடத்திற் செல்வு பெற்றுத் திருப்பெருந்துறை புகுந் தோம். அந்நகர் மருங்கே ஓர் பூங்காவிலுள்ள குருந்த மர நீழலில் சிவனடியார்களாகிய தவசிகள் பலர் சூழ மாதவவேடம் பூண்ட ஒருவர் வீற்றிருந்தார். அவரைக் கண்டதும் வாத வூரர் அளவிலா மகிழ்ச்சிகொண்டு அன்பொடு சில சொற்கூறி 'சங்கரா! சிவனே! சரணம்,' என்று அவர்தாளில் வீழ்ந்து வந்தனை செய்தார்; தாம் அணிந்திருந்த இரத்தினபரணங்களை யும், பட்டாடைகளையும், குதிரை வாங்கக்கொணர்ந்த திரவியங் களையும் உவந்து அடியுறையாகச் சமர்ப்பித்தார். தாம் உடுத் திருந்த ஆடையும் நீத்துக் கோவணம் மாத்திரம் தரித்து, வாசனை யூட்டப்பெற்றிருந்த தலைமயிர் விரித்து, மெய்யெலாம்

நீறுபூசி, 'இது முறைமையன்'றெனமொழிந்த எங்கள் முகம் பாராதவராய் நிறைதப்பிய பித்தராஞர் " என்று வணங்கி நின்றார்.

கேட்டலும் மதுரை மாறன் உடல் முழுதும் வியர்த்துக் கிளர்ந்தெழு சீற்றத்தோடு கண்கள் சிவந்து கனல்வடிவாக, "அரசர்களுக்கு இத்தகைய வள்ளல்கள் மந்திரிகளாக அமர்ந்தால் தேடவேண்டிய நாடு, செல்வம், சேனை முதலியவைகளுக்குக் குறைவென்ன?" என்று நகைத்தான். "குதிரைகொள்ளும் பொருட்டு நாம் கொடுத்த அரும்பொருளை யெல்லாம் கொள்ளையிடுவதற்காகக் கெடுமதி சொல்லுவார் சொற்கேட்டு மயங்கிய வாதவூரனை நீங்கள் வேகமாகச்சென்று கண்டிப்பான இக்கட்டளை கொடுத்து ஒரு தினத்திலே நம்பால் கைப்பிடியாகப் பிடித்து வாருங்கள்!" என்று மன்னன் சில தூதரையேவினன்.

அரசனேவலிற் சென்ற அவர்கள் திருப்பெருந்துறையடைந்து ஆவலோடு சிவன் தாளேத்தும் வாதவூரண்ணலைக் கண்டு வணங்கி, "பகைவர்க்கு இடியேறு போன்ற மன்னர் மன்னன் செந்தமிழ் மாறன் திருமுகங்காண்க" என்று வேந்தன் விடுத்த ஓலையைக் கொடுத்தார்கள். அரன் திருமுகமன்றி வேறொரு முகத்தினையும் காணமனமில்லாத திருவாதவூரர், "இதனைப் படித்துரைமின்" என்று பற்றில்லாதவராய்க் கூறினார். அவர் சொற்படி 'நல்லதென்று' ஒருவன் அவ்வோலையிற் பொறித்திருந்ததைப் படிப்பானுயினன்.

"தென்னவன் அரச னோலை தென்னவன் பிரம ராயன்
என்னு நல்லமைச்சர் காண்க! எல்லையில் தனங்கொண் டேகி
கொன்னுறு பரிகொ ளாமல் கோவணங் கொண்டீர்; ஈது
மன்னர் தம் கருமஞ் செய்வார் வன்மையென்று வகையுற்றேம்.

"வையக மன்ன ராகி வாழ்வதின் மனைகள் தோறும்
எய்திய உதரத் தீயால் இரப்பது பெருமை யென்று
மெய்தகத் தம்மை யாண்ட வேந்தரைப் பிழைத்து வேறு
செய்வது பலிக்கும்என்று தேர்ந்தநூல் துணிவுங் கண்டோம்."

பின்னுந் தொடர்ந்து படிக்கலுற்று, "மன்னரையடைந்து வாழ்வது நஞ்சுமிழ் நாகத்துடன் மருவிவாழும் தன்மையாம் என்றுணர்வீராயின் இவ்வோலையைக்கண்ட மாத்திரத்திலே நம் தூதரோடு தலைநகர் வருக. இது பாண்டியன் கையெழுத்து" என்று முடித்தான்.

இதனைக்கேட்ட வாதவூரர், "சிவனடியார்களே எம்மை யடிமையாக வுடையார். அன்றி, தான் எனக்குத் தலைவனென்றும் தன்னை யான் பிழைத்தேனென்றும் மதுரை மன்னன் சொன்னது எவ்வாறு பொருந்தும்? கூற்றுவன் எழுதும் ஓலை கொண்ட தூதரும் எம்மை வந்தணுகமாட்டார். ஒரு கணத்தில் முப்புரங்களையும் வெந்து விழும்படி சுட்டெரித்த கடவுளுடைய அன்பர்கள் ஒருவருக்கு அஞ்சத்தகுவரோ?" என்று மனத்திலெண்ணினார்.

இப்படி நினைத்துப்போய்ப் பழுதிலாத வாதவூரர் இறைவன் திருத்தாளேத்தி, "புண்ணிய வடிவே போற்றி! பாண்டிய மன்னன் எழுதிவிட்ட ஓலையின் முகவுரையை இனிது கேட்டருளும்," என்று பணிந்தார். எம்பெருமான் அதனைக்கேட்டு இளமுறுவல் பூத்து வாதவூரர்க்கு உவந்து சொல்வார்- "பிடிலாதவர் போலக் கருத்திலேகொண்ட பேதைமை யொழிவாயாக! நாடெல்லாம் மதிக்கும்படி நாமே நல்ல பரித்திரள் கொண்டு சென்று தென்னவற்களித்து மீள்வோம். தூதர்களுடனே மன்னனைக்குறுகி, 'என்பால் நீ வரவிட்ட ஓலையினால் விரைவில் முன்னுற வந்துவிட்டேன்.

ஆவணித்திங்கள் மூலநாளில் இங்கே நல்ல குதிரைகள் வரும்' என்று சொல்வாயாக! பாண்டியன் துன்பப்படுத்துவானென்று சற்றும் மனக்கவலை கொள்ளாதே." என்று நீறு தரித்துப் பொன்மணிக் கலன்களும், பூந்துகிலும் பிறவும் அளித்து அரசன் மனமகிழ்ச்சியடையும்படி மந்திரிக்கேற்ற கோலஞ்செய்தார்; "பாண்டியன்பாற் சென்று இது கொடுத்துக் காண்பாயாக" என்று நல்ல மாணிக்கமொன்றுநல்கி விடைகொடுத்தார். வாதவூரரும்,

"கன்றகல் புனிற்று வென்னக் கசிந்திரு கண்ணீர் வார
நின்று நின்று இறைஞ்சி 'ஐயா! நீத்தியோ?'"

என்று துயருழந்தார். கண்களினின்று நீர் தாரைதாரையாய் ஒழுகச் சோலைசூழ் பெருந்துறை நீங்கி, குருமூர்த்தியருளிய திருவைந்தெழுத்தே வழித்துணையாகத் தூதரோடு மதுரையம் பதியிற் சேர்ந்தார்.

மன்னவன் முன்சென்று மனவிருப்பமில்லாமல் புறவணக்கஞ்செய்து ஞானதேசிகன் நல்கிய நாயக மணியைக் கையுறையாகவைத்து எதிர் நின்றார். நின்ற மாத்திரத்தில் தென்னவன் இவரை இன்புறநோக்கி முறைமைப்படி 'இங்கேயிரும், என்று சொல்ல, வாதவூரரும் இருந்தார். தென்னவன் விலையிலாத அந்த மாமணிக்கரசைப் பலகால் உற்று நோக்கி வியந்து நெஞ்சகத்தே உவகையெய்தினான்; வாதவூரரைப்பார்த்து "நீர் செய்தகாரியமென்ன? சொல்லும்" என்று வினவினான். அவரும், "அரசே! நீ தந்த நிதிகொண்டேகி உத்தம இலக்கணங்களிற் குறைபாடின்றி நாற்கதிகளுமுடைய குலப்பரியினங்கள் யாவும் விலைக்குக்கொண்டேன். அருமையான அக்குதிரைக் கூட்டங்களையெல்லாம் இந்நகரத்திற்குக்கொண்டு செல்லப்

பொருந்திய நன்னாள் ஏதென உசாவினேன். பூசுரர் விதிப்படி பார்த்து ஆவணித்திங்கள் மூல நக்ஷத்திரமே நன்னாளென்றார். அதனைக்குறித்துக்கொண்டு திருப்பெருந்துறையில்தங்கினேன். உமது படைகளும் சுற்றமும் இந்நகருக்குப் போகவேண்டு மென்னும் விருப்புடன் விரைவில் மீண்டார். அவர்கள் என் மீது பெரும்பழிகூற அதைக்கேட்டு நீர் பெருமுனிவோடு ஓர் ஓலைவரைந்தீர். அதனாலே முன்னதாக வந்தேன். பரித்திரள்க ளெல்லாம் நான் சொல்லிய ஆவணிமூலத்தன்றுவரும்" என்று மொழிந்தார்.

இதனைக்கேட்ட மாறன், "உம்முடன் எமக்குண்டாகிய நிலைபெற்ற பெருநட்பு நீங்கும்படி சூழ்ச்சி கருதிய மனத்தார் சொற்கேட்டு அன்பிலர்போல ஓலை எழுதினம். அதனாற் காரிய மொன்றுங் கெட்டுப்போகவில்லை. மனத்துள் ஒன்றிய தூன் பத்தினை ஒழிவீராக" என்று பழைய உரிமையுடன் பேசி னான். அரசன் வாதவூரரைத் தன்பெருங் கோயிலூடு அழைத் துச்சென்று, தக்க நல்லாடைகளும், பொன்னணிகளும் நல்கி முன்போலவே இராசகாரியங்க ளெல்லாம் சொல்லி, 'மனை யேகு' மென்று வழியனுப்பினன்.

இங்ஙனம் வாதவூரரிருக்கப் பின்னர் குதிரைக் கூட்டங் கள் வரவேண்டிய தினத்திற்கு இரண்டு நாளுக்கு முன்னே பாண்டியன், சேனாபதிகள் சுற்றங்கள் யாவையும் நீங்கித் தனித் திருக்கும்போது, மந்திரக் கிழவரில் ஒருவன் அரசனை அணுகி, "போற்றி! எம் பொருளை நாட போற்றி!" என்றிறைஞ்சி னான். இறைஞ்சி, "யான் செய்யும் விண்ணப்பம் ஒன்றுண்டு. அஃதென்னெனில் தென்னவன் பிரமராயனென்று நின்பெயர் புனைந்து வரிசைபெற்றுள்ள முதல் மந்திரியார் குதிரைகொள்வ

தற்குச் சோணுடு சென்று அங்கே சிவனடியார் கையில் உன்னுடைய திரவியங்களை யெல்லாம் கொடுத்துவிட்டார். உன் பெருந்தூதர்சென்று உன்னேலே காட்டியபின் அவர் வந்து உன் சீற்ற மொழித்துத் தம்முயிர் பிழைப்பக்கருதி அன்புடையவர்போல் உன் அடியினைக் குறுகினுர். 'ஆவணி மூலத்தில் நல்லகுதிரைக் கூட்டங்கள் இங்கு நான் உனக்குத் தருவேன்' என்ருர். வாதவூரார் மொழிந்தவை யெல்லாம் பொய்யுரையாகும்" என்று கூறினுன். பாண்டியனும் உடனே தூதரை நடுங்க நோக்கி, "பெருந்துறையடைந்து அங்கே குதிரைகள் இருக்கின்றனவா? என்று பார்த்து வல்லைவந் துறைமின்" என்று இடிகுரலில் இயம்பினுன்.

அருந்திறம் வாய்ந்த தூதர் விரைவிலே திரும்பிவந்து, வருத்தத்தோடு மன்னர் மன்னனுகிய வையை நாடனைவணங்கி, "வேந்தே! பெருந்துறையிலும் அடுத்த மற்ற வூர்களிலும் தேடிப் பார்த்தோம். புரிகள் கண்டிலம்" என்று சொன்னுர்.

தூதர் இன்னவாறு பகர்தலும் அரசன் வெகுளிபொங்கி, "இராஜகாரியம் செய்கிறேனென்றுபோய் நமக்கு இடர்செய்த வினைத் தாங்கரும் துயரஞ்செய்து தகைந்து நம்முடைய திரவியங்களையெல்லாம் வாங்குமின்!" என்று தண்டலாளரைப் பணித்தான். தண்டலாளரும் வாதவூரர் முன்னின்று முனிவுகொண்ட முகத்தராகி இனைய சொல்லுவார்:- "பரித் தொகுதிகொள்ள நயந்து உமக்கு அந்நாளீந்த தன் பொருளை யெல்லாம் வாங்கச் சாற்றினன் பாண்டியமன்னன். இதற்கு நிமித்தம் யாதெனில் அரசன்விடுத்த தூதர் பெருந்துறையில் விரைவினெய்திக் குதிரைகளைக் காணுமல் மீண்டனர். ஆகையால் அரசனும் உம்மிடத்தே வைத்த நேசத்தைவிட்டான்

இனி மந்திரத் தலைமையினையும் ஆளவொட்டான். திரவியம் முழுவதையும் உடனே கொடுத்தல்வேண்டும்" என்றார்; பின்னர் மூண்டெழுஞ்சினத்துடன் சிறிதுநேரம் வாளாவிருந்தார். மீண்டும் தீமைகூறும் நினைவுடன், அமைச்சுரிமை நீக்கி மணிவாசகப்பெருமானை வலிதிற் காவற்சாலையில் வைத்துத் தனியுறச் சிறைசெய்தனர்.

வாதவூரர் உள்ளமோ சிறிதுந் தளர்ச்சியுறவில்லை. அப்போது,

"நற்றவர் வருத்தங் காண நாணமுற் றொளிப்பான் போன்று
பொற்றடந் தேரின் வெய்யோன் போய்க்குடபால்ம றைந்தான்."

இறைவனது மெய்யடியவர்க்கு இன்னலிழைத்த வழுதி மேற் சீறி வெகுண்டதுபோல் தோன்றியது செக்கர் வானம். நல்லோர்க்குற்ற தீங்குகண்ட சிறியர்போல முல்லையரும்புகள் மலர்ந்து சிரித்தன. வாதவூரர்க் குற்றதை யுணர்ந்த பெரியோர் மனம்போலக் குவிந்தன தாமரைகள். வேறொருவர் காணில் சிறையினுறையும் வாதவூரரது தெய்விகவுள்ளம் நாணமுற்றழியுமென்று கங்குல்மங்கை தன் இருட்கரங்கொண்டு நகரமாந்தரின் கண்களைப் புதைத்தனள். எனினும் அன்றிரவு முழுதும் மதுரையுள்ளார் ஒருவரும் 'அயின்றிலர், துயின்றிலர் அழுது விம்மினர்;' "அரசனுடைய பகையை நீக்கிக் கொள்ளுந்தன்மை இம்மந்திரித்தலைவர்க்கும் உண்டோ? அந்தோ! என்செய்தும்?" என்றிரங்குவார்; தலைவனைப்பிரிந்து நெஞ்சகத்தே அழலெழ உயிர்த்து மாழ்கும் மகளிர்போலத் துன்பக்கடலி னாழ்ந்தனர்.

செம்மனப்புனிதராகிய வாதவூரர்தம் துயரினை உரிமையொடு தங்கள் நாயகனாகிய அறுமுகப்பெருமானுக்கு உரைப்

பதுபோலச் சிவந்த உச்சிக்கொண்டையும் பெருஞ்சிறைகளையு முடைய சேவல்கள் மனையிடங்கள் தோறுங் கூவப் பொழுது புலர்ந்தது. சிறையகம் புகுந்த செந்தமிழ்ச் செல்வரது இன்னல்பொருது முறையிடுவதுபோல ஆலவாயற்புதன் கோயில் முன் சங்கங்கள் முழங்கின. "எம்மிறைவன் பரியேறிவருகின்ற பெருநாளிதுவோ"வென்று பேரவாவோடு பார்க்கும் திருமகள் அணிந்த திலக சிந்தூரம்போலக் கிழக்குத்திசையிலே பால சூரியன் உதயமாயினன்.

செங்கோல் மன்னனாகிய பாண்டியன் வைகறையெழுந்து நீராடி நிமலனைப் பூசித்து முத்துமாலையணிந்து நற்கலன்கள் சுடர்வீச வானளாவிய தன் செம்பொற்கோயில் முகப்பினில் இனிது வீற்றிருந்தான். அவ்வமயம் தண்டலாளரெல்லாரும் சிறைச்சாலையிலிருந்த வாதவூரரை யணுகி, "நீர் குதிரை கொள்ளப்போய்ச் சிவனடியார்க்கு விநியோகித்துவிட்ட செம்பொருளைத் தாரீராகில்இன்று உம்மைக் கொடுமையாகவருத்துவோம்" என்று பயமுறுத்தினார்கள்; எறிக்கின்ற வெயிலூடு அவரை நிறுத்தினார்கள்; மலைகலங்கினும் நிலை கலங்காத வாதவூரர் அவ்வண்ணமே நின்றார். அவர் தம்மையாட்கொண்டருளிய ஆண்டகையை யுன்னினார்; "இங்கே எனக்கு நேர்ந்த இத்துயர்களை உணர்ந்திலையோ?" என்று தம்மனத்தே சொல்லிக்கொண்டார். "இறைவனே! 'மன்னனுக்குப் பரிகள் கொடுப்பது நம் கடனாகு'மென்று நவின்ற நின் சொல்லும் பொய்யாகுமோ?" என்று கவன்றார்; "மாயவாழ்க்கையை யொழித்து உனக்கு அடிமையென்று உலகம் புகலுமாறு வந்து உன்னையடைந்த நாயேனை மீனவன்பால் மீளவிடுத்தனை. ஆற்று நீர் கடலொடு கலந்த பின்னும் ஆற்றுநீ ராவதுண்டோ?" என்று இடருற்றார்.

"அறத்தனிச் செல்வி பாக! அன்பிலேன் நின்பாலென்று
வெறுத்திடில் அடியேற் கிங்கு வேறொரு துணையு மில்லை
செறுத்துயர் புரங்க ளெல்லாம் செற்றவ னடியான் தன்னை
நிறுத்தினர் வெயிலில் என்றால் நின்புகழ்க் கேற்ற மாமோ?

"வானநா டவர்க்கு மேலாய்! வந்துனக் கடிமை யிப்போ
தானநான் இடும்பை யுற்றால் ஆருனக் கடிமையாவார்?
நானொரு மனத்தார் சொல்லும் நல்லுரையன்றி நின்ற
ஈனரும் ஒருவன்சொல்வ தேறுமோ உளத்தில்? என்றார்"

வாதவூரர் இவ்வாறு கூறிய சொற்களெல்லாம், அருட் பார்வை நல்கிப் பவக்கடலினின்றும் பரிவொடு இவரைக் கரை யேற்றும் வண்ணம் தவப்பெருவடிவந்தாங்கித் திருப்பெருந் துறையில் எழுந்தருளிய இறைவன் திருச்செவி புகுந்தன. ஏழைபங்காளனாகிய கண்ணுதற் பெருமான் தனது மெய்யன்ப ராகிய வாதவூரர் படுந்துயரமெண்ணி அதனை நீக்கவேண்டு மென்று திருவுளம் பற்றினர்.

---

## III

## இறைவன் குதிரையிடுதல்

மைந்தர் துன்பந்துடைப்பது தந்தைக்குக் கடனன்றோ? தன்பால் பேரன்புபூண்ட வாதவூரர் அழுங்கல் கண்டு எவ்வு யிர்க்குந் தந்தையாகிய சிவபெருமான் ஆற்றாது இரங்கி அருள் புரியத் திருவுளங்கொண்டார். நரிகளெல்லாம் பரிகளாகவும், வானவர்கள் பரிவீரர்களாகவும் உருமாறிவரும்படி சங்கற்பித் தார் உடனே.

'தேசிலா நரி வந்துவந்து திரண்டுவெம் பரியானபின்
ஆசிலா இமையோர்கள் தாமும் அமைந்த சேவக ராயினர்.'

இறைவனும் ஆரியநாட்டுக் குதிரைவாணிபராகமாறி வேதமே குதிரையாகக்கொண்டு வேகமாக மதுராபுரியை நோக்கிவந்தார். பிடித்த சவுக்கோடு குதிரைச்சேவகர் இருமருங்கும் திரண்டனர். அவ்விடத்தே எழுந்த தூகள் மண்ணும் விண்ணும் பரந்து நிறைந்தது. உடுக்கை, ஊது கொம்பு முதலிய பல்லியம் முழங்க இறைவன் குதிரைகள் பலவுங்கொண்டு கூடலம்பதியின் நெடிய மதில்வாயிலை யடைந்தார். வாயிலில் நின்றகாவலர் ஓடிச் சென்று மன்னனை வணங்கி, " அரசே! எங்கணும் தூகளெழுந்து விம்மவும், காளகம் முழங்கவும் ஆரியநாட்டுக் குதிரைகள் நமது மதிற்புறத்து நெருங்கி வந்துள்ளன" என்று சொன்னார்கள். குறித்த நாளில் குதிரைக்கூட்டங்கள் வந்தன வென்று சொல்லைக்கேட்ட மாத்திரத்திலே அரசன் வாதவூரர் பால் மீண்டும் நேசங்கொண்டு அவரைச் சிறையினின்றும் விடுவித்துத் தன்பால் அழைத்துவரும்படி ஏவலாளர்க்குக் கட்டளையிட்டான். அவர் வந்ததும் தென்னவன் அவருக்கு ஆடைமுதலிய வெகுமதியளித்துக் 'குதிரைகாண என்னுடன் வாரும்' என்று வேண்டினன். பகைவரஞ்சும் படைசூழப் பாண்டிய மன்னன் அரண்மனையின் புறமெய்தினன்.

மதுரைமூதூர் கண்டுகளிக்க மணிச்சிவிகை மீதேறிவந்த அரசன் வையாளி வெளிதனிற் போந்து, பனிநீர் தோய்ந்த செங்கழுநீர் மாலைதூங்கும் முத்துப் பந்தரின்கீழ் அமைத்திருந்த பொற்பீடத்தி லமர்ந்தான்.

" முத்தமிழின் திறநவிலும் புலவர்சூழ
முதுமறையோர் மங்கலச்சொல் முறையிற்கூறக்
கைத்திகழும் வளைபுலம்பக் கலன்கள் மின்னக்
கன்னியர்கள் இருபாலும் கவரிவீசக்

கொத்துலவும் பலமலரின் வாசந்தோய்ந்து
குலவுமிளந் தென்றல்வர மாதர்பாட
மெச்சுமணி முத்தமெனும் பணிகள் பூண்டு
வெண்மதியின் தோற்றம்போல் வீற்றிருந்தான். "

சங்கு, காகளம் பேரிகையார்ப்பத் தயங்கியெழும் துகள் விண்புதைக்க, நெடுங்கடல் நிலைபெயர்ந்து வருதல்போல நெருங்கி வரும் குதிரைவெள்ளத்தைப் பாண்டியன் கண்ணுற்றான். இக் காட்சியினை வாதவூரரும் மனங்களிப்ப விழிகளிப்ப வியந்து கண்டார்.

அரை வீக்கிய வாளொடு திலகமிட்ட நெற்றியும், பட்டிசைந்த மேனியும், விட்டு விட்டொளிசெய்யும் பவளமாலை தழுவிய மார்பும் பணைத்த தோளுமுடைய ஆரியர்கள் குதிரைகளை நடத்தி வந்தார்கள். இவர்கள் மயிற்பீலியர், புலித் தோலினர், மலரும் பச்சிலையும் புனைந்த குஞ்சியர், வன்மொழிக் குரலினர், வயங்கு தூணியர், வில்லேந்திய கையினர், வெறித்த பார்வையர், பொன்னரி மாலையர், பொன்னியல் குழையினர், பன்னிறத் தலைச்சாத் தணிந்து இவ்வீரர் பலவகை ஆயுதந் தாங்கிவர, நடுவே வாணிபர் தலைவனாக இறைவன் தோன்றினர்.

நாகரத்தினம் பதித்த கச்சினை யிடையே விசித்து, உடைவாள் செருகி, முழுநீலம் பச்சை முதலிய பன்னிற மணி வடம் பூண்டு, செந்நிறம் மன்னிய திரண்ட தோளோடு, பட்டுடையும் தலைச்சாத்து முடையராய் ஞானவொளி வீசுந் திருமுகமண்டலத்தோடு, சவுக்குங் கையுமாய் வெண் பரிமீது இறைவன் விளங்கிய தோற்றம் கண்டோர் கண்ணையுங் கருத்தையும் ஒருங்கே வசீகரித்தது. "இத்தகைய அற்புத வடிவம் இந்நிலவுலகிலுமுண்டோ? இவர் எவ்

வுலகினரோ ? " என்று பலரும் சங்கித்தனர். அக்கொற்ற வெண் குதிரையின் அங்கவடியிற் கட்டிய மணிகளும், கச்சைமணிகளும், முன்பின் கட்டிய மணிகளும் கலந்து இனி தொலித்தன. கல்லணையிற் கட்டிய கவரிகள் மிடைந்தொளிர்ந் தன. மேலே கவித்துள்ள செழுங்குடைவயங்க, குதிரைக் கூட்டத்தினிடையே இறைவன் ஆரியநாட்டு மன்னவனைப் போல வந்தார்.

பாண்டியனும், இக்குதிரைச்சேவகர் வருந்தகைமையினை 'நோக்கியகண் இமையாது நோக்கி'னன். அவனது உள் ளத்தே பொங்கிய உவகை, இருதடங் கண்களிலும் அலை யெறிந்தது. "மும்மைப்பெருந் தேவர்களில் ஒருவரோ ? இவர் ? இத்தகைய எழில் வாய்ந்தவர் யாவருளர் ? " என்று அரசன் அதிசயித்தான். புண்ணிய மூர்த்தியாகிய வாதவூரரும், தாம்செய்த தவப்பயனே உருவெடுத்து வெண்பரிமீது நண் ணியதெனத் தம்முள் நயந்து, " என்னெண்ணம் இனிதுநிறை வேறியது " என வியந்து நின்றார்.

இச்சமயத்தில் இறைவனோடு வந்த குதிரைவீரர், பளபள வென்று ஒளிவிடும் வேல்பல சுழற்றி எதிரே செல்வார் ; ஆர வாரிப்பார் ; வாளினை விதிர்ப்பார் ; அணி நின்று தம்முள்ளே சமர் செய்வாராயினர். தென்னவனும் மகிழ்ந்து தவராசராகிய வாதவூரரை நோக்கி, "ஆரியகுலவீரரை ஒரு வீதியிலே இக் குதிரைகளை நடத்தும்வகை சென்றுரையும்" என்று பரிவொடு புகன்றான். " என்ன வார்த்தை சொன்னான் இவன் !" எனத் தம்முள் இரங்கிய வாதவூரர், முகமலர்ந்து தமது ஆசையின் கனியாகிய இறைவனைக்குறுகி, நெஞ்சால் முன் வணங்கிக் 'காதல் பொங்கிடக் கண்பனி யுகுத்திட ' நின்று தோத்திரஞ் செய்தார். பின்னர்,

"வந்தபடி இவ்வுரு வணங்குமிது வல்லால்
அந்தவடி வாகில்உனே யாரறிய வல்லார்!
இந்தவகை கண்டடிய வர்க்கெளியை யென்றே
சிந்தைதனில் அன்பொடு தெளிந்த துலகெல்லாம்"

என்று இவ்வாறு முகமன் பல வியம்பி மந்திரியார் மன்னன் சொன்ன சொல்லே விண்ணப்பஞ் செய்தார். இறைவனும் இசைந்து முடி துளக்கி முறுவல் பூத்தார்; தமிழ் மாறன் நன்றாகக் கண்டுகளிக்கும் வண்ணம் பரிநடத்தலுற்றார். நாகபந்தம் வட்டம் நெடுவீதி யென்னும் இவுளித் தொழில்கள் யாவும் இனிது காட்டி,

"உன்னு மன வேக மென ஓடும் உயர் பாய்மா
நன்னட மிடும்படி நடாத்தி யெதிர்வந்தார்."

பரித்தலைவனது தொழிற்றிறம் வியந்த பாண்டிய மன்னன், சிரக்கம்பஞ்செய்து, 'சபாஷ்'என்று கைவிரல் சுழற்றி, விலையில்லாததோ ரரியபட்டாடை யளித்தான். இதனைக் கண்ணுதலும் அலட்சியமாகச்செண்டின் மிசைபேற்று நகை புரிந்தார். இங்ஙனம் ஏற்றுக்கொண்ட ஒண்கலையினை ஒரு சேவகன் நேசந்தேக்கிய நெஞ்சினன்-கண்ணினன் காற்றெனக் கடுகிவந்து விரைவாகத் தன்கையில் வாங்கினான். ஆனால் அவனும் வணங்கவில்லை; அரசனளித்த அருங்கலையினை முடிமீது புனைந்து போற்றவுமில்லை. இதனைத்தன் கண்ணிணை சான்றாகக் கண்ட கொற்றவன், நெஞ்சிடை நிமிர்ந்த சீற்றத்தால் நெருப்பெழ விழித்தான்.

"வெளிப்பட அரியமேனி விண்ணவன் கண்ணும் நெஞ்சும்
களிப்புற வருதல் கண்டும் கண்டிலன் கன்னி நாடன்
ஒளித்துல கெங்கும் நிற்போன், உருபவம் ஒழித்து ஞானம்
அளித்திடின் அன்றி யாவ ரவன் திறம் தெரிய வல்லார்?"

வண்டமிழ் வாதவூரர் மதுரேசன் முனிவுதீரக்குறுகிமுன் னின்று, அரசர் அன்பால் ஈந்த ஆடைகளை யெல்லாம் செண்டிடைக் கொள்ளல் அன்னோரது நாட்டு நன்மரபு என்று எடுத்துரைத்தார். இந்நீர்மை கேட்ட அரசனும் ஆறியமைதி கொண்டான். பின்னர் இவுளிநன்னூல் கற்ற வித்தகரை நயந்துநோக்கி "பரியிலக்கண விதிகளை நாடி, நீங்கள் உங்களுக்குள் தெளிந்து இக்கொற்றவெம் பரிகட்குள்ள குற்றமும் குணமும் துலக்கியுரைத்தல் வேண்டும்" என்று கட்டளையிட்டான்.

துரகநூலின் துணிபொருளுணர்ந்த நிபுணர்களும் தம்மில் ஆராய்ந்து, மன்னர் மன்னன் முன் வந்து வணங்கி நின்று,

"இப்பெரும் பரிகள், பயனில் சுழிகளும் துன்பந்தரும் சுழிகளும் பொருந்தாதன. முகமும் செவிகளும் கண்களும் கண்டமும் முதுகும் பற்களும் நாவும் கால்களும் பழுதின்றி அமையப்பெற்றுள்ளன. தலையிலும், செழுமையுள்ள நாபியிலும், சிறந்த மார்பிலும், பரந்த நெற்றியிலும், உயர்ந்த உதட்டிலும் சுழி குறையாதன. நாய், நரி, வெருகு, கருங்காகம், அலகை, ஓரி, பன்றி இவைகளுடைய குரலில்லாதனவாய், மேகம், கடல் சங்கம், இடபம், முழவம்போல் முழங்குவன. புலி, கரடி, கழுதை, செந்நாய், பூனை புகையிவைகளின் நிறம் புணராதன. வெண்முத்து, வெண்மதியம், இந்திரநீலம், செங்கமலம், காயா, செவ்வரத்தமலர், செழுங்கனகம், பச்சைக்கிளி, பஞ்சவர்ணக்கிளிபோல் ஒளிதயங்கும் உருவம் வாய்ந்தன. பார், அரசே! இவை வாயு வேகங்கொண்ட பஞ்சகல்யாணியென்னுங் குதிரைகள்! இன்னும் பார் அப்புறம்! எத்தனை சாதிப் பரிகள்! சாரனென்றும் சாரங்கனென்றும் கொங்காளனென்றும் கங்காநீலனென்றும், மௌவழகனென்றும் குங்குமச்

சோரனென்றும், கருங்காற் சம்பானென்றும் உரஞ்சிவந்தானென்றும், நல்லானென்றும் பொல்லானென்றும் பெயர் வாய்ந்த பெரும்பரிகள் இனம் இனமாக, அணியணியாக வருகின்றன. என்ன காட்சி! என்ன கம்பீரம்! என்ன இறுமாப்பு! என்ன வேகம்! எவ்வளவு உக்கிரமான பார்வை!" இங்ஙனம் இவற்றின் மேன்மையெல்லாம் சொல்லிப் பரியியல் புணர்ந்தோர் பாண்டியமன்னனைத்தொழுது நின்றனர்.

நிபுணர்கள் நவின்ற மொழிகேட்டு மிகநயந்து அரசன், வெம்பரிகளை யெல்லாம் விலை மதிக்கலுற்றான்; அவையாவும் தான் கொடுத்த பொருளின்மேல் எண்மடங்கு அதிகமாகிய விலைபெறும் என்று கண்டு பேருவகை எய்தினான். பின்னர் அவன் இறைவன் திருமுகம்நாடி, "இப்பரித்தொகுதியைக் கயிறு மாறித்தருக" வென்றான். பார்த்திவன் பணியாளர் கையினைற் பிடித்து வாங்கக் குதிரைச் சாத்தருள் சால்பினர் ஒருவர் கயிறுமாறிக் கொடுத்தார். உடனே குதிரைகளெல்லாம் பந்தியூடு சேர்க்கப்பட்டன. பிறகு இறைவன், தென்னவனும் தென்னவன் பிரமராயனும் காணத் தாம் வந்த திசையே திரும்பினார். திரும்பிச்சென்று பண்டைநற் படிவங்கொண்டு விண்ணவர் பணிந்து சூழத் தமதுகோயில்புக்கார். "இத்தகைய பரிகள் உம்மாலெனக்குக் கிடைத்தன" வென்று மன்னனும் வண்டமிழ்க்கிறையாகியவாதவூரரை நோக்கிமொழிந்து அவரை மனையிலேக விடுத்தான். பின்னர் உளமகிழ்ச்சி கூர்ந்து அரிமர்த்தனன் தகைமையோடு தானையும் சூழச்சென்று தன் கோயிலை யடைந்தான்.

மறுநாட்காலை யணைதலும் சிவபெருமான் திருவருளால் பரிகளெல்லாம் நரிகளாகி நெடுங்குரலெடுத்து, மதுரைமூதூர்

நடுங்கித் துயிலொழித்து இரங்கும்படி, ஊளையிடத் தொடங்கின. இந்நரிகளெல்லாம் ஆங்காங்கிருந்த பரியாளர் மேற்சென்று வெம்பகைகொண்டு வெருளச்செய்தன; பழைய குதிரைகளைக்கொன்று கூக்குரலிட்டன. கோபுரங்களும் மாடங்களும் அரசவீதிகளும் ஆவண வீதிகளும், பேரிகை முழக்கொழிந்து நரிகள் ஊளையிடும் சத்தத்தால் நிரம்பின.

"பாடி யாரணம் போற்ற மன்றிற் பயின்று
ஆடியார் விளையாட்டின் புதுமையால்
ஓடியாரும் ஒளித்திட வென்றொரு
கோடியானது கூவுநரிக் குழாம்."

அரசனது போர்வீரர் ஆயுதபாணிகளாக எதிர்க்கவே, எங்கும் பரவிய நரிக்குழாம் சிங்கக்கூட்டம்போல நின்று அமர்தொடங்கின.

"நாட்டின் நற்றவம் நன்மையில்லாததாயிற்றோ? கொற்றவன் செங்கோல் கொடிதானதோ? இன்று இதன்பொருள் என்னவோ?" என்று பலரும் இரங்கினர்; ஏங்கினர். இந்நிலையில் நரிகள் வெருட்டிய குதிரைவீரரும் திறந்தவாயோடு ஊளையிட்டுக்கொண்டே அரண்மனைவாயிலை யடைந்தார். பிரமித்துப்போன அரசற் கெதிரே, "மாயமாய் வந்த பரிகளெல்லாம் நரிகளாய்ப் போயின" என்று சொன்னார்கள். அங்குமிங்கும் பூசலிட்டோடும் மக்கள் ஓசையும், தாவியோடும் பரியோசையும், கூவிவரும் குறுநரி யோசையோடு கலந்து மீனவன் செவியிலே பழுக்கக் காய்ந்த வேலைச் செருகிய தொத்துப் புகுந்தன. அவன் கண்கள் தீப்பொறி சிந்தின; தேகம் வியர்ப்பெய்தியது. பாண்டியனது கோபங்கண்டு சிவபெருமான் மாயமாய் வந்த நரிப்படைகளை நீக்கியருளினார்.

அரசன், கொடிய தண்டற்காரரை வம்மெனக்கூவி, "நரித் திரளெல்லாம் பரித்திரளாக்கும் சரித்திரமுடைய நமது மந்திரியைக் கொணர்மின்" என்று கட்டளையிட்டான். தாள் தொழுதோடிய தண்டலாளரும் வாதவூரரை விரைவிற்குறுகி, "அரசன் உம்மை அழைத்துவரச்சொன்னான்" என்றார்.

"சித்தருக் கன்பு பூண்ட சித்தரும் முறுவல் எய்தி
நித்திலத் தொளிபோல் மின்னும் நீறெனுஞ் சாந்து பூசிப்
பத்தருக் கேவல் செய்வார் பதமலர் முடியிற் சூடி
முத்தமிழ்ப் பொருனை நாடன் முன்புசென் றருகு நின்றார்."

மூண்டெழுந்தீயென அரசன் சீறி, மற்ற மந்திரிகளை நோக்கி, "அமைச்சர்களே! இவர் செய்மாயங் கண்டீர்களோ? நாம் நல்வழியில் வருந்தியீட்டிய பொருள்களை யெல்லாம் இவர் இரவலர்க்குக் கொடுத்துவிட்டார். இத்தகைய துரோகத்தை மறைப்பதற்கு நரிகளையெல்லாம் குதிரைகளாக நம் கண்களுக்குக் காட்டி நம்மை ஏமாற்றினார்." என்று கூறினான்.

"தன்தொழில் வழுவி னோர்கள் தமக்குறு துயரஞ் செய்தல்
வன்திறல் அரசர் நீதி யாயினும் மறைவல் லாளர்
சென்றுயர் தவத்தில் நிற்போர் தெரிவையர் விருத்தர் பாலர்
என்றிவர்க் குறுகண் செய்தல் எம்மனோ ரியல்பன் றென்று"

தண்டலாளரை நோக்கி, "நம் கண்ணெதிரே நில்லாமல் இவரை விரைவிலே கொண்டுபோய் மண்டி யழலும் கொடிய வெயிலில் ஒரு கோடுகிழித்து நிறுத்தி நம்பாற் கொண்ட திரவியங்களை யெல்லாம் குறைவில்லாமல் வாங்கும்" என்று ஆணையிட்டான். அவரும் மணிவாசகரை அவ்வாறே நிறுத்தினர். அப்போது வாதவூரர், நரிபரியாக்கிய சித்தரை நினைந்து "தமியேன் இன்னலை நீ மாற்றாயாகில் அது உன் சர்வ சக்திக்கும், கருணைத் திறத்திற்கும் குறைவாகுமே!" என்றிரங்கினர்.

இங்ஙனம் இரங்கிய வாதவூரரது பேரிடர் தீர்த்தல் வேண்டுமென்று அடியவர்க்கெளிய சித்தரும் பிறர்களுக்கரிய வித்தகருமாகிய சிவபெருமான் திருவுளங்கொண்டார்.

---

## IV

## பிட்டுக்கு மண் சுமத்தல்

அருளில் மிகுந்த வாதவூரன்பர் படும் இடும்பையுன்னி எம்பெருமான் அழகிய குளிர்ந்த நோக்கோடு "இவ்வந்தணாளர்பால் உற்ற அருந்துயர் அகற்றுக" என்று கங்கையை ஏவினார். கங்கைவெள்ளம் வையை நதியோடு கலந்து கடும்பெருக்கெடுத்துவர, அதனால் வையைப்புனல் கடல்போற்பொங்கி எங்கும் புரண்டது. அலைபால், செழுமைபொருந்திய இருகரையையும் தாக்கி, மரத்திரள்முறித்து, நுரைசிந்தி, மணல் இறைத்து மதவேழம்போல் வந்தவையை, வயல்களின் மேல் பாய்ந்து விழுந்து, கன்னல் செந்நெல் கஞ்சம் செங்கழுநீர் ஆகிய வற்றையெல்லாம் அழித்துவிட்டது. வெள்ளம் பெருகிக் கொண்டேயிருந்ததால் தெங்கின் செங்குரும்பைமீதும் நெடிய நீர்த்திரைகள் வீசி நிமிர்ந்தன. பரிதியின் வெம்மைதிரப் பூதலம் போர்த்த வெண்துகில்போல், காடு சோலை பொய்கை பழனமெலாம் பொங்கிப்பரந்த புதுவெள்ளம் மதுரைமாநகரத்து மதிற்புறமாய்வந்துசூழ்ந்தது. கொடிகள்கட்டிய கோபுரவாயிலையுடைய மதிலை அநேக இடங்களில் இடித்துத்தள்ளி, மதுரை மூதூரையழிப்பதுபோன்று மேலும் மேலும் பொங்கி நிமிர்ந்த வெள்ளத்தைக் கண்ணுற்ற நகரமாந்தர் "ஐயோ! பக்கங்களிலுள்ள இடங்களெல்லாம் வையை நீர் பரந்தது! இனி இங்கே யாம் என் செய்வோம்?" என்று கவலைகொண்டார்.

" மைக்கடுங் களிற்றுத் தானை வழுதியுங் கடிது வந்து
தொக்கபொன் மலரு முத்தும் துகின்மணிப் பூணு நல்கித்
தக்கவண் புவியி லுள்ளோர் தமக்குயி ரென்னு மன்னே!
மிக்கநின் கோப மாறல் வேண்டுமென் றிறைஞ்சி நின்றான்.

அரசனும் விரைவில வந்து, பொனனும் பூவும் முததும துகிலும் மணிப்பூணும் ஆற்றுவெள்ளத்தே யிட்டு, அம்முது நதி மாதாவை நோக்கி "இம்மக்களுக்கு இன்னுயிராகிய அன்னையே! 'வையை என்றும் பொய்யாக்குலக் கொடியே!' உன் வெஞ்சினம் ஆறுதல்வேண்டும்" என்றிறைஞ்சினான். கன்னிநாடன் சொன்ன சொற்களால் முனிவு நீங்காமல் மலை போல அலைகள் மேலும் மேலும் பொங்கிப் பெருகி வந்தன. அரசனும் சிந்தனையில் ஆழ்ந்து தன்பக்கத்தே நின்ற அமைச்சர்களை நோக்கி, "தீது யாம் செய்ததுண்டோ?" என்று வினவினான்.

அமைச்சர்கள் அரசைக் கைதொழுது "ஐயனே! சிவநேசராகிய வாதவூரரது வருத்தம் நீங்கி உள்ளம் மகிழ்ச்சி கொள்ளும்படி செய்வித்தால், வெள்ளம் இவ்வூரை யடித்துக் கொண்டு போகாதென்று நாங்கள் கருதுகிறோம்" என்று ஆலோசித்தறிந்துரைத்தனர். மன்னனும் மனமகிழ்ந்து அவர் முகம் மரபில் நோக்கி அருட்பார்வைசெய்து, "என் உளம் மதித்தவாறே இன்று நீங்கள் இனிதுரைத்தீர்" என்று மொழிந்து வளைப்பினூடு நிற்கும் வாதவூரரைத் தம்முன்னே யழைப்பித்துப் பழையநட்போடு முகமலர்ந்து பேசினான்.

" பாம்பணி செய்ய வேணிப் பரம்பரன் அடியார் கைமேல்
ஆம்பொருள் நமதே யானல் அறம்பிறர்க் காவ துண்டோ?
தேம்படு மலங்கன் மார்பீர்! செயலிதற் குமது மேனி
சாம்புவ தவமே யான்செய் தண்டமே தகவி லாமை"

உற்ற இத்தகைமை முன்னே உணரும் இவ்வுணர்வில் லாமை
குற்றம் இத்தனையு நம்மேற் கொண்டனங் குறைவி லாமல்
மற்றினிப் புகலு மாறென் ? வையைநம் மூர்கொ ளாமல்
நற்றவத் தலைவர் நீரே அடைப்பியு மெனாந வின்றான் ''

வழுதி இவ்வாறு அன்புரை பகர்ந்தபோதும் முன்னந்தழ லென வெகுண்டபோதும் வாதவூரர் வெறுப்பும் விருப்பு மில்லா மெய்ம்மையாளராயிருந்தார் ; இப்பொழுது வையைச் செழும்புனல் மதுராபுரியை அடித்துக்கொண்டு போகாம லிருத்தல்வேண்டும் என்று தம்மையாண்ட திருவடியை நினைத் தார். கொற்ற வெண்பரிமேல் எழுந்தருளிய சுந்தரப் பொன் வடிவம் அவர் மனக்கண்முன் தோன்றியது. அவரும் அத் தோற்றத்தினை யுன்னி ஆகாயத்தை நோக்கி வணங்கினார். அலையெறிந்துகொண்டிருந்த வையை வெள்ளம் அடங்கி உள் வாங்கிச் சென்றது.

பிறவிப் பெருங்கடல் நீந்தி அருட்கரை சேரும் வாதவூ ரண்ணல் வையையாற்றங்கரையில் வந்தார். முறைமுறை வணங்கிய தூதர்களை நோக்கி, '' இந்நதியை விரைவில் அணை செய்து அடைத்தல்வேண்டும். மதுரையில் வதியும் மாந்த ரெல்லாம் ஒல்லையில் வம்மின் என்று பறையறைவித்து நம் மூர்க்கு இவ்வுரை பரப்புங்கள் '' என்றார். தூதர்கள் கடி தின் ஓடி வீதிதோறும் பறையறைவிக்க, மதுரைமக்கள் மண் வெட்டியும் கூடையுங்கொண்டு நதிக்கரைமேல் வந்து நின்ற னர். வாதவூரர் நியமித்த அதிகாரங்கொண்டு இடங்கள்தோறும் தூதர்கள் விரைந்துசென்று எவர்க்கும் அளவுகோலால் வேறு வேறளந்துவிட்டுக் கையிலே மாறுகொண்டு உறுக்கி வையை நதிக்கரையை அடைக்கத் தொடங்கினார்கள்.

"கண்பெறு கழையின் முத்தும் கடகரி மருப்பின் முத்தும்
வெண்பணி லத்தின் முத்தும் மேதகு கரும்பின் முத்தும்
வண்புனல் திரைகள் வீச வரையெனக் குவைகள் செய்து
பண்படப் பொருந்த நீருள் பதித்துயர் வரம்பு செய்வார்,

பரித்திரள் நிறுத்தும் என்பார் பாம்புகள் உருட்டும் என்பார்
திரைப்புனல் மிகுத்த தென்பார் தேவர்கட் கபய மென்பார்
நிரைப்படு மகிலோ டாரம் அவரவர் ஒதுக்கி நீடு
வரைப்பிடைக் குவித்து நிற்பா ராயினர் மதுரையுள்ளார்"

மூங்கிலில் பிறந்த முத்துக்களையும் யானைக்கொம்பில் பிறந்த முத்துக்களையும் வெண்சங்கின் முத்துக்களையும் கரும்பின் முத்துக்களையும் அகிற்கட்டை சந்தனக்கட்டைகளையும் அலைகள் அடித்துக்கொண்டுவந்து ஒதுக்க, அவைகளைக்குவித்து நீரிலே பதியத்தள்ளி வரம்புசெய்வார்! குதிரைப்பாய்ச்சலாக மரங்களை நிறுத்துமென்பார்! வைக்கோலால் செய்யும் பாம்புகளை உருட்டித் தள்ளுமென்பார்! அந்தோ! அலை அதிகரித்துளதே என்பார்! பெண்களையும் பிள்ளைகளையும் எங்களுயிரையும் காத்தருள்குமின், தெய்வங்களே! யென்பார்! புதுவெள்ளம் மிகுந்த வையைநதியினை இவர்கள் இவ்வகை அணைசெய்ய முயன்றுழைப்பாராயினர்.

ஆனால் அங்கே ஓரிடத்தில் ஒரு பிட்டுவாணிச்சிக்கு அளவு செய்து நீக்கிய பங்கு அடைக்கப்படாமலிருந்தது. இவள் செம்மனச்செல்வியென்னும் பெயரையுடைய நரை மூதாட்டி; சிவபெருமானிடத்தில் அன்பு நிறைந்தவள்; பிட்டு விற்றுண்ணும் இவளது மனத்தவம், போனகந்துறந்து கானகம்புகுந்து முனிவர்செய்யுங் கடுந்தவத்தினும் சிறந்திருந்தது.

வையைக் கரையெல்லாம் அடைக்கும்போது இவ்வம்மையாரது பங்குமாத்திரம் அடைக்கப்பெறாமலிருந்ததைக் கண்ட

இராஜசேவகர்கள், கொடுமையோடு சென்று சிவபெருமான் பால் அன்பிழைத்த செம்மனச்செல்வியாருக்குத் துன் பிழைத்து வருத்தமுறச்செய்தார்கள்.

அம்மையார் அஞ்சி "இவ்விடத்திலே எனக்குறுதி யாவார் யாவரோ? பிட்டினைக் கூலியாகக்கொண்டு என்பங்கினை அடைத்துத் தருவார் யாவரோ?" என்றிரங்கி ஏங்கினர். சொக்கநாயகரது கோயிலெய்தி, மார்பிலே கண்ணீரொழுக எம் பெருமான் திருவடிகளையிறைஞ்சினர்; "அம்மையப்பனாகிய ஆதிதேவனே! செஞ்சடை பொலியும் யோகீசனே! உன் கண் ணருள் கொண்டு எப்பொழுதும் பிட்டுவிற்றுண்ணும் ஏழை யேனுக்கும் இப்பேரிடும்பையுண்டோ? என்னை யடிமையாக வுடைய இறைவனே! இனியாரொடு புகல்வேன்? யாரொடு நோவேன்? வையைநன்னீர் உடைத்துக்கொண்டு போகாமல் அடைக்கும்படி இன்று சிறிது அருள்புரிதல்வேண்டும். அருளா யேல் அடியவர்க்கெளியவன், கர்த்தன் என்று பலரும் பேசு கின்ற சொல் பழுதாகுமே!" என்று அழுதாள்.

பின்னும் புலம்புவாள் :—

"ஐயனே! எனக்குத் தாயுமில்லை, தந்தையுமில்லை, உற்று ரில்லை, நண்பரில்லை, வறுமையோடு தோழமையுண்டு. அலகை போல் அலைந்து திரியும் தமியேனை உயிரோடு சுடுகின்றது இவ் வெந்துயரம். சிந்தையில் எரியும் இத்தீயினை யவித்து, நீ அருளாயாயின், உயிர் நீப்பேன். 'எளியேன் மற்றென்செய் வேன்? இன்று எனக்குறுதியாகி நான் கொடுக்கும் பிட்டினை வாங்கிக்கொண்டு ஆற்றின்கரை யடைக்கும் வலிமையுள்ள கூலியாள் கிடைக்கவில்லையே!" என்று கதறினள்.

"இன்றெனக் குறுதி யாகி யானிடும் பிட்டு வாங்கி
வன்றிறற் கூலி யானாய் வன்கரை யடைப்பா ரில்லை

உன்றனக் கபய மென்று உரைப்பவள் தன்மே லன்பு
சென்றவட்கு ஆளா மாறு துணிந்தனர் தேவ தேவர்.''

அபயம் உனக்கு! அபயம்! என்று அவ்வேழையழுத கண்ணீர், ஏழைபங்காளனாகிய இறைவன்முன், அவளது கள்ளங்கவடற்ற குழந்தையுளத்திற்குச் சான்று பகர்ந்தது. 'நமக்கு ஆளாகிய இப் பிட்டுவாணிச்சிக்கு நாமே இன்று கூலியாளாவோம்' என்று தேவதேவரும் அடியார்க்கடியவரு மாகிய சிவபெருமான் துணிவுகொண்டார். அன்பர் வேண்டிய வடிவந்தாங்கி வந்தருள்புரியும் அகிலலோகநாயகன் உடுக்க நல்லுடையின்றி, உருவழிந்து துண்டு துண்டாகக்கிழிந்து தொங்கிய கந்தைசுற்றிய கூலியாளாகி, மண்வெட்டி தொங்கும் தோளும் கூடைசுமந்த தலையுமாய், 'மறைகளை மறைந்தொளிரும்' தமது திருவடி சிவக்க மதுரைமாநகரின் வீதிகளிலே நடந்துவந்தார். இங்ஙனம் வேலையாளாக வேடம்பூண்டு, பெரும் பசியுடையவர்போல ஆபாசப்பட்டுக்கொண்டு வந்த இறைவனைத் தன்பங்கை அடைத்தற்கு ஆளில்லாமையால் துன் பங்கொண்டு வருந்திய பிட்டுவாணிச்சியம்மை கண்டனள்.

கூலியாளாகிய சிவபெருமான், கோயில்வாயிலிலே வந்து நின்று "இங்கே என்னை ஏவல்கொள்வாருண்டோ?" என்று புகன்றார். கண்ணும் கருத்தும் கசிந்துருகி இறைவன் சந்நிதி யிலே குறையிரந்து முறையிட்டுக்கொண்டிருந்த அம்மை யாரை நோக்கி மனமகிழ்ந்தார். அவ்வம்மையும் கூலியாள் கூறிய நன்மொழி கேட்டு, அயர்வும் சிந்தனையும் ஒழிந்து, "கும்பிடப்போன தெய்வம் குறுகி வந்தது. நன்று, நன்று," எனக் குளிர்ந்தாள்.

" புடையின்மே லுலகோ ரின்றிப் புனைந்துள புலித்தோ லாடை
உடையின்மே லசைக்குங் கச்சாய் ஒங்குநச் சுரக மின்றிச்

சடையின்மேல் மதிய மின்றித் தாங்கிய மழுமா னின்றி
விடையின்மே லின் றிநின்ற வெளியனை வெளியில் கண்டாள்''

புடைசூழ்ந்து தொழுதுவரும் விண்ணவ ரின்றித் தமியனாய் வந்த இறைவன் தான் புனைந்துள்ள புலித்தோலாடையையும் அதன்மேல் கச்சாகச் சூழவிட்ட பாம்பினையும் போக்கி, ஏழைபோல் கந்தைசுற்றி வெண்மதியமணிந்த செஞ்சடையினைக் கூடையால் மறைத்து, மழுமான் தாங்குந் திருக்கரத்தால் மண்வெட்டியைப்பிடித்துக்கொண்டு விடையின்மேலின்றி மண்ணிலே கால் தோயநின்றார். ஞானவெளியிலே ஆநந்த நிருத்தமிடும் ஆண்டவன் வெளிப்பட்டு, அன்பிலும் ஆண்டிலும் முற்றமூத்திருந்த, பிட்டுவாணிச்சியை ஆட்கொள்ளும் வண்ணம் ஓர் கூலியாளாகி ஆலயவாயிலின் வெளியிலே நின்றருளினார்.

கூலியாளைக்கண்ட அம்மையார் அவரை யணுகி ''மகனே! நீ எனக்கு இங்கு ஆளாய் வருக'' என்று வேண்டினாள்.

கூலியாள்:— முன்னர்க்கூலி கொடுத்தால் வருவேன்.

அம்மையார்:— இப்பொழுது சாப்பிடுவதற்குத் தேவாமிர்தம்போலுமினிய இப்பிட்டு அளிப்பேன்; அல்லது இப்பிட்டினை அந்திவேளையில் விற்று உன் கூலியைக் கொடுப்பேன்.

கூலியாள்:—தாயே! பசி கடும்பசியாயிருக்கிறது. இனிய பிட்டைக் கொடுப்பாயானால் உன் பங்கு முழுதும் நானே அடைப்பேன்.

வாணிச்சி தன் கருந்துகிலிலேயிருந்த பிட்டினைக் கையினால் அள்ளி இதனை விருப்பங்கொண்டு இங்கே நின்று பசி தீர்வாய்'' என்று பேரவாவோடு கொடுத்தாள்.

சிவபெருமானும் தமது குறுந்துண்டாகிய கரியகந்தையை யேற்று இட்டபிட்டினை வாங்கி இன்புற அமுதுசெய்தார்.

"தாயே மாற்றரும் பசிநோயை மாற்றினை. இனி நான் வைகை யாற்றுக்குப்போய் உன் பங்குக்குண்டான கரையை அடைப் பேன்" என்று பிட்டு வாணிச்சியை நோக்கி மொழிந்தார். "அன்னையே! நன்று நன்று, இன்னும் நயந்து பிட்டளித்தல்வேண்டும்" என்று சொல்லித் தமது துண்டுக்கந்தையையேற்று அது நிறைய வாங்கித்தின்றுகொண்டே அம்மையாருடன் வைகை நதிக்கரையிலே வந்தார். வந்து "அம்மே! உன் பங்கைக் காட்டு" என்றார் சொக்கநாதர்.

பிட்டுவாணிச்சியம்மை, அக்கூலியாளை நோக்கி, "தம்பி! இவ்விசாலமானகரையை நீவிரைவிலே அடைப்பாயாக" என்ன, அவரும் அப்பங்கு நிலத்தை அடைக்கலுற்றார்.

மண்ணைவெட்டுவார், கூடையிலேயிடுவார், பிறை மறைந்த முடிமேல் சும்மாடு கோலிவைப்பார், சுமந்துசென்று வைகை நதிக்கரையிலே சொரிந்து திரும்புவார், மேனியிளைப்பார் போல வேர்வையடைவார், பிட்டினை மென்றுமென்று நாவில் சுவைத்துப் பார்த்துக்கொண்டே அப்பிட்டு வாணிச்சிமேல் பரிந்து அருட்பார்வை செய்வார். பிட்டு நன்றாயிருக்கிறது, சபாசென்று தலையசைப்பார். வேடர் வேந்தனாகிய கண்ணப்பன் படைத்த தீஞ்சுவை யூனிலும் இறைவனுக்கு இப்பிட்டு மிகவும் இனிமையுள்ளதாகு மென்பார். மண்வெட்டியுடன் கவித்த கூடைகொண்டு கூத்தாடுவார்; மீண்டும் வெட்டி மண்ணைக் குவிப்பார். குவித்த மண்ணைக் கூடையில் பெய்யாமலே அங்கு மிங்கும் ஓடியாடுவார். விரைந்து காலினாலேதாண்டிப் புலி போலப் பாய்ந்து மீள்வார். கூலியாளாகவந்த சொக்கநாதர் செய்திகண்டு பரிவுகலந்த மனத்தினளாகிய பிட்டுவாணிச்சியும் கரையடைத்தல் வேண்டுமென்று தன் காரியத்தைச் சொல்லா

தவளாய், 'வழுதி தூதர் காண்பரேல் உறுகண்செய்வரே! வினையுடையேன் என்செய்வேன்?' என்று கரைந்தாள். இவள் நிலைமைகண்டிரங்கிய கூலிக்காரர் கூடையில் மண்கொண்டு கரைமேலேற்றி "அன்னே! இக்கரையை இப்பொழுதே விரைவில் அடைப்பேன். சற்றும் இதற்கு இரங்காது உன் வீட்டுக்குப்போ" என்றார். பிட்டுவாணிச்சி தோல்திரைந்த முகத்தில் சிந்தனைமாற்றித் தன் பழமனையில் புகுந்தாள். அப்பொழுது அவளுடைய பங்கைச் சுவாமியடைக்க அஞ்சினவள்போல மாறிவரும் அலைக்கையால் வணங்கினாள் வையைமாது.

"சிறந்தமண் கூடை வேணித் திருமுடிக் கொட்டை யாக
நிறங்கிளர் கொன்றை நீழல் நிறைமணல் அணைய தாக
வுறுந்தொழின் முயற்சி யாலே உயங்கிமெய் யிளைத்தார் போல
மறைந்துல கெங்கு மான வள்ளலார் பள்ளி கொண்டார்"

மண்ணெடுக்கும் கூடையே திருமுடிக்குத் தலையணையாகவும் கொன்றைமர நீழலின்மேல் நிறைந்திருந்த மணலே மெத்தையாகவும், மிகுந்த தொழில்செய்து வருந்தி யிளைத்தவர்போல, உலகமெலாம் ஒருயிராக நின்று ஞானவெளியில் நிருத்தமிடும் வள்ளலார் பள்ளிகொண்டருளினர். இங்ஙனம் இவர் துயிலும்போது பேரின்பப்பெருவாழ்வில் ஓங்கிய வாதவூரர், கருமமே கண்ணாக உழைப்பாராகிக் கையில் பிரம்புதாங்கி நின்றார். பக்கத்திலேநின்றவர்களை நாடி அவரவருக்கு அளந்துகொடுத்த பங்கிலுள்ள குறைகளையுணர்வீரென்று கட்டளையிட்டார். அப்படியே அவர்கள் வையைநதிக்கரையின்மேற் போனார்கள்; எல்லாரும் அவரவர் பங்கை நன்றாய் அடைத்தார்களென நயந்து, கூலியாளராகிய சொக்கநாயகர் அடைக்கும் நெடுங்கரையையெய்தினர். "எவ்விடமும் உயர்ந்திருக்க இவ்விடம் மாத்திரம்

தாழ்ந்திருக்கின்றது. இதுயார்க்கு வந்தபங்கு?" என்று பாங்கு நின்றவர்களை வினவுவாராயினர். அவர்கள் சொன்னார்கள்:—

" இக்கூடல்மாநகரிலே பிட்டுவிற்றுச் சீவனஞ்செய்பவளாகிய ஒரு கிழவியிருக்கின்றாள். அவளுக்காளாய் ஒருவன் இங்கே வந்து, மண்ணைவெட்டிக்கூடையிலே சொரிந்து இரங்கி நிற்பான், தலைமிசைவெடுப்பான், ஓடுவான், திரும்புவான், மண்ணைச்சிந்துவான், சிரிப்பான், பாடுவான், ஆடுவான், போவென்றால் வருவான், வாவென்றால் போவான், பிட்டுநுகர்ந்துகை கொட்டுவான்; இப்பொழுது நெடுந்துயில் கொள்கின்றான், காண்மின் " என்றார்.

என்றலும் 'அவனை இங்கே கொண்டுவாருங்கள்', என்று இராஜசேவகருள் திறலோன் ஒருவன் உத்தரவு செய்தான். இப்பணி தலையேற்று மிலேச்சனொருவன் விரைவிலோடினன். அப்பொழுது இறைவன் அறிதுயில் நீங்கித் துண்ணென விழித்துக்கொண்டார். ஓடிவந்த மிலேச்சன், அவரை வெருவநோக்கி, 'எசமானிடத்துக்கு வா!' என்று கூவினன். கூலியாள் வருதல் செய்யாது, அஞ்சி நின்றிரங்குவது கண்டு பழித்து, அவன் பரிவின்றி அவருடைய செங்கைபற்றி யீர்த்தனன்.

கூலியாளராகவந்த கடவுளை மொழிக்கனல் சிந்தச் சீறி, அம்மிலேச்சன் கடிதில் தள்ளிக்கொண்டு வந்து சேர்ந்தான். இராஜ சேவகன் கனல்சிந்த விழித்தான்; அருகே நின்ற ஒருவனை யழைத்தான். பாவியைப் பாவிபார்த்து "இங்கே இக்கூலியாளைப் பச்சிரத்தம் ஒழுக மொத்துவாயாக?" என்று உறுமினன். கடுத்த சொல்லால் கூலியாளைக் கூவிக் கோபத்துடன் கொடியவனும் பிரம்பினைக் கையிலே எடுத்தான். ஆகாய வீதியிலே கட்புலனாகாது நின்ற விண்ணோரும் முனிவ

ரும் கூலியாள் நின்ற திசைநோக்கிக் கையை யெடுத்துத் தொழுதனர். கொடியவன் ஓங்கி யடிக்கலுற்றான். என்ன ஆச்சரியம்! அடித்தபொழுது அங்கிருந்தவர்களெல்லாரும் திடுக்கிடும்படி அக்கூலியாளர் மறைந்துவிட்டார்.

“ அடித்தனன் அடித்த போதில் அன்புடை அரிவை பாகங்
கொடுத்திலர் துணுக்க மெய்த மறைந்தனர் குறைவி லாதார் ”

‘ பார்க்குமிடம் எங்கணும் நீக்கமற நிறைகின்ற ’ பரம்பொருளன்றோ, இறைவன்! எனவே அடித்த அடி எல்லா உயிர்கள் மீதும் பட்டது; அரசன்மேலும் அமைச்சர்மேலும் பட்டது; பார்மேலும் கடல்மேலும் பட்டது; பகல்மேலும் மதிமேலும் பட்டது; அயன்மேலும் அரிமேலும் அமரர்மேலும் பட்டது.

நான்முகனும் திருமாலும் தேடி, அந்தமும் ஆதியும் தெரிதற்கு அரிதாகி நிமிர்ந்த திருமேனிமீது அடிபட்ட பொழுதிலே எவ்வுலகங்களில் இருந்தவர்களும் எம்முடலில் அடிவிழுந்ததென்று ஏககாலத்தில் கதறினார்கள். அச்சொற்கள் யுகாந்த காலத்திலே எழுந்து முழங்கும் கடல் முழக்கத்தை ஒத்தன. மாயை எனும் கரும்பெரும்புனல்மேல் குமிழியிட்டுத்தோன்றும் எண்ணிலா அண்டங்களினூடு உயிர்க்குயிராக நிற்கும் தன்மை இறைவன் தன்மையன்றோ! இங்ஙனம் உலகெலாம் உணர்ந்து ஓதற்கரியபெருமான் நிலவுலகிலே அறியாமையெனும் ஆரிருட் கங்குலில் மயங்கியுழலும் சிற்றறிவினரும் அறிந்து தம் அடிமலரை வணங்கி உய்யும் வண்ணம், ஓர் கூலியாளாகி மண் சுமந்து மொத்துண்டார்! இவ்வெளிய திருமேனியிலே பட்ட அடி எல்லா உலகின் மேலும் உயிர்கள் மேலும் பட்டு, வாதவூரரது மேனியிலும் வந்துபட்டது. அவர் உடனே அயர்வெய்தி ‘அடியேன் உய்யும்படி ஆட்கொள்ள உகந்த சொக்கநாதரே ஒருவர்க்குக் கூலியாளராக எழுந்தருளினரோ ?” என்று தமக்குள்ளே

மிகவும் நொந்துகொண்டார். தம்பெருமைதாமறியாத் தம்மிறை வருக்காக இரங்கினர். இரங்கி நடுங்கிக் கண்ணீர் பெருக்கிக் கவன்றபொழுதில், வாதவூரர்முன் தூதர்கள் விரைந்தோடி வந்து இறைவனுடைய திருவிளையாட்டெல்லாம் இனிதுரைத்தார்கள். தூதர் கூறிய விவரங்களைக்கேட்ட வாதவூரர் காதலால் உருகி மனந்தளர்ந்தார். விழிப்புனல்பொங்க அவர்களைநோக்கி, "செஞ்சடையண்ணல் நமக்காக மண் சுமந்த 'இடத்தைக் காண்பியுங்கள்" என்று வேண்டினர். தூதர்களும் அவரையழைத்துக் கொண்டு நேராக அவ்விடத்தை விரைவில் எய்தினர்.

"அழுங்கியருந் பெருநரகில் அடியேனும் வீழாமல்
எழுந்தருளும் பெரியோனே! எங்கணுளா யென்றென்று
தொழுங்கரமுங் கண்ணீரும் துளங்கியமெய்ப் புளகமுமாய்
விழுந்துபுரண் டிவ்வாறு புலம்பினர்மெய் யன்பாளர்

'பொன்னுலகத் துள்ளோரும் புரந்தரனுந் திருமாலும்
மன்னுமறைக் குரியோனும் வழியடிமைத் தொழில்செய்ய
அன்னோதனக் காளாகி அணிவையை அடைத் தடியுண்
டென்னையருட் பணிகொள்ள இசைந்தனையோ இறையோனே.

கட்டும்அரைத் துணிச்சீரைக் கச்சையும்அத் திருத்தோளில்
கொட்டும்முடித் தலைமீது கவித்ததொரு கூடையுமாய்ப்
பிட்டிடுநற் றவமுடையாள் பின்புவருந் திருக்கோலம்
இட்டமுறத் தொழும்படிநான் கண்டிலேன் இறையோனே.

பொன் மௌலித் தலைமீது புண்ணியர்மண் சுமந்தேறும்
கொன்மலியும் கோலறையும் குளிர்வையைப் போராறும்
கன்மமெனப் பகைபோகக் கண்ணுதல்வெம் பரியேறுங்
தென்மதுரை மூதூரும் அல்லவோ சிவலோகம்? "

அன்பு வடிவாகிய வாதவூரர் இவ்வகையிரங்கி நின்றனர். ஒன்றன்பின் ஒன்றாகநெருங்கிய பேரலைகளோடு பொங்கிப் புரண்ட

வையைவெள்ளமும் விரைவில்வடிந்தது. இவையெலாம் சிவன் செயல் என்று தென்னவனும் தெளிந்தான். மதுரைமன்னன் வாதவூர்மன்னர்பால் வந்து வணங்கினன்.

"ஐயரே! வாதவூரண்ணலே! அந்தரத்தினின்றிழிந்து, இறையருள் சூடிய ஆமாத்தியர் குலத்திலே வந்தருளி அடியேனுக்கு அமைச்சனாக ஒருப்பட்டீர். எந்தையாகிய சொக்கநாதர் குதிரையேறிவருவதை எனக்குக்காட்டி ஒழியாத பாசத்தினை ஒழியும்படி திருவுளம்பற்றினீர். என் பிறவி மாளத் திருமேனி கொண்டு காட்டினரென்று உணராமல் மாயச்சூழலினால் தேவதேவர்க்கு அழுக்காடையளித்தேன். என்ன பிழை செய்தேன்! செஞ்சடையண்ணலை அரும்பரிமேல் ஆளாக்கும் உண்மைப் பொருளென்று உணராமல், வெய்ய வினைப்பொருள்வேண்டிக் கொடுமை செய்வித்தேன். சிறியேன் செய்த பெரும்பிழைகளைப் பொறுத்தருள்வீர். சொக்கநாதர் பரியேறிப் பூநாறும் செஞ்சடைமேல் மண் சுமந்த புகழ்போதாதோ? நற்றவப்பெரியீர்! அடியேன் நாள்தோறும் உம்முடைய குற்றேவல் செய்துவர, நீர்கருணை கூர்ந்து இச்செந்தமிழ் உலகினை ஆளவேண்டும்', என்று வேண்டிக்கொண்டான்.

வாதவூரர் கூறுவார்:— "அரசே! என்னையாளுடைய ஐயன் எழுந்தருளியிருக்கின்ற திருப்பெருந்துறைக்கு இன்று என்னை அனுப்பிவிடுவதே எனக்கு இவ்வுலகத்தை ஆளும்படி அளிக்கும் பெருஞ்செல்வமாகும்" என்றார். தென்னவன் தானும் சிந்தை நொந்து 'சிவனடியாருக்கு அரசர் வாழ்வில் ஆசையுண்டோ?' என்று சொல்லி வாதவூரர் மெல்லடிகளில் இறைஞ்சி "ஐயரே! திருமனத்திற்கு உகந்தவாறு செய்தருள்க" என்று செலவுகொடுத்துத் தன் கூடல்மூதூரில் புகுந்தனன்.

தானையோடு தமிழ்மாறன் சென்றபின் அருட்பெருஞ் சோதியாகிய இறைவனது பேரின்பப் பெருவாழ்வை விரும்பிய வாதவூரர் அரசனுக்காகக் கொண்டிருந்த லௌகிக வேடத்தைக் குறைவென்று களைந்து, சிவனடியாருகந்துகொள்ளும் நற்றவக் கோலங்கொண்டார்.

ஆலவாயண்ணலை அடிதொழுது, மேகந்தவழும் சோலை சூழ்ந்த மதுரையம்பதியை நீங்கி, வாதவூரர்தம்மையாண்ட குருமூர்த்தியின் திருமேனிகண்டு வணங்கவேண்டுமென்று பித்தங்கொண்டவராய், திருப்பெருந்துறையை நோக்கிவிரைந்துசென்றார். மனோவேகமும் வாயுவேகமுங்கொண்டு கன்றைநாடுங் கபிலைப் பசுவும், ததும்பி நின்று மடையினை உடைக்கும் நீரும் ஒத்து, காடும் பதியுங் கடந்து திருப்பெருந்துறையில் எய்தினர். புண்ணிய இனத்தார்சூழ, முன்புபோலிருந்த இறைவனுடைய பொன்மலரடிகளில் வீழ்ந்து வணங்கினர்.

வாதவூரரை முடிமேற் செங்கைவைத்து இனியகூறி 'எழுக' என்று இறைவன் பணித்தார். எழுந்தபின்னர், நீறு புனைந்து ஞானம் நிறைந்த அருட்பார்வை நல்கினர். பின்னர் அடியவர்களை நோக்கி "வந்துள கருமமெல்லாம் முடித்தனம். நமது ஒளியுருவங் காணவேண்டுமென்று கயிலையுள்ளார் சிந்தனை செய்கின்றார். விரைவில் அவ்விடம் நாம் சேரல்வேண்டும்" என்றருளினர். இவ்வாறு அருளி, "நீங்கள் இங்கே இன்பமுடன் வாழ்ந்திருங்கள். யாம் ஏகுவோம்" என்று சொல்லவே, அடியவர்கள் அருளுருவாகிய குருநாதனைச் சூழ்ந்துகொண்டு பிரிவாற்றாது தோத்திரம் பல சொல்லித் தாழ்ந்து எதிரிறைஞ்சி "ஐய! இனி யாங்கள் தரிப்பது அருமை" என்று வேரற்ற மரம்போல மண்மிசை வீழ்ந்தயர்ந்தனர். மீண்டும் மீண்டும், 'எம்மைவிடுதியோ'

என்று நொந்து நொந்து ஏங்கியழுவாராயினர். இங்ஙனம் பரிந்தழும் அடியார்மேல் பரமனும் அன்பு பூண்டு "வருந்துவது ஒழிமின்! இக்குருந்த நீழலில் தெய்வபீடமொன்று பொலிவொடு குயிற்றி, அதன் மேல் மறையும் தேடுகின்ற நம் திருவடிகளைச்செய்து, அன்பினால், நாடோறும் இறைஞ்சியிருங்கள். அப்படியிருக்கு நாளில் ஒரு நாள் இப்பொய்கையினூடே செழுந்தழல் விளைந்துதோன்றும். அப்பொழுது யாவரும் தடாகத்திலேவிழுந்து நம்பால் எய்துதல் வேண்டும். கவலையை விடுங்கள்" என்று அருளிச்செய்தார்.

இறைவன் கயிலையைநாடி எழுந்தருளினர். அன்பர்களும் பிரியமனம்பொறாது பின்சென்றனர். இங்ஙனம் அன்பர் தொடர மெல்லச்சென்ற இறைவன் 'நில்லுமின்' என்று நீங்கரும் அன்பர்க்கெல்லாம் ஆணைதந்தனர். அங்கே அன்னார் இறைஞ்சி "இனி எந்நாளிலே உம்மைக்காண்பது?" என்று தாங்குதற்கரிய மயக்கமெய்தித் தாயை நீங்கிய சேய்கள்போலக் கலங்கி நின்றார்.

மாயையிலேவல்ல இறைவன் எழுந்தருளினர். அடியார்கள், பணிமொழிகடவாதவராய் நின்ற இடத்திலேயே நின்றனர். அவர்கள் நின்ற பின்னும், செந்தமிழும் தென்னாடும் வாழ வந்த வாதவூரர், இறைவனுக்குப்பின்னே தொடர்ந்து சென்றார்.

இவர் வரவு கண்ட இறைவனும் ஓர் கொன்றை மர நீழலிலே காத்திருந்தார். பக்கத்திலே பல கிளைகள் தாங்கி வரிசை வரிசையாகப் பொன் மாலை கொண்டு பொலிவது போல அக்கொன்றை மரம் பூங்கொத்துக்கள் சுமந்து நிமிர்ந்தது. அம்மர நீழலில் இறைவன் பொலிவுற இருந்தபோதில், அவரது மெல்லடிகளில் வாதவூரர் கண்ணீர் விழவிழத்

தொழுது நின்றார். இப் பேரன்பரைப் பரிவினால் இறைவன் பக்கத்திலே வைத்துக்கொண்டு அருளிச் செய்வார்:— " மனக்கோட்டமில்லார்க்கு அருள்தரவேண்டி நாம் முன்னே அமர்ந்த திவ்விய ஸ்தலமாவது குருந்தநீழல். எவ்வுலகிலும் எங்கும் உள்ளே மாயினும் இங்குள்ளோர்களது தீவினையகற்றி ஆளவேண்டி இத்தலத்திலே யாம் வதிவோம் என்று அறிவா யாக. சுழுமுனை நாடி யூடு புலம்பும் இலைசக்குறியாகிய மங்கள சங்கவாத்தியமல்லால், மற்ற வாத்தியங்களெல்லாம் இத்தலத் திலே எமக்கு ஆகா. ஏனெனில் ஓசையடங்கிய இடமாத லாலும், எமது பாகங்கொண்ட செல்விகாண நடம்புரியும் இடமாகையினாலும் இவ்வாறு நிகழ்தல் வேண்டும் என்பது எமது விருப்பம். இன்னவாறு உணர்ந்து குருந்த நீழலிலே தபோதனர் திருக்கூட்டத்தில் நீயும் நம் கழலிற் சேவைசெய்து வதிவாயாக. மடுவில் கனலெழுகின்ற காலத்து யாவரும் அதிற் போய் விழும்பொழுது, நீ உடன்வீழாமல் இவ்விடத்தை விரைவில் நீங்கி யகல்வாயாக. அகன்று உத்தரகோச மங்கை யெனும் தலம் சென்று அட்டமாசித்திகளையுமடைந்து, தெய் விக இலிங்கவடிவமுள்ள நம் திருப்பதிகளிலே இவை இவை வணங்கில், அங்கே இவ்வடிவினையே காட்டுவோம். பின்னர் நீ திருக்கழுக்குன்றை நெடும்பதியிறைஞ்சி ஆண்டு நின்று இங்கேபோந்து சிதம்பரமெய்தி, புத்தரை வாதில் வெல்வாயாக. பின்னர் எமது பெரும்பதம் பெறுவாய் " என்றார்.

---

## V

## வாதவூரர் பொன்னம்பலத்தில் வைகுதல்.

தமக்கு வரங்கொடுக்க விருந்த இறைவனை, வாதவூரிறை வர் போற்றி " எம்பெருமானே ! திருப்பெருந்துறையி லல்லா

மல், சிதம்பரத்தில் பொருந்துதல் பரமுத்தியென்று புகன் றருளியது என்ன?" என்று விண்ணப்பம் செய்தார். திருந் திய தவத்தையுடைய வாதவூரரை நோக்கிச் சிவபெருமான் செப்பலுற்றார். "புழு, தன்னை எடுத்துள்ள இடத்திலன்றி, வைத்தவிடத்திலன்றோ குளவிவடிவங்கொள்ளும்? அவ்வண் ணமே உன்னைக் கண்ட இத்தலத்திலே, அன்பினால் மெய் யுணர்வினை உபதேசம் செய்தோம். மேன்மை பொருந்திய சிவானுபூதியாகிய விடுதலை, புலியூர் மன்றமாகிய சிதம்பரத்தில் உண்டாம். விசாலமாகிய உடம்பிலே மூலாதாரத்தினின்றும் எழுந்த சுழுமுனை நாடியுடன் நிறைந்த ஒளியாய் அவ்வொளி யிலே ஐந்தெழுத்தும் ஒன்றுபட்டு நெருங்குமுழவோசையாய், அவ்வோசை நீங்கி அடங்கிய இடமே நான் என்றும் ஆடும் அம்பலமாகும். இவ்வம்பலமே சிதம்பரம். மண், நீர், தீ, காற்று, ஆகாயம், என்னும், ஐம்பெரும்பூதங்களும், இடை, பிங்கலை, சுழுமுனை என்னும் மூன்று நாடிகளும், அக்கினிமண்டலம், ஆதித்தமண்டலம், சந்திரமண்டலம், என்னும் மூன்று மண்ட லங்களும் ஆகி, நிலைபெற்ற புணர்ப்பினால், பிண்டமும், அண்ட முமாகும். பிரமா விட்டுணு, உருத்திரன், மாகேசுரன், சதா சிவன், என்னும் ஐந்து வடிவமாகக்கண்டவர்கள், நின்றவாறும் இவ்விரண்டுவிதத்திலும் காணலாகும். ஆதலால், இவ்வண்டத் தில் அறிதற்கரிய பொருளாகி என்றும் *தீதிலா மூலத்தை நாடிப்பார்த்தால், சிவலிங்கமேனியாக, அது ஒளிரும். மேலா கிய நாதவெளியின்மேல் ஒளியாயிருக்கும் மன்றம் ஒன்றுண்டு. அங்கே காதலால் உமாதேவியார் காணக் கருத்துற நிருத்தஞ் செய்வோம். அந்நடனம் ஏதென்னில் படைப்பு முதலிய ஐந்தொழில் நடத்துதலாகும். பாசத்தளைபை யறுக்கின்ற இப்படிவமும் அதுவே. உலகத்திலே யிருக்கின்றவர்

யாவர் வந்து தரிசித்தாலும், பரமுத்தி கொடுத்து அருளளிக்கும் தெய்வத்தலமும் அச்சிதம்பரமேயாம். திருமாலும் பிரமதேவரும் புலிபாம்பென்னும் பதஞ்சலி வியாக்கிரபாதரும் தில்லைமூவாயிரவரும், முனிவரும் அமரரும் போற்றும் எல்லையுடையது தில்லைமூதூர். இவைகளையெல்லாம் தெளிந்து கொள்வாய்'' என்றுகூறி, எதிர் வணங்கி நின்ற வாதவூரர் நெற்றியில் நீறுசாத்தி 'ஈண்டு நில்' என்று விரைவிலகன்றார். வாதவூரரோ, நில்லாமல் சிறிது தூரம் பின்றொடர்ந்து சென்றார். பின்னும் இவர் தன்மை கண்டு இறைவன் நின்று கண்ணருள்செய்து வாதவூரர்காணும்படி, திடீரென்று மறைந்தார்.

இதனைக்கண்ட வாதவூரர் துண்ணென இரக்கமெய்தித் தொழுது நின்றார். பின்னர் இவர் கை தலைமேற் கொண்டு அடியவர் கூட்டம் நணுகினர். அருந்தவமகலா நெஞ்சினரான அடியார்களும் தாமும் குருந்த நிழலின் கீழே, ஓர் தெய்வபீடம் செய்து அதன் மீது 'வரந்தருவாரியன்னமலரடி' வகுத்து இறைஞ்சியிருந்தனர். இருந்த நாளிலே ஒருநாள்.

''வெண்பிறை முடித்த வேணி
விண்ணவன் அன்பிலாத
பண்பினர் என்னுந் தன்னைப்
பாடினர்க் கிரங்கு மென்றே
யெண்பெறு நமச்சி வாய
வாழ்கவென் றெடுத்து நாதன்
வண்பதம் புகழ்ந்து ஞான
வாசகம் புகல லுற்றார்.''

அன்பிலாத பண்பரேயெனினும் தன்னைப் பாடினவர்க்கு இறைவன் இரங்குவாரென்று கருதி வாதவூரர் 'நமச்சிவாய வாழ்க'

என்று எடுத்து, நாதன்தாள் வாழ்த்தி ஞானவாசகமாகிய திருவாசகம் சொல்லத்தொடங்கினர். சொற்பதங்கடந்து நின்ற சோதிவந்து அருள் நல்கும் அற்புதமறியேனே என்று அற்புதப்பத்து அருளினர். பின்னர் அதிசயங்கண்டோமென்று அதிசயப்பத்தும் 'கடவுளே என்னை மனங்குழைத்தனை' என்று குழைத்தபத்தும் 'சிற்பரனாகிய சிவபெருமான் அடிமலர் சென்னியில் மன்னும்'என்று சேன்னிப்பத்தும் 'ஐயனே, நின்னைக்காண ஆசைப்பட்டேன்' என்று ஆசைப்பத்தும், 'உய்கிலேன், வாழ்கிலேன்' என்று வாழாப்பத்தும், 'உனக்கே அடைக்கலம்' என்று அடைக்கலப்பத்தும், 'செய்யுமாறறியேன் அந்தோ, செத்திலேன்' என்று செத்திலாப்பத்தும், 'பொய்யர்க்குப் பொய்யனே நின் பொற்பாதம் புணருநாள் எந்நாளோ' என்று புணர்ச்சிப்பத்தும், 'ஆதரித்தழைக்கில் இங்கு அதெந்துவேயென்றருளாய்' என்று அருள்பத்தும் அருளிச்செய்தார்.

ஞானமிக்குடைய பாடல்கள் இவை இவை புகன்றபின்னர் வாதவூரர் திருவார்த்தை, எண்ணப்பதிகம், திருப்பள்ளியெழுச்சி, திருவேசறவு, ஆநந்தமாலை, உயிருண்ணிப்பத்து, பிரார்த்தனைப்பத்து, திருப்பாண்டிவிருத்தம் என்பவற்றையும் திருவாய் மலர்ந்தருளினர்.

இங்ஙனம் அடியார்களுடன் கூடிவைகிச் சில நாட்செல்ல, இறைவன் முன்னே அனுக்கிரகித்தபடியே பொய்கையில் நெருப்புத் தோன்றுதலும் அடியார்கள் திருவைந் தெழுத்தோதிக் கொண்டு அதில் மூழ்கினர்கள். மூழ்கினதும் சபாபதியாகிய பெருமான் இடபவாகனத்தின் மேலே ஏறி உமாதேவியுடன் விண்ணோர் சூழ்ந்து மலர் சிந்தித்தொழ விண்ணிடையே தோன்றினர். இக்காட்சி கண்டு கனல்மூழ்கிய அன்பர் துயர் நீங்கி வணக்கஞ்செய்து

கணநாதர்களாய் வடிவுகொண்டு சிவபெருமான் முன்வந்து நின்றார்கள். அப்பொழுது சிவபெருமானும் அடியார்களுடைய திருமுகம் நாடி "கொஞ்சநேரமும் அகலாதவராகிய நீர் இங்கே நீங்கத் தனியே நாம் போனதும், வாவியில் எரி புகுவீர் என்றேவியதும் யாதோ எனில், இதுவாகுமென்றறிவீராக. உத்தமனாகிய வாதவூரனைச் சிதம்பரத்திலே புத்தரை வாதில் வெல்லும்படி நாம் இவ்வுலகில் வைத்தோம். நாம் நீங்கினால் மனமயர்ந்து துன்புறுவான் என்பது தெரிந்து உங்களையும் இத்தலத்தில் சிலநாள் எம்முடன் வாராதிருப்பீரென்று சொன்னோம். மலம் நீங்கினவர்களும் புவிமீது சில பகலெனினும் பயிலுங்காலே, மறுபடியும் மலவாதனை சேருமென்று பொய்கைமீதில் ஞானவனல் சேர்வித்தோம். இவ்வனலில் மாயாதேகத்தை வேவித்து இன்று இவ்வுடலைக் கொடுத்தோம்" என்றார். இங்ஙனம் அருளிச்செய்து கணநாதர் அகல,நடராஜரும் வானவீதியில் மறைந்துவிட்டார். அப்பொழுது வாதவூரர் வேறாகச்சென்று செழுமையுள்ள ஒரு கொன்றை மரநீழலில் சிவயோகம் செய்திருந்தார்.

அடியார்கள் அழல்மூழ்கியவிதமும், இறைவன் கட்புலனாக எழுந்தருளியவிதமும், முன்பு தமக்குவேண்டிய உருவங்கொண்ட இறைவனது திருவடியை வணங்கியவிதமும் இனிக் கனகசபையிலே தாம்போய் அடைவதும் ஆகிய இக்காட்சிகளெல்லாம், ஏக காலத்தில் இன்பம் மிகுந்த மெய்ஞ்ஞான யோகத்திலே வாதவூரர் இயல்பொடு கண்டார். கண்டு செங்கை குவித்தார். ஆனந்தக்கண்ணீர் சிந்தினார். 'எந்தாய்! வந்துபின் எங்கே ஒளித்தாய்' என்று மயங்கினார். 'பொய்கைக் கரைமீது வந்து இறைவன் விடையேறிக் கண்ணுற நண்ணியதலமோ, இது' என்று அப்புண்ணிய நிலத்தின்மிசை விழுந்து அழுதழுது, அந்தோ! என நொந்தார்.

" அன்னை நிகர்ப்பீர் என்னை யொழித்தே அன்பாளர்
பொன்னடி பெற்றே பொய்கை யழற்கே புகலாமோ
மின்னுருவத்தீர் தும்மருள் கூடா வினையேனுக்கு
இன்னலளித்தீர் எங்ஙனொளித்தீர் எனநொந்தார் "

அங்கிலை தெளிந்து வாதவூரர் பொய்கையகன்று குருந்த நீழலில், மறைகள்காணு மலரடிபற்றி வீழ்ந்தார். தீவினைக்குக் காரணமாகிய பிறவிமாளும்படி, இறைவனது இன்னருள் பெற்று 'மெய்தானரும்பி' என்று எடுத்துத் திருச்சதகமருளி னார். உத்தரங்கூறி ஆங்கே புலம்பிநின்று இரங்குஞ் சமயத் தில், இறைவன் அன்று அருளிய நீர்மை நினைவிற்கு வந்தது. பின்பு அத்தலத்திலுள்ள மூர்த்திபால் செலவுபெற்று உத்தர கோசமங்கை யென்னும் தலத்திற்கு எழுந்தருளினார்.

உத்தரகோச மங்கையில், திருக்கோயிலெய்தி, தம்மை வந்தடிமைகொண்ட திருவுருவம் காணுராகி வெய்துயிர்த்து வீழ்ந்தார். வாதவூரர், மூர்ச்சித்துத் தெளிந்து 'என்னைக் கைவிட்டாயோ ?" என்று நீத்தல் விண்ணப்பம் சொன்னார். சொல்லலும் பழைய குருவடிவந்தோன்ற அதனைக்கண்டு வணங்கினார். பின் அங்கங்கேயுள்ள தலங்களுக்குச் செல்வா ராகித் தன்னிகரில்லாத் தெய்வத்தலம் பல வணங்கினார். வணங்கி நீங்கிச் சோழ நன்னாட்டிலெய்தித் திருவிடைமருதூர் சேர்ந்தார். அத்தலம் தொழுத பின்னர் அன்புடன் திருவாரூர் எய்திச் செப்பரும் பண்புவாய்ந்த தியாகராயருடைய மலர்த் தாள் போற்றித் திருப்புலம்பல் ஓதினார். இறைவனியம்பிய பதிகள் எல்லாம் தப்பற வணங்கி, இளைப்புநீங்கித் தடமதில் சூழ்ந்த சீகாழி சேர்ந்தார்.

குன்றென வயங்கு கோயிற் கோபுர வாயி னீங்கிச்
சென்றுயர் கயிலை யான செய்திகண் டிரங்கு மெல்லை

மன்றிடை நடித்த பாத மலரடி பிடித்துக் கொண்டு
பின்றிகழ் சடையோன் முன்னர்ப் பிடித்தபத் தருளிச் செய்வார்.

பழ வினைப்பகைமையுள்ளார் யாவரும் வணங்கினால் அதை வெல்வார் என்று அத்தலத்திலே விருப்புடன் சிலநாள் வைகினார். பின்னர் அதனை நீங்கி வளஞ்செறிந்த திருக்கழுக்குன்றத்தில் செல்வதற்கிசைந்து தில்லைநகரைத் திசை நோக்கி இறைஞ்சி ஏகினார்.

வடதிசையிலேகி மணிமுத்தாறு சூழ்ந்த விருத்தாசலமென்னும் முதுகுன்றினை வணங்கினார். அத்தலமகன்று திருவருட்குறை என்று பெரியோர் எண்ணி வதியும் திருவெண்ணெய் நல்லூரில் சேர்ந்தார். அந்நகர் வணங்கியபின் வாதவூரர், நடுநாடும், உயர்காடும் கடந்து துஷ்டமிருகங்கள் உறையும் மலைகளையும் தாண்டி அண்ணாமலைக்குச் சமீபத்தில் வந்தார்.

மாடங்களும் கோபுரங்களும் மதில்களும் பெரிய தோரணங்களையுடைய முகப்பும், நீடிய கமுகின் காடுகளுக்கும் நெருங்கிய குளிர் பூஞ்சோலைகளுக்கும் இடையே உயர்ந்து விளங்குதல் கண்டு வாதவூரர் உவகைகொண்டு வணங்கினார். 'அன்று இருவர் தேட அழலாகி நிமிர்ந்த மலைவடிவோ' என்று அண்ணாமலையை இறைஞ்சி அந்நகரத்தில் புகுந்தார். சோலைகளும் மதிலும், பசிய பூந்தோரணங்களால் அழகு செய்யப் பெற்ற வீதிகளும், தெய்வச்சாலைகளும் நீங்கிச் சந்நிதி வீதியிற் சென்றார். சென்று அண்ணாமலையாருடைய ஆலயமிறைஞ்சித் தம்மை அன்றுவந்தாண்ட திருவுருவைக்கண்டார்.

"தேவர்கள் அஞ்சிவந்து உன்னடைக்கலமென்று ஓலமிடும் பொழுதில் ஆலகாலமுண்டருளிய தியாகமூர்த்தியே, போற்றி! பவநோய் தீர விண்ணவரும் மண்ணவரும் பசும்பாலு

டன் அதாவது, உமாதேவிபாகத்துடனே கலந்து உட்கொள்ளும் பனிமலைமருந்தே போற்றி! மாலும் அயனுங்காணு மலரடிகளை என் தலைமேல் வைத்தருளிய அருட்பெருஞ்சுடரே போற்றி! பச்சைமேனிக்கொடியினை இடங்கொண்ட செம்பொற்குன்றமே போற்றி!!" என்று மனமார வாயார வாழ்த்தி வணங்கினார்.

இங்ஙனம் அண்ணாமலையார் அடிமலர்களில் பூட்டிய உள்ளத்தினராய் வாதவூரர் வதியுநாளில், அழகு சுமந்த பருவமங்கையரெல்லாம், மார்கழித்திங்களில் திருவாதிரைக்கு முன் பத்துத்தினங்களில் மனைகள் தோறும் அழைத்து விடியற்காலத்தில் ஒன்றுகூடி நீராடல்செய்யும் காலம் வந்தது. அன்னவர் இயல்புகண்ட வாதவூரர் மங்கையர் புகன்றதாகத் திருவெம்பாவை பாடினார். பின்னர் அக்கன்னியர் பாடியாடுகின்ற அம்மானை கண்டு அவர்கள் சொன்ன பாடலாகத் திருவம்மானையைப் பாடியருளினார்.

பின் திருவண்ணாமலையை நீங்கிப் பரிவுடன் காஞ்சிமா நகரில் வந்து ஏகாம்பரத்திலே கம்பரை வணங்கிக் காமக்கோட்டத்தில் காமாட்சியம்மையின் செல்வச்சீரடி வணங்கினார். பின்னர்த்தெய்வீகவளஞ் சார்ந்த திருக்கழுக்குன்றிற்கு எழுந்தருளினார்.

" துணைவ! யான்கலங்கா வண்ணம் நின் செய்ய மேனி காட்டினை " என்று பாடல்பொழிந்து, சின்னாள்பயின்று, பின் கானும் மலையும், காவும் வாவியும் நீங்கி, தில்லைமாநகரினை அணுகிச்சென்றார்.

வழியின் இரண்டு பக்கத்திலும் கொன்றைகள் மலர்ந்து நின்றன. இத்தோற்றம் ஒளிபொருந்திய இமையோருலகினை ஒத்தது. தெய்வமணங்கமழும் மலர்களைச் சூழ்ந்து வண்டுகள்

இசைபாடின. பாட்டிற்குப் பொருள் சொல்ல வல்ல புலவர்கள் அபிநயங்காட்டும் கைகள்போல் காந்தள்கள் மலர்ந்தன. தெளிந் தறியும் சிவஞானம் சிறிதுமில்லாதவர், தவவேடங்கொள்ளும் செயலென, முருக்க மரங்களெல்லாம், மணமில்லாத ஒளியை யுடைய தம்மலர்களோடு குலவின. பள்ளத்தில் படரும் புன லென ஐம்புல வழியே படரும் சிறியோர்களுடைய உள்ள மெனக் கரியமலர்களைப் பூத்திருந்தன காயாமரங்கள். புன்னை மரங்களிலே குரங்கினங்கள் குதித்துச் சஞ்சரித்தன. அசை வுற்று ஈயின் கூட்டங்கள் எழுகின்றபொழுது தேன் கூண்டும் மலர்களும், அகல்வானில் மிளிரும் மதியமும் தாராகணங்களும் பொலச் சோலையினிடையில் எங்கும் தோன்றின. வாத வூரருக்குப் பக்கத்தில் 'பவளச்செங்காய் மரகதக் கமுகு கள்' திரண்டு பல சாமரைகளை ஏககாலத்தில் வீசுவன போல் பிரகாசித்தன. மாந்துளிரைக் கோதுகின்ற பலகுயில்கள் சின்னமூதின. மிகுந்த அன்பொடு விண்ணுநியர் சொரியும் பல பொன்மலர்களை ஒக்கும்படி ஒளிபொருந்திய மலர்களைச் சிந்தின, சண்பகச்சோலைகள். நீங்காவளமுடைய பூஞ்சோலை களில், மாவும், நாரத்தைபும், பாதிரியும் தெங்கின்திரளும், வகுளமும், கோங்கும் பலாவும், கொத்தார்ந்த செழுமந்தார மும் நிறைந்திருந்தன. இத்தகைய சோலையினைக் கடந்து சென்று வாதவூரார் சிதம்பரத்தைக் கண்ணுற்றார்.

உயர்ந்த மதிலும் சிற்பத்தொழில் மிகுந்த கோபுர வரிசை யும் சிவந்த கும்பங்கள் பிரகாசிக்கும், மாளிகைகளும், காணுந் தோறும், புதியபுதிய அழகினைச் செய்வது கண்டு வாதவூரார் அஞ்சலிகொண்டு மகிழ்ந்தார். அந்நன்னகரிலே வேதமோது கின்ற ஒலியும் விண்ணோர் பரவும் ஒலியும், கீதந்தரும் ஒலியும், பேரிகைகளின் பேரொலியும் சிவஞானிகள் புகலும் ஆகம ஒலியும், அறிஞர் ஓதும் தமிழொலியும், கடலொலி செய்தன.

வரிசைபொருந்திய மணிமாளிகைகளையுடைய நெடுவீதி களைக் கடந்து உயர்ந்த கோபுரவாயில் வழியாகப் புகுந்து வாதவூரர் சிற்சபையை எதிரே கண்டார். அருள்சூடிய நெஞ்சினராய், அப்பொன்னம்பலத்திலே நின்றாடும் புனிதனை நோக்கினார்; அந்நாளிலே தம்முடிமேல் அடிசூட்டிய குருவுருவம் கண்டார்.

"மன்னு உயிரன்னாய் மணிமன்று சரணென்றே
சொன்னார் பலகால் அன்பொடுதொழுதார் மிகஅழுதார்."

இருகண்களும் ஆனந்தபாஷ்பம் பொழிய வீழ்ந்து இன்னடி முடிமேற்கொண்டெழுந்தார்; மீண்டும், ஆனந்த நடராசனை நோக்கினார். என்றும் குறையாத அன்பும் அருளும் பூண்டு விளங்கும் உமைபங்கனை பல்வளமும் ஒருங்கு நிறைந்த தில்லை மூதூரில் இப்பொழுதே கண்டேன் எனமகிழ்ந்து கண்டபத்து அருளிச்செய்தார். சிவலிங்கமாகிய ஜோதியும் பொற்சபையாகிய சிதாகாசத்திலே ஆனந்தமயமாக நிருத்தஞ் செய்யும் ஜோதியும் ஒன்றென்று காணும் சிவாநுபூதியுற்று வாதவூரர் செயலற்று அசைவற்று ஒரு நிலை யோகியமாக நின்றார். அப்பொழுது சபாநாயகரை வழிபடுவதையும் மறந்து கையுங்காலும் அசைவில்லாமலிருந்தன. கண்ணும் இமைக்கவில்லை. 'இது தெளியாத மயக்கமாகு'மென்று காவலர் கருதி வாதவூரரைநோக்கி 'இம்மணி மன்றைவிட்டுப்போம்' என்று கூறினர். பரவொளியில் மூழ்கிப் பரவசப்பட்டு நின்ற வாதவூரரோ நெடுநேரம் நீண்டதோர் தம்பம்போல நின்றார். அவரது உள்ளம் தாண்டவம்புரியும் ஞானத்தன்மையினையே நாடிச்சென்றது.

போமெனப் போகா ரொன்றும் புகல்கிலர் பித்தங் கொண்டார்
ஆமெனக் காவ லாளர் அஞ்சிநின் றிரங்கு மெல்லைச்

சாமுடற் குயிர்வந் தெய்தும் தன்மைபோல் குவிந்த கஞ்சத்
தேமலர்க் கரமேற் கொண்டு சிவசிவ போற்றி யென்றார்.

பின்னர் வாதவூரடிகள் ஆதியஞ்சோதியின் செம்பொன் மன்றினை மும்முறை வலங்கொண்டார். அங்கே தன்னிகரில் லாது விளங்கிய மூலத்தானக்கடவுளை வணங்கினர். பின்பு அன்னை அம்பிகையின் பாத மலர்களில் இறைஞ்சினர். பிறகு அக்கோயிலின் மேல் பால், திருப்புலீச்சரம் சென்று சேர்ந் தார். அங்கே வரந்தர அமர்ந்த வள்ளலாரை வணங்கி அருகே திருநாகேச்சுரத்திலிருந்து அண்ணலார் தம் பாதங்களை வணங்கினர். பின்னர் மூவாயிரவர் - திருந்திய மறையோர் வாழும் தில்லையம்பல வீதியில் சென்றார். செல்லும்போது அமிர்தமாகிய திருவாசகம் புகலலுற்றார், குலாபத்து, கோயில் திருப்பதிகம், கோயில்மூத்ததிருப்பதிகம், கீர்த்தித்திருவக வல், திருவண்டப்பகுதி, போற்றித் திருவகவல் என்பவற்றை அன்புடனருளினர்.

“ சைவளை சிலம்பச் செம்பொற் கிங்கிணி கறங்கச் சூழ்ந்து
மைவளை குழன்மேல் வண்டு மருண்டிசை திரண்டு பாட
மெய்வியர் வரும்ப வெம்போர் விழிக்கயல் புரட்டி ஞாங்கர்
இவ்வகை நின்று சுண்ணம் இடித்தனர் மடந்தை நல்லார் ”

அம்மாதர்களுடைய பாடல்களைக் கேட்டு அவர்களிசைத்த தாகத் திருப்பொற் சுண்ணம் பாடினர். மேகங்கள் சஞ்சரிக் கும் சோலையினூடு வருமளவில் வாதவூரர் அங்கே விளையாடிக் கொண்டிருந்த சிறுமியரைக் கண்ணுற்றார். “நீங்கள் வீண் பேச்சு ஒன்றுமில்லாமல் எமது கடவுளையே சொல்லுங்கள்” என அவரவர் உரைத்ததாகத் திருத்தெள்ளேணம், திருவுந்தி யார், திருத்தோணோக்கம், திருப்பூவல்லி, திருப்பொன்

னூசல், என்பனவற்றைப் பாடி யருளினர். அங்கே ஒரு சிறுமி தன் அன்னையை நோக்கிக் கூறும் இசைமொழி யெனத்தக்க அன்னைப்பத்துப் பாடினர். சோலையின் பக்கங்களில் முரலும் தும்பியை நயந்து நோக்கி 'நாதன் பூங்கழல் வழுத்துக' என்று வாதவூர்ப்புனிதர், திருக்கோத் தும்பி சொன்னர். 'சோலையினிடையே வாழும் பொற்பிளங் குயிலே! இங்கே எமது பிரானைக் கூவியழை' என்று குயிற் பத்துப் பாடினர். கிளியை நோக்கி 'திங்கள் சூடிய செல்வனைச் சொல்' என்னும் திருத்தசாங்கம் பாடினர். 'இவ்வுலகிடை வந்து தம்மையாண்டருளிய வடிவினையன்றி, மற்றோரண்ணலைக் கடவுளென்பதற்கு அஞ்சுகின்றேன், வினையேன்' என்னுங்கருத்தோடு சிறந்த பண்ணையுடைய அச்சப்பத்தும், அருளினர். பின்பு அந்நகர்ப்புறத்திலே ஓர்பன்னசாலை யமைத்து வாதவூரர் அங்கே தங்கியிருந்தார்.

'பரம்பரப் பொருளா மிந்தப் பைந்தமி ழோதி வையம்
பெரும்பிறப் பகல வந்து பிறந்தவர் செய்தி யெல்லாம்
இருந்தநற் றெருந்தோறும் இயம்பிநன் மகிழ்ச்சி யெய்தி
அரும்புகழ்த் தில்லை யுள்ளார் யாவரும் அதிச யித்தார்."

வேதாந்தப் பொருளாகிய திருவாசகப் பைந்தமிழோதி உலகம் உய்யும் வண்ணம் எழுந்தருளிய, வாதவூரருடைய செய்தியெல்லாம், சிதம்பரமூதூர் எங்கணும் நன்குபரவலாயிற்று. தில்லையிலுள்ள நன்மக்கள் யாவரும் கூட்டம் கூட்டமாகக்கூடி வாதவூரரது செயல்களையும் செய்யுள்களையும் அதிசயத்தோடும் பெருமைகளோடும் பாராட்டி ஓதுவாராயினர். வாதவூரரோ இத்தகைய புகழுரைகளால் சிறிதளவும் கலங்காத நெஞ்சினராய், தத்துவமுடிவிலே ஆடும் சபாநாயகரது தாண்டவத்தைத் தம்முட்கண்டு மகிழ்வெய்தினர். இங்ஙனம் மகிழ்

ந்து நாடோறும் சிற்சபையில் சென்று ஆனந்தக்கூத்தனைத் தரிசித்துவருவதே நியமமாகக்கொண்டு தில்லை மூதூர் எல்லையி லமைத்த பன்னசாலையில் எழுந்தருளி யிருந்தார்.

## வாதவூரரும் புத்தவாதமும்

சிவபெருமானுடைய அடிமலர்களை என்றும் மறவாது வாழ்ந்த ஒருதவசி இவ்வுலகிலுள்ள வளத்தையும் வனப்பையும் ஆராயும் இச்சைகொண்ட நெஞ்சினராகி உலகமெங்கணும் பிரயாணம்செய்துவந்தார். சோழநன்னாடு கண்டு தில்லை தொழுத பின் பழுதிலாத ஈழநாட்டினைப் பார்க்கவேண்டுமென்று எண்ணி அங்கே சென்றார். அப்பெரியார் முதன்மைபெற்ற நலங்கொண்ட ஈழநாட்டரசன் வீற்றிருந்த தலைநகரைச்சார்ந்து மிருந்த உள்ளன்போடு தாமிருக்குமிடந்தோறும் "தில்லைமன் றம் நீடுவாழ்க" என்று வாழ்த்தத்தொடங்கினர். இங்ஙனமிருக் குநாளில் மூடராகிய புத்தர் சிலர் ஈழதேசத்தரசன் முன்பு போய் "அரசனே! ஒன்று கேள், திறமைவாய்ந்த ஒரு துறவி இந்நகரிலுள்ளான். அவன் உருத்திராக்கமாலை அணிந்திருக்கின் றான்; நாடோறும் பிச்சையெடுத்துண்ணுகின்றான். நிற்கினும் இருக்கினும் பொன்னம்பலம் வாழ்கவென்று சொல்லுகிறான்" என்று சொல்லி வணங்கினர்.

'இன்று இங்கே அவனைக்கொணர்வீர்' என்று அரசன் கட்டளையிட்டான். அவரும் சென்று "அன்பரே! உம்மை அரசன் அழைக்கின்றான் வருக" என்று வேண்டினர். தவசி சொல்லுவார் "நன்றென்பதும் தீதென்பதுமில்லாத பிச்சை யெடுத்து உண்பதல்லாமல் ஒன்றும் கருதாத துறவிகளிடத் தும் வேந்தனுக்குக் காரியமுண்டோ?" என்றார்.

ஊரிற் பலிகொண் டுண்கினும்மற் றொன்றுங் கருமமில்லெனினும்
பாரிற் பயில்வா ருயிர்புரத்தல் பரமாம் நிருபர்க் காதலினுல்
வேரிற் கமழ்தார் எம்மரசன் தன்பால் வருதல் வேண்டுமெனச்
சீரிற் றிகழ்வேல் தூதருடன் சென்றான் ஒன்றும் தீமையிலான்.

"பழம்பெறு நூலாகிய பிடகநூல் மூன்றுமறிந்து குற்றம் நான்கும் நீங்கிச் சுசீலமைந்தும் புனைந்து, காம மாதிய ஆறும், புலனைந்தும், அடக்கப்பெற்ற இயல்பினனுய்ப் பஞ்சகந்தமும் கெடுத்து நிற்பதே முத்தி நிலை" என்று நாடெங்கனும் உபதேசஞ்செய்துவந்த புத்தகுருவுடன், தாளைபுடைசூழ எழில் சிறந்த வீரத்தோள்களையுடைய புத்தமன்னன் அரசுவீற்றிருந் தான். ஆடம்பரமாக வீற்றிருந்த அவ்வரசன்முன் சிவநேசச் செல்வராகிய மாதவர் உடுக்கும் வெண்கோவணமும் ஒளி செய்த கபாலமும் கையில் பிடித்த சதங்கை கட்டிய நெடும் பிரம்பும், திலகம் திகழுந்திருநுதலும், புன் முறுவலும் அசை யும் சடைமுடியுமாகி, மிடுக்கொடு சென்றார். சென்று புத்த ராசன் திடுக்கிடப் பொன்னம்பலம்" என்று முழக்கி அரச னருகே கம்பீரமாக அமர்ந்தார்

இங்ஙனமிருந்த தபோதனரை நோக்கி "இப்பொழுது நீர் இங்கே சொன்னசொல்லின் தன்மை யாது?" என்று அர சன் வினவினன். அரசனை நோக்கி அவர் சொல்வார்:— சோழமன்னனது திருநாட்டிற்கு உயிர்நிலையாகவுள்ள சிதம் பரம் என்பதொரு தலமுண்டு. அது முன் தில்லைவனமாக விருந்தது. புவன மனைத்தினுக்கும் முன்னே உண்டாகிய தெய்வத்தலமென்றும் மூலஸ்தானமென்றும், பௌராணிகர் களாலது புகழப்பெறுகின்றது. இவ்வுலக நங்கையின் மணி மாலையாகத் திகழும் சிவஸ்தலங்களில் நடுநாயகமாக ஞான வொளிவீசித் திகழும் மணிநகரம் சிற்சபையெனப் பெறும்

சிதம்பரமேயாகும். இத்தகைய சிற்சபையிலே உமாதேவியார் காணச்சபாநாயகர் ஆனந்தத் தாண்டவம்புரிந்தருளினர். இதனு லன்றே உலகமெல்லாம் இனிதியங்குகின்றது! பண்டை நாளில் மனுமைந்தனுகிய இரணியவன்மன் குட்டநோயால் வருந்திக் கதறினன். அவனது தொழுநோய் நீங்கி உடம்பு பொன்மயமாக ஒளிர்ந்ததற்குக் காரணமாகிய சிவகங்கை யென் னும் ஒரு தடாகமுண்டு. இப்புனிதத் தடாகத்தில் முழுகி நிருத்தத்தால் ஐந்தொழில் புரியும் இறைவனை நம்பிக்கையோடு தரிசிப்போர் ஞானம்பெற்று விடுதலை பெறுவர்.

நண்ணும் பிறவி யொழித்துயிர்க்கு நலஞ்சேர் முத்திகொடுக்குமதற்கு
எண்ணுஞ் சமயக் கடவுளரில் யானேவல்லேன் எனப்பதமேல்
வண்ணந் திகழ்பொற் கழலணிந்து மதுரைக் கொடியும் கட்டி அருட்
பெண்ணம் பிகைகண் காணநடஞ்செய்தானந்தப் பெருந்தருக்கால்.

இத்தகைய பெருமானது அடிமலர்களை வணங்காத மன மும் மொழியுஞ், செயலு முடையோர்களும் ஒருகால் 'பொன் னம்பலமென்று சொன்னல் அது ஆகக்கரு மஞ்செழுத்தினை இருபத்தோராயிரத்து அறுநூறுதரம் நாக்கொண்டுரைப்ப தற்கு நிகரல்லவா?'' என்றார்.

குணமென்னுங் குன்றேறி நின்ற தபோதனர், நீறும் அஞ் செழுத்துமில்லாத நிருபனைநோக்கித் திருவம்பலமென்று தாம் சொன்னதற்குப் பொருள் இதுவாகுமென்று சித்தாந்தஞ் செய்தபோது, பௌத்தாசாரியன் மனம்புழுங்கி வெகுளி கொண்டு "பிடகமூன்றும் உரைசெய்யுந் தலைவனே தலைவன். அவனல்லாது வேறு கடவுளொன்றுண்டோ?'' என்று கூறி னன். புத்தகுரு பின்னும் பகர்வான், 'யான் தில்லையம்பதி யிற் சேர்ந்து அங்குள்ள சைவரோடு வாதுசெய்வேன். அங்கே நின்று நடிக்கும் பாதத்திலுள்ள வீரக்கழலையும் நீண்ட கொடி

யினையும் அறுத்துவிடுவேன்; புத்தனொருவனை யொழிய வேறு தெய்வமில்லை யென்று முடிவுகட்டி அந்தச் சிற்சபையை எமது புத்தன் பள்ளியென வழங்குவிப்பேன்; இக்கருமத்தை மூன்று தினத்தில் யானே முடிப்பன்'' என்று சபதஞ்செய்தான்.

பின்னர் அவனெழுந்து தன் சிவிகை மீதிவர்ந்து, தன் தாள்வணங்கும் பௌத்தர் கூட்டம் சூழ அரசனரண்மனையை நீங்கிச்சென்றான். சென்று கடலும் நாடும் காடும் நீங்கி விரைவில் புத்த குரு சிதம்பரத்துக்குப் போயினன். சிதம்பரமடைந்ததும் காரணமின்றி அவனுள்ளத்தில் துயரந்தோன்றியது. கண்கள் நீர்மல்க அவன் சிவிகையினின்றிழிந்து சிவபெருமானது பொற்கோயிலின் மண்டபத்தில் வந்து சேர்ந்தான்.

புத்தமன்னன் தன் செல்வமகளுக்கு முன்னமேயுண்டான ஊமைத்தன்மை நீங்கப் பொன்னம்பலத்திற்குச் செல்லவேண்டுமென்று நினைத்தான். தன்சேனை சூழத்தனிப்பெருஞ்சிவிகையேறிச் சென்னிநன்னாடு சேர்ந்து தில்லையம்பதியில் இறைவனது திருக்கோயில் மண்டபத்தேயிருந்த புத்தகுருவை இறைஞ்சி ஏத்தி ஓங்கிய மகிழ்ச்சியோடு ஓர் ஆதனத்திருந்தான். புத்தகுருவையும் புத்தமன்னனையுங்கண்டு கோயிலிலே பணிவிடை செய்வார்யாவரும் ஒருங்கு சேர்ந்தனர். அவ்வாறு சேர்ந்தவர்கள்மனம்நொந்துகனலென வெகுண்டு பௌத்தர்கள் மனமயர்வெய்தும்படி சில வார்த்தைகளைப் பேசி "இறைவனிருக்கின்ற தில்லைமாநகரின் எல்லையைவிட்டுப் புத்தர்களே, விரைவில் ஓடிப்போய்விடுங்கள். எங்கள் கோயிலில் நீங்கள் வந்திருப்பதை நாங்கள் பொறுக்கவேமாட்டோம்'' என்றனர்.

புத்தகுரு சொல்வான்:—"சோழ மன்னன் முன்னர் உயர்ந்த தருக்கமுறையில் நீங்கள் பரவும் சைவநெறியினை நிலையன்றென நான் கண்டிப்பேன். கண்டித்துச் சிறந்த புத்தனே

உயர்ந்த தெய்வமென்று சித்தாந்தம் செய்வதல்லாமல் ஏதுவ தில்லை" என்று மறுத்தான். இதனைக்கேட்ட பணிவிடையாளர்கள் தில்லை மூவாயிரவர்யாவர்க்கும் இதனைச் சொல்லுவோமென்று ஓடினர். பின்பு தில்லையம்பதியில் அந்தணர் அருந்தவர், பரிகலத்தோர் ஆகியவற்கிடையே புத்தர் கோயிலுக்குள் வந்த செய்தி நன்கு பரவியது. சிவநேசச்செல்வர் செவியிலிது புண்ணிலே வேல் நுழைந்ததுபோல நுழைந்தது. சபாநாயகர் எழுந்தருளியிருக்குந் திருக்கோயிலிலே யாவரும் சென்று வண்ணமணி மண்டபமடைந்து புத்தகுருவின் கருத்து என்னவென்று கேட்டறியவிரும்பினர்கள்.

தில்லை மூவாயிரவரைக்கண்டும் புத்தகுரு எதிர்கொள்ளவில்லை "இவன் மெய்யுணர்வில்லாதவன்' என வெருண்ட சிவநேசர்கள் "உய்வதறியாத நீ இங்கே அச்சமின்றி எவரையும் மதியாமலிருப்பதற்குக் காரணமென்னை?" என்று வினவினர்கள். புத்தகுரு அவர்களை நோக்கி "நான்மறையினையும் அங்கமாகிய ஆறுசாத்திரங்களையும், இருபத்தெட் டாகமத்தினையும், பதினெண்புராணத்தினையும் கருவியாகக்கொண்டு உங்கள் தெய்வமே தெய்வமென்று நீங்கள் நவில்வீரேல், எங்கள் புத்தர்பெருமானே தெய்வமென்று யான் சித்தாந்தம் செய்வேன். மறைவாக உங்களுக்குள்ளே பழங்கதை பேசி மகிழ்வதைவிட்டு இங்கே என்னெதிரே வந்து உங்கள் விவகாரங்களைக் கூறுக" என்றுரைத்தான். தில்லைவாழந்தணர்கள் வெகுண்டு அவனை நோக்கி "நீ தோற்றாய் என்று கலைஞர் சொல்ல உன்னைவென்று உன் செருக்கினைக்கிள்ளியெறிவோம். இனி உன்னுடன் வீணாகப்பேசுவது சேற்றின் மேல் கல்லெறிவது போலன்றி வேறுண்டோ? நாய் குரைத்தால் அதனைப்பொருள் செய்வது அறிவுடைமைக்கழகன்று. எனினும் நாயின் சினத்தையும் ஆற்று

வது கடனென்று சீவகாருணிய ஒழுக்கமுள்ள சிவநேசர் கூறுவதுண்டு. ஆதலால் இன்று உன்னுடன் உரையாடுவது எமக்குத் தகாதகாரியமே யெனினும், ஒருரையில்வென்று உன்னையும் நெறிப்படுத்துவோம்'' என்று கூறுவாராயினர்.

இங்ஙனம் கூறி ''அரசர்களும் மெய்யுணர்வினையுடைய பெரியோர்களும் கூடியுள்ளசபை முன்னர் நம்முடைய தருக்க வார்த்தைகளை எடுத்துரைத்தல்வேண்டும். அப்பொழுது இது தக்கது இது தகாதது என்று நடுநிலை நின்று உண்மைகாணும் பெரியோர் முடிவுகட்டி மொழிதல்கூடும். இதனால் எக்கலகமு மில்லை. இதுவே காரியமாகும்'' என்று அந்தணர் மூவாயிர வரும் தமக்குள் ஆலோசனை செய்துகொண்டனர். பிறகு தங் கருத்தினைச்சோழபூபதிக்கு வெளியிட்டு ''அரசரேறே! உத்தரம் உரைக்கஅறியாது புத்தனைமுனிந்தனர், புடைத்தனர்மூவாயிர வர்,என்று இவ்வுலகம் உரைத்துவிடும்.எனவே நாம் வாதத்தில் இவர்களை வென்று நம் திருநெறியினை நிலைபெறச்செய்வதே நன்னெறியாகும்'' என்றெழுதி ஓர் ஓலையை விடுத்தனர். மேலும் பல வேறு அந்தணர்களும் பெருந்தவர்களும் அருங் கலை விநோதர்களும் நாளைச் சிதம்பர தெரிசனத்திற்கு வந்து சேர்தல் வேண்டுமென்று புந்தி மகிழ்ந்து ஓலை பல போக்கினர் தில்லைவாழ் அந்தணாளர். அப்பொழுதுபகலோன் ஒளித்தனன்.

வானமாதின் சுடர் நுதலில் அணிந்த திலகமென்னக் கங்குல் மங்கைமார்க்கும் கண்ணாடியென்னச் சிவபெருமானுக் கிட்ட தரள வெண்கவிகையென்னத் திங்கள் உதயஞ்செய்தது. ''இன்னொரு தினமாத்திரம் புத்தனே! இங்கிருப்பாய், யாங் கள் நாளை உன்தாழ்வினை உலகத்திற்குக் காட்டுவோம்'' என்று கருதிச் சிவநேசர்களெல்லாம் தம்மனையிற் சென்று நல்லுணவு மாந்தி அன்றிரவு இறைவன்மீது பாரத்தைப் போட்டு அருந் துயில் பயின்றார்.

அழகுற மன்றி லாடும் ஐயர்கைப் பிரம்பு தாங்கித்
தழைசடை முடியு மேனி சாத்திய நீறு மாகி
விழைதரு வடிவங் கொண்டு வெளிப்படக் கனவில் வெய்யோன்
எழுவதன் முன்னர் எய்தி யாவர்க்கும் இதுபு கன்றார்.

வருந்துவ தொழிமின் நம்மூர் எல்லையின் வைகி யன்பால்
இருந்தனன் வாத வூரன் இவ்வுரை கேட்ட போதில்
பொருந்திய தருக்க நூலால் புத்தரை வெல்வான் இன்னே
அருந்தவ முடைய நீர்போய் அழைத்திடும் அவனை யென்றார்.

இங்ஙனம் கனவுகண்டு விழித்துக்கொண்டவர்கள் சபாநாயகர் அன்பினால் உரைத்ததைக் கருத்தில் ஆராய்ந்து மகிழ்ச்சி கொண்டனர்; முடியிற் செங்கை குவித்தனர். கோயில் மண்டபத்திலே எல்லா மாந்தரும் வந்து சேர்ந்தனர். புத்தகுரு மொழிந்ததற்கு இரங்கிப் பின்னர் எல்லையில் கருணையால் இறைவன் கனவிலேவந்து சொல்லிய சொல்லினால் சோதி கொள் முகத்தராகி உவகைகொண்ட சிவனடியார்கள், இருளுக்கு ஒதுங்கிப் பின்பு பகலோன் வர, விரிந்த தாமரை, மலரை ஒத்தனர். தெய்வீகமான சபையிலே திருநடனம் புரியும் நாதன் வெண்ணீறும் செஞ்சடையும் நற்பிரம்புமாக மைவிரி கங்குலில் எழுந்தருளி எமக்கு நன்மகிழ்ச்சி எய்த இவ்வகை யருளினர் என்று மூவாயிரவர் யாவரும் தாங்கள் கண்ட கனவைச் சொல்லி இன்புறுவாராயினர்.

அத்தனாகி மன்றுளாடும் சபாநாயகரின் அருளை வியந்து தத்தமில் அன்பு கூர்ந்து மனவருத்தம் நீங்கிய அந்தணாளர்கள் மெய்த்தவத்தினையுடைய வாதவூரரிருக்கின்ற இடத்துக்குப் போவோமென்று பன்னசாலை யெல்லையில் குறுகினார்கள். அவர்கள் அருள்மலையாகிய வாதவூரன்பரை அன்பினால் நாடி நயந்துகண்டனர். அப்பொழுது அவர் பதுமாசனத்தினெய்தி

யிருந்த யோகம் நீங்கினர். இவரைக் கண்ணுற்ற தில்லைவாசிகள் வியந்து கனவினிடத்தே இறைவன் வந்து உரைத்தவெல்லாம் அவருக்கியம்புவாராயினர்.

அம்மொழி செவிப்புலன் சேர்ந்த மாத்திரத்தில் அவர்களுடன் கடிதுசென்று வாதவூரர் சபாநாயகரை வணங்கி அருள்பெற்றுப் பௌத்தர்களிருந்த மண்டபத்திற்குச் சென்றார். அவர்கள் முகத்தைப் பார்த்தால் துன்பமுண்டாகுமென்று எழினிகொண்டு மறைவித்து எதிரிருந்தார் வாதவூரர். அம்மண்டபத்திலே வேதபாரகரான அந்தணரும் புராணிகரும் கலைஞானியரும் பிறரும் தத்தம் தகுதிக்கேற்ப ஆதனத்தமர்ந்தனர். சோழ பூபதியும் கடிது வந்து சபாநாயகரைத்தொழுது வாதவூரரை வணங்கி அவருக்கருகில் ஓர் ஆதனத்திருந்தனன். ஈழ வளநாட்டரசனும் எழுந்து சோழ மன்னனுக்கு வந்தனஞ்செலுத்திக் குறைபாகவிருந்த திறையும் நல்கி "மன்னர் மன்னனே வாழி, மிக வாழி" என்று துதித்தான். சோழ மன்னன் மகிழ்ந்து, ஈழவளநாடனை நோக்கி "நீ முன்னர் அனுப்பியயானைகள் உத்தம சாதி யானைகளாகவிருந்தன. இப்பொழுது கொடுக்கும் மணிமாணிக்க வைர வைடூரியங்களுக்கோ விலையில்லை" என்றதிசயித்து அவனைத்தன் அருகில் அமரச்செய்தான். இவ்விரண்டரசர்களுக்கும் அருகேயிருந்தனர், நடுநின்று சான்று தருவோர்.

தில்லை மூவாயிரவரும் முனிவர்களும் சிறந்திருந்த மாத்திரத்தில் வாதவூரர் பௌத்தருடனே வாது செய்யத்தொடங்கினர். அவ்வமயம் சோழமன்னன் வாதவூரடிகளை வணங்கி நின்று " சுவாமி சிவஞானநிலையினை இவ்வுலகில் நிறுத்துவது உமதுபாரம். தீயோர் உயிரைப்போக்குவது என்பாரம்" என்று கூறினன். இதனைக்கேட்ட பௌத்தர்கள் மனவருத்தமுற்றனர்.

வாதவூரர் உளமகிழ்ச்சியெய்தி புத்தகுருவை நோக்கி "களவுரை பகர்வோய்! நீ வந்த காரணத்தைச் சொல்" என்று வினவினர். புத்தகுரு சொல்வான்:—"எம் கடவுளல்லால் வேறு கடவுளில்லை என்று சித்தாந்தம் செய்து இந்நெடும் பதியிலே இப்பொன்னம்பலத்தில்—எவருங்காண எங்கள் புத்தரைவைத்தல் வேண்டி நேற்றே வந்தேன். யான் நினைத்தது வேறொன்றுமில்லை" என்றான். என்று சொல்லியவளவில் வாதவூரர் புன்முறுவலெய்தி "முன் தவமொன்றுமில்லாய்! முயல் இபமாவது உண்டோ? நன்று நன்று, நின்னறிவு? இது நிற்க, உன்தெய்வமும் ஆன்மாக்கள் அவனடியிற் சேரும் செய்தியும் கூறுக" என்று வினவினர். புத்தகுருவெகுண்டு "கண்ணில்லாதவற்குக் கதிரொளிகாட்டலாமோ?" என்றுகூறிப் பின்னும்பகர்வான்:— "புத்ததேவனுடைய புகழுரைக்க வேண்டுமென்றால் பல்லாயிரம் நாவுவேண்டும். அறம் திகழும் பிடகநன்னூல் ஓதி அன்புடையனுகிப் பல் பிறவிகளிலும் உயிர்க்குறுதிசெய்து, மறந்தரும் கொலை, களவு, பொய் கள்ளுண்ணல் என்னும் நான்கு குற்றங்களையும் நீக்கி அரசமர நீழலிலே அமர்ந்திருப்பான் எமது புத்தபகவன், கருவிற்சேரும் உருவம் வேதனை, குறிப்புப்பாவனை, விஞ்ஞானம் ஆகிய பஞ்சகெந்தங்களும் கூடிப் பல உணர்வுண்டாகி ஒழிவது பிறவித்துன்பமாம்; அது பொன்றக் கேடாய் அழிவது முக்தி"என்றான்.

அப்பொழுது வாதவூரரும் காவிரிநாடனுகிய சோழபூபதியின் முகத்திஞேடு களங்கமற்ற அருட்பார்வை செய்து "அறியாமையினுல் மயங்கி உரைசெய்யும் இவனுக்கு இன்று யாம் என்ன சொல்வது?" என்று கூறி, இது புகன்றார்; "தருமமுண்டென்று பிடகநூலில் சாற்றினன் தலைவன் என்றாய்! அறிவு தோன்றிக் கணநேரத்தில் மறைந்துபோமென்றாய்!

சொல்லும் பொருளும், நீ தேடிச் சொல்லுமுன் உணர்வு போனால் உன் நூல் சொல்வது 'எப்படி? கூறல்வேண்டும்'' எனவே, 'அறநூல் என்பது உனக்கில்லை. கொல்வது கருதான் எங்கள் கடவுள்' என்று சொன்னாய். முன்னமே பார்மிசைப் பிறக்குநாளில் புலிகளாயும் நரிகளாயும் பிறக்கும்போது, வெம் பசியுற்றால், புல்லொடு தழையோ தின்றான் போதி நாதன்? மரங்கள் உயிரல்லவையென்று சொல்வாய். நிலைபெற்ற பஞ்ச பூதத்தினாலுண்டாகிய தேகத்தையுடையவர்கள் போல அவை நன்னீருண்ணாவிடில் கிளைகொண்டோங்கும்? அஃதில்லா விட்டால் சருகாகுமன்றோ? ஓருயிரைக் கொல்வது பழுது, செத்த மாமிசத்தைத் தின்பது நன்றென்று சொல்வாய். நல்ல உயிரைக் கொன்று மாமிசத்தை உண்பித்து உன் பசியைத் தணிப்பார்க்குப் பாவம் எய்துவது உனக்கு நன்றோ?'' என்றிவ் வாறு பல பல சொல்லி க்ஷணிகதியுற்றிருந்த பௌத்த சமயக் கொள்கைகளை வாதவூரர் கண்டித்தார். புத்தகுருவும் கோபித்து ''உம் கடவுள் யாது? உமது முக்தியெது?'' என்று கேட்டான்.

வாதவூரர் ''கல்லாலின் நீழலிருந்து அறமுரைக்கும் கோலங்கண்டு பலர் கும்பிட நிருத்தமிடுவான், உமாதேவியை ஒரு பாகத்திலுடைய அம்மையப்பன், எமது கடவுள். இவரது பெருமை சொல்வதற்கு எளிதோ'' என்று சொல்லுமளவிலே புத்தகுருவும் தடுத்துரைசெய்வான். ''பல சொற்களைத்தொடு க்க முயலவேண்டுவதில்லை. முன்னே கல்லாலின் கீழிருந்து அற முரைத்தான் எம்மிறைவன்' என்று உரைத்தீர். கையிலே ஜெப மாலை கொண்டிருப்பது வேறொரு நல்ல தெய்வமுண்டென்று கருதியோ? உலகத்தார் வணங்க மணிமன்றில் நிருத்தம் செய் வான் எம்மிறைவன் என்று சொன்னீர். நல்லறிவையுடைய சிலர் பார்க்கத் தமதிச்சையாலே ஆடுவாருண்டோ? செம்மேனி

யில் வெண்ணீறு பரிசுத்தமானதென்றோ, உமதிறைவன் தரித்தான்? உமாதேவியை ஒரு பாகத்திலே உடையவன் இறைவனென்று பெருமைகொண்டுபேசினீர். பாதிதேகம் பெண் வடிவாயிருப்பது பார்மிசையுண்டோ? அப்படி உங்கள் இறை இருந்தால் நீர் துறவிலிருக்கும் தவமென்னே?" என்றிவ்வாறு சொல் மாரி பொழிந்தார்.

வாதவூரர் நகைசெய்து "எமது கடவுளுடைய அடியார்கள் பெருவாழ்வு பெற வந்தவர்கள். நல்லுபதேசமாகிய இதனை நற்றவமொன்றில்லாத உன்னெதிரே எவ்வாறு சொல்வது? உயர்ந்த ஜபமாலையினைக் கையிலே வைத்திருப்பது உலகமெல்லாம் உயர்தவங்கள் செய்தற்கென்று எண்ணாய். படைத்தொழில்களைச் சார்போடு பழக்குகின்ற பக்குவமுடைய ஆசிரியரது கையிலே கொள்ளும் ஆயுதங்கள் போலாகும். தவப்பயனை ஈட்டாதவர்கள்போல் ஊனக்கண்ணுடைய உலகங்காண எதிரே நடித்திடுவனென்றாய். விறகில் தீயினாகிய இறைவன் உடல்கலந்து உயிரையெல்லாம் ஆட்டுவிக்கும் ஒரு நட்டுவனே யன்றோ? எங்கள் தேவன் நீறுபூசியது என்னவென்று கேட்டாய். அது பிறந்திருக்கும் தம் புதல்வர் நோயை நீக்கும்படி அன்னையர் அருந்தும் மருந்தாகும். ஒரு பாகத்திலே உத்தமியை வைத்தல் பழுதென்றாய். உலகினர்க்குப் போகத்தைத்தரல் வேண்டுமென்று நினைத்தே இறைவன் மங்கையோடிருந்தான். உயிர்கட்கு யோகத்தை உதவும் பொருட்டு யோக உருவமுங் கொண்டிருக்கின்றான். குருடர் கையிலிருக்கும் தடியன்றி வேறொன்றும் அறியார். நீயும் இம்மொழிமாத்திரமன்றி வேறொன்றும் அறியமாட்டாய். மலரில் மன்னும் மணமென ஆன்மாக்களிடத்தில் இறைவன் கலந்து நிற்கும் நிலைமையினை நீ கண்டிலை. ஆதியாகியும், சிவயோகி

யாகியும், போகியாகியும், அரூபியாகியும், ஜோதியாகியும், ரூபியாகியும், இன்பக் கடலாகியும் அருண்மலையாகியும் இருக்கின்ற கடவுள் துயரில்லாத நீதி நிறைந்த பொற்சபையிலே நின்ற நிலையல்லால், யாதுமுடி, யாதுபதம், யாரறிவர் ?" என்று கூறி முடித்தார்.

பின்னர் அருங்கலைகளில் வல்லவராகிய வாதவூரர் சொல்லின் செல்வியாகிய அறிவுத் தெய்வத்தை நோக்கி முனிந்து, "நீயே பொய்ம்மொழி இயம்புவதென் ? நான்மறை சொல்லிய நீ பிறவாயாக்கைப் பெரியோனாகிய சிவபெருமானது அருள் இல்லையென்று சாதிக்கும் இம்மூடருடைய நாவைவிட்டு அகன்றுசெல். இது நின்னாணை, சிவனாணை." என்று மொழிந்தார். நாமடந்தை அஞ்சி வஞ்சர் நாவினின்றும் அகன்றாள். பின்பு அவர்களெல்லாம் நஞ்சுண்டவர்கள்போல் ஒடுங்கி நடுங்கி மதியிழந்து வாயிழந்து நின்றனர்.

இதனைக்கண்ட ஈழ நாட்டரசன் சிவஞான நூல்களில் குறைவில்லாத பயிற்சிவாய்ந்த வாதவூர்ச் செல்வரது பாத மலர்களில் இறைஞ்சி நின்று, "பேசத் தக்கவர் ஊமையராயினர், என்ன அற்புதம்! பேச்சில்லாத ஊமையாகிய என் புதல்விக்கு ஊமை நீங்கி நல்லுரை கூடும் அற்புதத்தையும் நீர் நிகழ்த்துவீராயின் அடியேன் உமக்கு நல்ல அடியனாவேன்" என்று சொன்னான். நாயனார் "அவளை நீ ஒல்லையில் இங்கு அழைத்துவா" என்றார். அப்பெண்மணியும் உண்மைபொருந்திய அச்சபைக்கு வந்தாள்.

"நண்ணியங்கு முன் நின்ற கன்னியை
நன்மையாளரும் நாடியே
கண்ணின் இன்னருள் செய்துபின்னர்
கரைத்துமுன்னர் இருத்தியே

உண்ணடுங்கி யிருந்த புத்தன்
உரைத்த தர்க்க மவைக்கெலாந்
தண்ணறுங்குழல் வல்லி! நல்லுரை
சாற்றுகென்று விளம்பினார்.''

பக்தி யோகத்தின் மர்மங்களை நன்குணராதபௌத்தர்கள் பகர்ந்த தர்க்க வார்த்தைகளுக்கெல்லாம் கற்றறிந்தவர்போல இக்கன்னி உத்தரம் சொன்னாள். அதனை மகிழ்வோடு கேட்ட வாதவூரர் மங்கையரது திருச்சாழல் விளையாட்டாக அப் பொருளை யெடுத்துப் பாடலாகத் தொடுத்தார். இப்பொழுது ஈழமன்னனுள்ளத்தில் ஞானம் உதயமாயிற்று. அவன் அஞ் செழுத்தியம்பி, நீறுபுனைந்து, தாழ்நின்று அடிமைத்திறந் தவ றாத அடிமையாயினான். சோழ மன்னனும் தில்லையூர் மன்னிய தொன்மையாளராகிய மூவாயிரவரும் 'பொன்னம்பலம் வாழ்க' வென்று ஒரு முகமாக நின்று முழக்கி வாதவூரரை வாழ்த்தி னார்கள்.

ஈழமன்னன் வாதவூரர் எதிரே நின்று அக்கமாலையும் வெண்ணீறும் புனைந்து சிவநேசனாகவே, சீவரத்துவராடை மூடிய உடம்பினராகவிருந்த பௌத்த குருவும் அவரது அடி யார்களும் ஊமைத்தன்மை தங்களுக்கும் நீங்கவேண்டுமென்று குறிப்பாலுணர்த்தி அடிதொழுது நின்றனர். "இன்னவாறு அருள் செய்வாய்! வாதவூர் எம்பிரானே!" என்று அன் புடன் சேர்ந்த மன்னனும் தில்லைமூவாயிரவரும் இறைஞ் சினர். வாதவூரர் மகிழ்ந்து அருட்பார்வை செய்ய, அவர் களெல்லாம் ஊமைத்தன்மை நீங்கி அவரை வணங்கி, "மாசிலாத மனமுள்ள பெரியவரே, முற்பிறப்பிற்செய்ததீவினை யின் பயனாக, வெண்ணீறணிந்து அஞ்செழுத்து உரைசெய்தி லேன். நீறுடன் புனையும் அக்கமாலைகளும் காவியாடைகளும்

கொடுப்பீர். இந்தச் சிவப்பு வஸ்திரத்தைச் சுடுவீர்!" என்று வேண்டினர். அழுக்காறில்லாத வாதவூரர் புன்சிரிப்புடைய முகத்தினராய்ப் 'பூர்வ ஜன்மத்தில் நீங்கள் தவஞ்செய்தீர்கள்' என்று கூறி நீறுதரித்து உருத்திராக்கமும் பூட்டினர்.

"பொய்யிலாவருள் ஐயரும்புலி யூருளார்களு முன்புசேர்
மையலாகிய வேடமின்றி வயங்கு நீறணிவார்களும்
துய்யகாவிரி நாடனுந்துகள் தீருமீழ்த மன்னனுஞ்
செய்யமாமணி மன்றுளார்திரு முன்புசென்று வணங்கினார்"

பொன்றுவதே முத்தி யென்றும் விடுதலை யென்றும் சொல்லி யுழன்ற பௌத்த சூனியவாதர்கள் அறிவு திருந்தப் பெற்றுப் பொன்னம்பலத்திலே சபாநாயகரைக்கண்டு வணங்கி அன்புடன் மாபெருந் தவசிகளாயினர். என்ன அதிசயம்! இதன் உட் பொருளென்னை! 'பல ஆறுகளுடனே கடல்மீது சென்ற தண் புனலல்லரோ, தில்லையெல்லையை நண்ணினோர்?' என்று பெரியோர் கூறுவர்.

சபையைவிட்டு அகன்றபின் யாவரும் தங்களிடத்திற்குச் சென்றனர். வாதவூரர் திருப்புலீசர் திருவடி வணங்கி அங்கே யிருந்தனர். தில்லை வாசிகளெல்லாம், "ஐயரே! எந்நாளும் நீர் இங்கே யிரும்." என்று வேண்டிக்கொண்டு தத்தம் மனை யகினர். பொன்னிநாடனும் ஈழநாடனும் முன்பு சேர்ந்திருந்த தீவினைகளெல்லாம் நீங்கி இச்சபையை வணங்கி வாதவூரரை யும் வணங்கி, மின்னுகின்ற மாமணி பதித்த மாளிகையில் அன் புடன் மேவினர். சைவராகமாகிய பௌத்தர்கள் வாதவூரரது அடிகளை வணங்கி நயந்து நெஞ்சினில் வஞ்சம் நீங்கிச் சிதம் பரமே தங்களுக்கு நிலைபெற்ற ஊரெனக் கருதி வைகினர்.

---

# VI

## திருவாதவூரர் திருவடி பேறுதல்

திருவாதவூரர் தில்லை மூதூரிலேயே தங்கி, திருப்படையாட்சி, திருப்படையெழுச்சி, அச்சோப்பத்து, யாத்திரைப் பத்து என்பவற்றைப்பாடி நற்பெருவாழ்வு உடையராயினர். அஞ்செழுத்தும் திரு நீறும் புவிமிசை விளங்கத்துன்பம் நீக்கும் சிவஞான விளக்கமாகிய திருவாசகம் அருளவந்த இப் பெரியார், சிற்றமில்லாத புலியும் பாம்பும் விளங்கும் சிதம்பரம் மேலான சிவபதம் என்று கண்டார். அந்நாளில் சிற்றம்பலத்தே திருநடம்புரியும் பெருமான் வேதிய வடிவங்கொண்டு முப்புரிநூல் மார்பும் புத்தகமும் தோன்றச் செய்ய சிவந்த திருவடிகள் நோவ எழுந்து வாதவூரர்க்கு எதிரே நின்றார். கருணையாலே முன்புறம் நின்ற வேதமுதல்வரை முகம் நோக்கி வாதவூரர் இன்புற்று இருமெனச்சொல்லி அவர் வந்தவரலாற்றை வினவினர். வேதியரும் 'நாமிருப்பதும் பாண்டிமண்டலம்' என்றார். பாண்டிவள நாடென்று கேட்டவுடன் வாதவூரர் பரிவுடன் உபசரித்து 'ஈண்டு நீர் வருதற்குக்காரணம் இயம்பும்' என்று வினவினர். அவ்வேதியர் "எம்மையாளும் இறைவனது ஆணையாகிய காரியம் உம்மைக்காண்டலே" யென்று பின்னும் கூறுவார்:— "சிற்சபையிலே நிருத்தஞ்செய்யும் புனிதரைப்பரியிலேறச்செய்த உமது பெருமையால் வாழ்ந்தது பாண்டிநாடு. தென்பெருந்துறையில் ஐயன் திருவடி வணங்கித்துன்பமொன்றின்றித் திருக்கழுக்குன்றத்துக்குப்போய்ப் பின்பு சிதம்பரமெய்தி புத்தரைவாதில் வென்றீர். இதனைக் கேள்விப்பட்டு யாவரும் மகிழ்ச்சிகொண்டார். மன்றுளாடும் ஐயனை நோக்கி அன்பினால் நீர் ஓதிய தமிழ்ப்பாடல் முழுவதும் துன்பம் நீங்க ஓதுதற்கு நினைத்து இங்கே வந்தேன். வேதியர் பெருமானே! விளக்கமாக இன்று நீர் பாடிக்காட்டல்வேண்டும். யான் அதனை எழுதவேண்டுகிறேன்" என்றார்.

"விண்ணகம் பரவு நாதன் இவ்வகை விளம்பச் சிந்தை
நண்ணும் அன்புடைய ராகி நற்சடை முடியார் தம்மை
யெண்ணரும் தமிழின் பாட்டால் இயம்பிய ஐயரப்போது
உள்நெகிழ்ந் துளமெய்ஞ் ஞான வாசக மூவந்து சொன்னார்."

அவர் சொல்லிய பாடலெல்லாம் சபாபதியாகிய வேதியர் தம்முடைய திருக்கரத்தில் ஏடு பிடித்துத் தெளிவாக வரைந்தருளினார். பின்னர் அவ்வேதியர் வாதவூரரை நோக்கிச் 'சபாநாயகர் மீது ஒரு கோவை பாடல்வேண்டும்' என்று வேண்டினார். தவத்தில் மிகுந்த வாதவூரர் உள மகிழ்ந்து பாடலுற்றார். அவர் பாடிவரக் கடவுள் எதிரேயிருந்து அதனையும் எழுதி முடித்தார். முடித்தபின் தம் புத்தகத்தைக் கட்டிக்கொண்டு அவர் அங்கு நின்றும் மின்னலைப்போல மறைந்தார். வாதவூரர் அயர்ச்சி கொண்டார்.

"எழுந்தனர் எங்கு மோடி நாடின ரெங்கொ லென்று
அழிந்தனர் மன்று ளாடும் ஆதியென் றறிந்த பின்னர்
பொழிந்தனர் கண்ணீர் எங்கே போயினை யென்று மண்மேல்
விழுந்தனர் பரமா னந்த வேலைவெள் ளத்து ளானார்."

வாதவூரர் மனம்வருந்தி எழுந்துஎங்குந் தேடியும்வேதியரைக் காணாராய் வியப்பெய்தி எம்பெருமானே இவ்வாறு தோன்றி மறைந்தனர் என்று தேறி ஆனந்த வெள்ளத்துள் அழுந்தியிருந்தனர். செந்தமிழ்க்கன்பு மிக்காராகிய சபாநாயகர் புத்தகத்தோடு சபைக்கு எழுந்தருளி அதனைத் தேவர்களுக்கெல்லாம் படித்துக் காட்டி 'நமக்கடிமை பூண்டு நயந்தவன் ஒருவன் சொன்ன நற்பாடல்களைக் கேளுங்கள்' என்று அவர்களுக்கும் அனுக்கிரகஞ் செய்தார். பின்பு 'மெய்த்தவ வாதவூரன் விளம்பிட எழுதிய இப்புத்தகம் அழகிய திருச்சிற்றம்பலமுடையார் கையெழுத்து' என்று திருக்கோவையார்

முடிந்தவிடத்தில் இறைவன் எழுதித் தம் சித்திர மலர்க் கையால் திருத்தமாக மைக்காப்புஞ் செய்தார்.

சபாநாயகர், வாதவூர் வித்தகருடைய நற்றவத்தினை உல கிற்கெல்லாம் உணர்த்த வெண்ணி, அத்திருமுறையை முனி வர் விண்ணோர் இறைஞ்சும் அம்பலத்துவாயிற்படியில் வைத்து விட்டு மறைந்தருளினர். பூசனைபுரியும் பிராமணன் ஒருவன் அதனைப்பார்த்து இப்புத்தகம் இங்கேயிருக்கும் புதுமை தெய் விகமாகுமென்று மனமுருகி நின்றான். இப்புதுமையினை அவன் தில்லையுள்ளவர்கட்கெல்லாம் கூறல்வேண்டுமென்று சபையைவிட்டகன்று 'தில்லை மூவாயிரவர் திருமுன்பு சென்று ஒரு புத்தகம் சபையின்படியிலே இருக்கிறது' என்று சொன் ஞன். இது அதியசமாமென்று அவர்களும் ஓடிவந்து படியின் மேல் சபாநாயகர் வைத்திருந்த புத்தகத்தைக்கண்டார்கள்.

"யாவரும் தம்முள் நாடி யெம்மிறை யுறையு மன்றுள்
தேவரும் புகுத வொண்ணுத் தெய்விகம் இதுவென் றெண்ணி
மேவுமன் பதனுல் அண்ணல் விளம்பிய சைவ நூலோ
தாவுசெந் தமிழோ வென்று பார்ப்பது தக்க தென்ருர்."

அருளும் அன்பும் நிறைந்த மூவாயிரவருள் ஒருவர் முன் அத்திருமுறையை மலர்கொண்டு அருச்சித்து வணங்கி அதனை அவிழ்த்து அகவல் நான்கையும், திருச்சதக முதலிய அறு நூறு பாடல்களையும் படித்தார். பின்பு அது முடிந்தவிடத்தில் 'திருச்சிற்றம்பலமுடையார் கை யெழுத்து' என்றிருப்பதை யும் படித்துமுடித்தார். திருமுறை படிக்கக் கேட்டவர்களெல் லாம் மெய்புளகித்துக் குறுவேர்வைகொண்டு கண்ணீரும் கசிந் துருகும் சிந்தையுமாய், "வாதவூரர் அருளிய இத்தமிழன்றி வீட்டு நெறிக்கு வேறு சிவநூலும் உளதோ!" என்று வியந்தனர். இனி இதன் பொருளை அவ்வாதவூரரைக்

'கொண்டே கேட்டறிவோ' மென்று நினைத்து அச்சபையை விட்டுப்போய் அவர் இருந்தவிடம் சென்று வணங்கினர். அவர்கள் அவர் எதிரே திருமுறையை வைத்துத் 'தேவர் பிரானுகிய இறைவன் இன்று செய்தகாரியம் இது' என்று இயம்பினர். அம்பலத்து வாசற்படியில் திருமுறையிருந்த விதங்கேட்ட வாதவூரர், " அற்பமாகிய என்பாடலை எல்லாரும் மனமகிழ்ந்து கொண்டருளப் பூமியிலே யான் முன் செய்த மாதவமென்னே! அறியேன்! அறியேன்!" என்றழுதார்.

புண்ணியர் இங்கு இவ்வாறு புலம்பியபின், தில்லைவாணர் கள் அளவுகடந்த அன்புடையவராகி அஞ்சலிபஸ்தராய் " கடவுள் பண்ணுலவும் உமது சிவஞானப்பாடல் கொள்ளும் படி இங்குவந்து என்னசெய்தார்." என்று ஆவலோடு வின வினர். அல்லலெனும் பிறவியில்லாத வாதவூரண்ணலும் நிகழ்ந்ததையெல்லாம் உரைத்தார். அவர்கள் அவரை மீட்டும் வணங்கி மனங்களிகூர்ந்து,

தில்லையிலெம் பெருமானைச் செப்பிய இத்தமிழ்மாலை
நல்லஅரும் பொருள்கூற வேண்டுமென நவின்றார்கள்.

திருவாதவூரர் சிவஞானந்தேங்கிய சிந்தையுடன் களி கூர்ந்து 'பூங்கனகப் பொதுவெதிரே சென்று இதற்குப் பொருள் சொல்வேன்' என்று கனசபையை நோக்கிச் சென் ஞர். எல்லாரும் அன்புடன் அவரைத் தொடர்ந்து சென்றனர்.

நின்றபுகழ்ப் புலியூரர் நேசமுடன் புடைசூழச்
சென்றவருக் கிடமான செம்பொனின் அம்பலமெய்தி
ஒன்றியஇத் தமிழ்மாலைப் பொருள்இவர் என்றுரைசெய்து
மன்றதனிற் கடிதேகி மறைந்தனர் அங்கவர்காண "

தில்லைமூவாயிரவர் நேசமுடன் புடைசூழ்ந்துவரச்சென்று அருளுக்குறையுளாகிய கனகசபை அடைந்ததும் வாதவூரர்

"இத்தமிழ்நூலுக்குப் பொருள் இவரே" என்று சபாநாயகரைச் சுட்டிக் காட்டினர். எல்லாரும் இதனைக்கண்டு வியந்து கொண்டிருக்கும் பொழுதே வாதவூரர் மன்றதனில் கடிதேகி மறைந்தருளினர்.

தில்லைவாணர் பொருள்கேட்கச் சபாபதியைப் பொருளென்று கைகாட்டித் தம் முருவங்காட்டாது மறைந்த வாதவூரரை இறைவனும், அவரது பேரன்பின் பெருமையைக் காட்டிப் பாலுடனே மேவிய நீராக்கித் தம்மிடத்தில் ஐக்கியஞ் செய்துகொண்டார். தேவதேவனாகிய சபாபதியை வாதவூரர் அடைந்தவிதம் கண்டவர்கள், புளகமெய்திக் கம்பிதமாகிநின்று துதித்து மனங்கசிந்து கண்ணீர் பொழிந்தனர்; மேனியெல்லாம் வேர்த்தனர்; ஆநந்த வடிவினராய்ச் செங்கை குவித்தனர்.

பூதம் நடங்கள் தொடங்கின போத மகிழ்ந்தனு குங்கண
நாதர் புகழ்ந்தனர் தும்புரு நாரதர் அங்கிசை கொண்டனர்
வேதமொ டந்தர துந்துமி மீது முழங்கி யெழுந்தன
மாதவ ரிந்திரர் பைந்தரு மாமலர் சிந்தி வணங்கினர்.

---

# சரித ஆராய்ச்சி

வாதவூரடிகளாகிய மாணிக்கவாசகர் நம் தமிழ் நாட்டிலே சைவ சமயத்தைவளர்த்த பரமாசாரியர்களுள் ஒருவர் என்பது வெளிப்படை. இவரதுசரித்திரம் கடவுள்மாமுனிவர் இயற்றிய * திருவாதவூரர் புராண'த்தில் விரிவாக உரைக்கப்பட்டுள்ளது. தமிழ் நூல்களுள் இந்நூல் மாணிக்கவாசகர் சரித்திரத்தையே பூர்த்தியாகக் கூற எழுந்தது. திருவாலவாயுடையார் திருவிளையாடற் புராணத்திலும் பரஞ்சோதி முனிவர் திருவிளையாடற் புராணத்திலும், வாதவூரர் சரித்திரத்தின் முற்பகுதியாகிய நிகழ்ச்சிகள் (மதுரையிலும் அடுத்த இடங்களிலும் வாதவூரர் சம்பந்தமாக நிகழ்ந்த நிகழ்ச்சிகள்) விரித்துக் கூறப்பட்டுள்ளன. இன்னும் மாணிக்கவாசகர் சரித்திரத்தைக் கூறும் நூல் * திருப்பெருந்துறைப்புராணம் என்பது. இது சரித்திரமுழுதும் சிறிது விரிவாகக் கூறுமாயினும் பிற்பட்டுத் தோன்றி முன்னூல்களிலுள்ள கதையையே கூறுகின்றது. இப்புராணத்திற்கு முந்தியதாகிய 'திருவுத்தரகோச மங்கைப் புராணம்' மாணிக்கவாசகர் முற்பிறப்பை ஒருவாறு விளக்குகின்றது; இந்நூலில் வாதவூரர் வரலாறு சிறிது மறைபொருளாகக் கூறப்படுவதேயொழிய, சரித்திரமொன்றும் விசேஷித்துக் காணப்படுவதில்லை. இவர் சரித்திரத்தைப்பற்றிக் கூறும் நூல்களில் வடமொழியில் 'ஸ்ரீ வாதபுர மகாத்மியம்' 'ஸ்ரீமணிவாக்கிய சரித்திரம் என்பனவும் தெரிகின்றன. இவைகளையன்றி வேறு சரித்திர ஆதாரங்கள் இருப்பதாகத் தெரியவில்லை.

---

* இது வடமொழியிலுள்ள 'ஆதிகைலாஸ மாகாத்மியம்' என்னும் நூலைத் தழுவி யெழுந்ததென்பர்.

திருத்தொண்டர் புராணத்தில் இவர் சரித்திரம் கூறப்படவில்லை யென்பது கவனிக்கத்தக்கது.

வாதவூரர் வரலாறுரைக்கும் புராண நூல்களுள் வேறுபாடு அதிகம் காணப்படவில்லை. புராண ஆசிரியர்கள் தத்தம் கற்பனைத் திறத்தையும் கதாநாயகர்பால் தமக்குள்ள பக்திப் பெருங்காதலையும் காட்டியுள்ளார். புராண வரலாறுகளுக்கும் இந்நாளில் நாம் சரிதவரலாறுகளென்று வழங்கும் வரலாறுகளுக்கும்விசேடமான ஒப்புமையில்லை. எனவே புதிய ஆராய்ச்சி முறையினின்று பழைய புலவர், பெரியார் வரலாறுகளை எழுத முயல்வோர் புராணமாதிய நூல்களில் காணப்படும் கதைகளை வடித்தெடுத்து நன்கு ஆராய்ந்து வாசகர்க்கு வழங்குவதே முறையாகும்.

## திருவாதவூரர் புராணமும் திருவாலவாயுடையார் திருவிளையாடற் புராணமும்

நமது புத்தகத்தின் முற்பகுதியாகிய 'மணிவாசகர் சரித்திரம்' 'திருவாதவூரர் புராண'த்தினையே தழுவி எழுதப்பெற்றதாகும். இப்புராணம் ஏழு சருக்கங்களில், 545 விருத்தங்களால் இயன்றது. இது சைவர்களால் பெரிதும் போற்றப்படும் நூல்களில் ஒன்று. தமிழ் கற்கும் மாணவர்க்கு ஆரம்பத்தில் இது ஓர் நற்றுணையாக அமைவதாகும். இனி 'வேப்பத்தூரார் புராண'மென்று வழங்கும் 'திருவாலவாயுடையார் திருவிளையாடற்புராணத்தில் வாதவூரர் சரித்திரம் கூறும்பகுதி ஆராயப்பெறும். இந்நூல் உத்தரமகாபுராணமென்னும் வடநூலின் ஒரு பகுதியாகிய 'சாரசமுச்சயம்' என்பதிலிருந்து மொழி பெயர்த்து இயற்றப்பெற்றது என்பர். உத்தரமகாபுராணம் இப்பொழுது கிடைக்கவில்லை. திருவாலவாயுடையார் திருவிளை

யாடற்புராணத்தின் ஆசிரியர், செல்லிநகர்ப் பெரும்பற்றப்புலியூர் நம்பி யென்பவர். இது 'பழைய திருவிளையாடல்' 'திருவிளையாடல்' எனவும் வழங்காநிற்கும். இது சோமசுந்தரக்கடவுளுடைய அற்புதத் திருவிளையாடல்கள் அறுபத்து நான்கையும் விரித்துத் தெரிவிப்பதாம். சில நூற்றாண்டுகளுக்கு முன், அதாவது பரஞ்சோதி முனிவர் திருவிளையாடற்புராணம் இயற்றுவதற்கு முன், இந்நூலே எல்லாராலும் படிக்கப்பெற்று வந்தது. இதுவே திருவிளையாடலென்று முற்காலத்தில்பாராட்டப்பட்டு வந்தது. இதன் செய்யுட்கள் பழைய உரைகளில் மேற்கோள்களாக எடுத்துக்காட்டப்பெற்றன. பரஞ்சோதிமுனிவர் திருவிளையாடற் புராணந்தோன்றிய பின்னரே இந்நூல் ஒளி மழுங்கிப்போயிற்று. இந்நூலாசிரியர் சுமார் 700 ஆண்டுகட்கு முந்தியிருந்தாரென்று தெரிகிறது.

இப்புராணம், இறைவன் திருவாதவூரர்க்காக மதுரையம்பதியில் செய்த திருவிளையாடல்களைக் கூறுங்கால் அவர் சரித்திரத்தையும் சிறிது விரித்துரைக்கின்றது. இத்திருவிளையாடல்கள் ஞானோபதேசம் செய்த திருவிளையாடல், நரிகுதிரையான திருவிளையாடல், குதிரை நரியான திருவிளையாடல், மண் சுமந்த திருவிளையாடல் என நான்காம். இந்நான்கு திருவிளையாடல்களையும் ஒருவாறு தொகுத்துக்கூறுவோம். வாதவூரர் புராணத்திலுள்ள வரலாற்றுடன் இவை எவ்வாறு மாறுபடுகின்றன என்பதை ஆராய்ந்து கொள்க.

ஞானோபதேசஞ் செய்தது:—பாண்டிவள நாட்டிலே வாயுபகவானால் பூசிக்கப்பெற்ற காரணத்தால் வாதபுரம் எனப்பட்ட திருநகரிலே சிவகணத்தலைவர் ஒருவர் வாதவூரர் என்ன வந்துதித்தார். இவர் பதினாறு எல்லையினில் சகலகலைகளிலும் மேதாவியாய்ப் பாண்டிய மன்னனிடத்தில் முதன் மந்திரி

உத்தியோகமும் பட்டமும்பெற்று விளங்கினர். ஒரு நாள் குதிரைப்பந்திக் காவலாளர் அரசர் முன் வந்து, "குதிரைகளிற் பெரும்பான்மைய மாண்டுபோயின. எஞ்சிய குதிரைகளும் நோயுற்றிருக்கின்றன. ஆதலால் புதிய குதிரைகள் வாங்கவேண்டும்" என்று உரைசெய்தார். கொற்றவன் வாதவூரரை அழைத்து, "நீர் வேண்டும் திரவியம் எடுத்துக்கொண்டு குதிரைகள் இறங்கும் பட்டினம் புகுந்து உயர்ந்த பரிகள் கொண்டணைந்திடவேண்டும்" என்றனன். வாதவூரரும் புறப்பட்டு விரைந்துசென்று திருப்பெருந்துறையை அடைந்தார். மூக்கரணங்களும் தந்நிலையில் மாறுபடுவதுகண்டு மனமுருகி வாதவூரர் அதிசயமுற்று, "சிவஸ்தலங்களுள் இதனைப்போன்ற தலமொன்றுமில்லை. கொண்டு வந்த பணத்தோடும் இங்கேயே அமர்வோம்" என்று தம்முள் தீர்மானித்தார். சேனைத்தலைவரை நோக்கி "ஆவணிமாதத்தில்தான் குதிரைகள் கரையில் வந்திறங்கும். நல்ல குதிரைகள் நானே கொண்டுவருவேன். அரசனுக்கு இச்செய்தியைத் தெரிவியுங்கள்" என்று அவர்களைப் போக விடுத்துப் பின்பு ஆலயத்துட் புகுந்து ஒரு குருந்த மரத்தின் நிழலிலே மாணவர்கள் சூழத் தம்வரவு நோக்கிச் சிவபெருமான் ஆசானாய் வீற்றிருந்ததைக் கண்ணுற்று வணங்கிநின்றார். இவரைத் தேசிகரும் முடிமுதல் அடிவரை நோக்கிக் கண்பார்வையாலேயே உபதேசித்து முறைப்படி தீட்சையாதிய செய்தார். வாதவூரர் பரமஞானியாய்த் திருவாசகம் ஓதுவாராயினர்; குதிரை கொள்ளுவதற்காகத் தாம் கொண்டுவந்த பொருளையெல்லாம் வாரிவாரி வழங்கினர். அரசன் சினமிக்கானாய் ஓலைவிடுத்தான். வாதவூரர் அரசன் உள்ளத்தை அறிந்து கலங்கிப் புலம்பினர்; விசும்பில் எழுந்த வாக்கினைக்கேட்டுமகிழ்ந்து 'குதிரை வரும்' என்று

அரசனுக்கு ஓர் ஓலை எழுதி விடுத்தார். வாதவூரர் மதுரை போய்ச் சேர்ந்தபின் அரசன் அவர்க்கு வரிசைகள் வழங்கினன். ஆனால் உறவினர் அவர் செய்தது தவறென்று புத்தி கூறத் தொடங்கி, முடிவில் 'பயனில்லை' என்று கண்டு வருந்தியகன்றார். குதிரைகள் வருமென்று நம்பிய அரசன் நகரை அலங்கரித்தான். குறித்தகாலஞ் சென்றும் பரிகள் வாராமையால் அரசன் சினங்கொண் டிருந்தான்.

நரி பரியானது:—வாதவூரரை வருத்திப் பொருளை வாங்குதல் வேண்டுமென்று அமைச்சர் அரசனுக்கு இடித்தறிவுறுத்தினர். அரசன் பிரம்படிக்காரரை விடுத்தான். வாதவூரருடைய பேரன்பு கண்டு அவர்கள் அவர்க்கு ஒரு தீங்குஞ் செய்திலர். பின்னர் அரசனேவலால் வாதவூரர் சிறையில் வைக்கப்பெற்றார். அவர் சிவபெருமானை நோக்கிக் குறையிரந்து வேண்டினர். சிவபெருமான் இரங்கிக் காட்டுநரிகளுக்குப் போதனைகள் செய்து பரிகளாக்கிக் கணநாதர்களோடு மதுரை நோக்கினர். இதனைக்கண்ட தூதர் சிலர் வாதவூரரிடத்துச் செய்தி சொல்லினர். இதனை அறிந்த அரசன் மகிழ்ந்து சித்திரமண்டபஞ் சென்று குதிரைகளின் வரவு நோக்கியிருந்தான். வரவு சற்றுத் தாழ்க்க அரசனுக்குக் கோபம் மிக்கது. அரசனேவலால் ஏவலாளர் வாதவூரரை அடித்தற்குநெருங்கினர். வாதவூரர் அடைக்கலப்பத்து முதலிய திருவாசகங்கள் ஓதினர். குயிற்பத்து முடியு முன்னமே குதிரைகள் மதுரையை அணுகின. பாண்டியன் வியந்து வாதவூரரை உபசரித்தான். பரிமேல் தோன்றிய சொக்கரது கோலங்கண்டு மகிழ்ந்த மங்கையர் சொல்வதுபோல் வாதவூரர் 'அன்னைப்பத்து' ஓதினர். சிவபெருமான் குதிரையின் பல நடைகளைக்காட்டினர். கணநாதர்களும் குதிரைகளைப் பலவிதமாக நடத்திக்காட்டினர். இறைவனைக் கண்ட

அரசன் கைகள் தாமாகவே தலைமீது சென்றன. எல்லாரும் விழுந்து தொழுதனர். அரசன் குதிரைகளை ஏற்றுக்கொண்டான். இராவுத்தராகிய சிவபிரானுக்கு அரசன் ஆடையை வரிசையாக வழங்கினான். அவர் அதைச் செண்டிலேற்றார். இதனைக்கண்டு சினந்த அரசனுக்கு வாதவூரர் 'அஃது அவர் தேசாசாரம்' என்றுகூறினர். அப்பொழுது வாதவூரர் பிடித்த பத்துப்பாடினார். அரசன் அரண்மனை சென்றான். சிவபெருமானும் கணங்களொடு மறைந்தார்.

குதிரை நரியானது:—மாயக்குதிரைகள், முகமுகம்பார்த்து, "நேற்றடிபட்டது போதாதென்று கழுத்தும் காலும் கட்டுண்டோமே! இங்கே கொள்ளும் புல்லும் இடுவர். மனிதரும் நம்மேல் தொத்துவர். விடியுமுன்னே நம்முருவங்கொண்டு நழுவி விடவேண்டும்" என்று சொல்லிக்கொண்டன. பின்னர் இவை கயிற்றை மென்றறுத்து நரிகளாகி இரவிலேயே கடைத்தெரு முதலான இடங்களில் நுழைந்து ஊளையிடத் தொடங்கின. உடனே காவலாளர் மனங்கலங்கி அரசனிடத்திற் சென்றுரைத்தனர். அரசன் அமைச்சரிடத்துச் சொன்னான். வாதவூரர் ஒன்று மறியாராய் அரசனை நோக்கி "என்ன நேர்ந்தது?" என்று வினவினார். அரசன் கடுமொழிகள் கூறி "இவரைக் கொடுஞ்சிறையில் வைத்து நம் பொருளனைத்தையும் வாங்குங்கள்" என்று முறை செய்வோர்க்கு ஆணைதந்தான். அவர்களும் வாதவூரரைச் சிறையில் வைத்தனர்.

மண் சுமந்தது:—வாதவூரர் சிறையில் திருவேசறவு பாடினார். பாடி முடித்தற்குள் சிவபெருமான் வருணனை நோக்கி, 'வைகையில் வெள்ளம் பெருகிவரச்செய்' என்று உத்தரவு செய்தார். வைகையிற் பெருவெள்ளம் வந்தது. திடுக்கிட்டெழுந்த பாண்டியன் 'ஒவ்வொரு மனைக்கும் கோலறையிட்டுக்

கரையை விரைவில் அடைக்கச் செய்வா" யென்று அதிகாரி ஒருவனுக்குக் கட்டளையிட்டான். இது இரவில் நிகழ்ந்த நிகழ்ச்சியாகும். பொழுது புலர்ந்ததும் அதிகாரி ஊரிலுள்ளார் ஒருவரையும்விடாது திரட்டி அவரவர்க்குரிய பாகத்தை அளந்து காட்டினன். மதுரையிலிருந்த ஒரு பிட்டு வாணிச்சி தனக்கு இட்ட கோலறைக்கு ஆளில்லாமல் அஞ்சியழுதாள். சிவபெருமான் கூலியாள் வடிவங்கொண்டு அவள் முன் வந்தார். அவள் 'என்னிடத்தில் பணமில்லை,பிட்டுண்டு, தருவேன்.' என்றாள். அவரும் அதை மடி நிறையக்கட்டிக்கொண்டு கரையிலுள்ள கூலியாட்களுக்கும் கொடுத்து உண்ணத்தொடங்கினர். கணக்கர் அப்பக்கம் வந்தபொழுது இவர் வேலையில் தம்மையொப்பவரில்லையென்று தெரிவித்துக் கொண்டார். அவர்கள் அப்புறம் செல்லலும் இவர் கூடையைத் தலைக்கணையாக வைத்துக்கொண்டு 'கால்மேல் கால்போட்டுப் பாடலுற்றார். கரை பார்க்கவந்த அரசனாட்கள் இவரை அதிகாரிமுன் கொண்டுபோனார்கள். "நீ யாரப்பா?' என்று கேட்ட அதிகாரியை நோக்கி இவர், "எனக்கு உற்றார் நண்பர் யாருமில்லை. சொத்தும் கிடையாது; மற்றவர்க்காக உழைப்பதே என் வேலை" என்றார். கொற்றாளாகிய சிவபெருமானை நோக்கி அதிகாரி 'விரைவில் மண்ணெடுத்துக் கரையடை' என்று சொல்லியனுப்பினன். இவரும் போய்ப் படுத்துக் கொண்டார். தண்டஞ்செய்வோர் இவரைப் பிடித்து நடுமுதுகில் சிவக்க அடித்தார்கள். இவரும் மறைந்துவிட்டார். அடித்த புளிமாறு அரசன் முதுகிலும் அரசி முதுகிலும் பிறர் முதுகிலும் ஊர்வன ஆதியவற்றின் முதுகிலும் பட்டுப் புடைப்பு உண்டாயிற்று. அப்பொழுது ஆகாயவாணியால் உண்மை தெரிந்து அரசன் வாதவூரரைச் சிறை நீக்கி வணங்கி

ஞன். அவரும் 'நமச்சிவாய வாஅழ்க' என்றெடுத்துச் சிவ புராணத் திருவகவலை ஓதிச்சென்றனர். ஆலயம் சென்று வாழ்த்தியபின் வாதவூரர் உத்தரகோசமங்கை, கழுக்குன்றம் என்னும் தலங்களில் தமது ஞானசாரியார் உருவங்கண்டு திருக் கோவையார் பாடினர். இறைவன் ஆகாயவாணி வாயிலாக 'நீ தில்லையம்பலத்துவா!' என்றுரைப்ப இவரும் அவ்வண் ணமே போய் 'அருந்தமிழ்களான' திருவாசகப் பாட்டுக்கள் பல பாடிப் புத்தவாதம் செய்து வெற்றிசூடி விளங்கினர். பின் னர் யாரும் போற்றும் பொற்பதமடைந்தார்.

## பரஞ்சோதி முனிவர் திருவிளையாடற் புராணம்

இது ஸ்ரீ ஹாலாஸ்ய மகாத்மியம் என்னும் வடநூலி லிருந்து மொழிபெயர்த்துச் செய்யுள் நடையாக இயற்றப்பெற் றது. இக்காலத்து எல்லாராலும் மிகுதியாகப் பாராட்டப்பெறு வது இந்நூலே. இந்நூலாசிரியராகிய பரஞ்சோதியார் சற்றேறக் குறைய 250 வருடத்திற்குமுன் வாழ்ந்தனர் என்பர். திரு வாலவாயுடையார் திருவிளையாடற் புராணத்திற்குப் பின்னரே, பரஞ்சோதிமுனிவர் திருவிளையாடற்புராணம் தோன்றிற்றென் பதில் ஐயமில்லை. பழைய திருவிளையாடற்புராணம் வட மொழி நூலார் கதைகளுக்கு விரோதமாயிருந்ததால், பரஞ் சோதிமுனிவர் வடமொழிக்கு இணங்கக் காவியலட்சணத் தோடு இந்நூல் செய்தருளினர் என்பர். இவ்விரண்டு புரா ணங்களும் சிவநேசச் செல்வர் செவிக்கு இன்னமுதமாகிய சோமசுந்தரக்கடவுள் திருவிளையாடல்களையே கூறுகின்றன. எனினும் இரண்டனுள் ஒன்றனோடு மற்றொன்றற்குள்ள வேறு பாடுகள் பல. திருவிளையாடல்கள் அமைந்துள்ள முறையிலும் வேறுபாடு உண்டு. பழைய புராணத்தின் செய்யுட்டொகை

1753. பரஞ்சோதியார் புராணத்தின் செய்யுட்டொகை 3363. பரஞ்சோதியார் கதையை விரித்துக்கூறுவர். வேப்பத்தூரார் சுருக்கமாகக் கூறுவர். சங்கச் செய்யுட்கள் உள்ளிட்ட பண்டைத் தமிழ்நூல்களிலுள்ள மதுரை நகர வரலாறுகளை விடாமல் தழுவிச்செல்வது திருவாலவாயுடையார் திருவிளையாடற் புராணமே; பரஞ்சோதியார் புராணமன்று. மேலும் பழைய புராணத்திலுள்ள திருவிளையாடல்களின் முறையைத் தழுவியே பலர் மதுரைமூதூர் சம்பந்தமான நூல்களைச்செய்து வந்தார்கள் என்பர். மாணிக்கவாசகர் சரித்திரத்தைக் கூறுகையில் பரஞ்சோதியாரும் நாலுபடலத்திற் கூறுகின்றார். காவிய லட்சணத்திற்கேற்ற கற்பனைச்செல்வம் கொழிக்கும் பரஞ்சோதியார் திருவிளையாடலிற் கூறப்படும் வாதவூரர் வரலாற்றுக்கும் பழைய திருவிளையாடலில் கூறப்படும் வரலாற்றுக்கும் வேறுபாடு அதிகம் காணப்படவில்லை; சில வேறுபாடுகளே உள்ளன. இத்தகைய வேறுபாடுகளை மாத்திரம் ஒருவாறு நோக்குவோம்.

வாதவூரர், அரிமர்த்தன பாண்டியனுடைய முதன் மந்திரியாக அமர்ந்து முறை செய்து வந்த நாளிலே, விடுதலைக் வாதவூரடி காதலுற்று ஞானகுருவை நாடிக்கொண் களுக்கு உபதே டிருந்தார். அரசன்வேண்டுகோளுக்கிணங்க சித்தது. இவர் குதிரைகள் வாங்கவேண்டுமென்று பொன்னெடுத்துப் பொற்சுமைகளை ஒட்டகங்களின் மீது விடுத்துத் தாம் சோமசுந்தரப்பெருமான் முன் சென்று, "இப்பொருள்களெல்லாம் தேவரீருக்கும் அடியார்களுக்கும் உரிமையாக்கப்பெறல்வேண்டும்" என்று வேண்டினர். அப்பொழுது ஆதிசைவர் திருநீறு கொடுக்க வாதவூரர் அதனை நன்னிமித்தமாகக்கொண்டு பிரயாணப்பட்டார். திருப்பெருந்துறையில்

ஆசாரிய வடிவங்கொண்டிருந்த இறைவன்பால் ஞானோபதேசம்பெற்றார். அப்பொழுது அவர் உள்ளத்தே பொங்கிய பேரின்பவெள்ளம், ஆசிரியரது தோத்திரமாகவெளிப்பட்டது. ஞானசாரியரும் வியந்து மகிழ்ந்து சொற்களாகிய மணிகளை அன்புவடத்தாற் கோத்த பாமாலையை அழுது சாத்தும் வாதவூரன்பருக்கு மாணிக்கவாசகன் என்னும் திருப்பெயரை அளித்தனர்.

வாதவூரர் குதிரைகள் கொண்டுவரவில்லையென்று வெகுண்ட அரசனது தண்டலாளர்கள் அவர்மேல் கல்லேற்றினார்கள். இறையருளால் வாதவூரர் வருந்தாதிருந்தார். 'இதுமாயம் போலும்' என்றுசீறி, அன்னார் அவருடைய கைகால்களில் கிட்டி

நரி பரியாக்கியது.

மாட்டிநெரித்து, அன்றிரவு அவரைச்சிறையிலிட்டு விலங்கு மாட்டினார்கள். ஆவணி மூலத்தன்று இறைவன் நரிகளைப் பரிகளாக்கிச் சிவகணங்களாகிய சேவகர்களோடு வேதப்பரிமீது வந்தார். மன்னன் தன்னை மறந்து அஞ்சலியஸ்தனாக நின்றான்; ஆனால் தன் செயலைக் குறித்து வெட்கமுற்றான். பின்பு அவன் குதிரைச் சேவகர் தலைவனுக்கு வெண்பட்டாடை வரிசையாக வழங்கினான். இறைவன் குதிரையினின்று இறங்கி அதனை யேற்று முடிமீது தரித்தார். குதிரைவீரர்க்கெல்லாம் பாண்டியன் வழங்கிய பட்டாடைகளை இறைவன் பெற்றுக்கொண்டு மறைந்தார்.

பரிகளெல்லாம் நடுநிசியில் நரிகளாகி ஊரைக்கலக்கி

பரி நரியாக்கியது.

யோடிப்போக, மன்னன் மணிவாசகரை வருத்திப் பொருள் வாங்கும்படி தண்டலாளரை யேவினான். அன்னார், உச்சிப்பொழுதில் பகலோனைப் பார்க்கும்படி வாதவூரரை நிறுத்தி, நெற்றியிலும் கரங்களிலும்

கல்லேற்றினர். அவர் கடவுளை நோக்கியழுதார். இறைவ னது ஆணையால் வைகை பெருக்கெடுத்துவந்தது; ஊர் 'அல் லோல கல்லோல'ப்பட்டது. வாதவூரரை வருத்திய தண்ட லாளரும் பொருள்களைக் காப்பதற்கு இல்லஞ் சேர்ந்தனர். அப்பொழுது வாதவூரர் ஆலயஞ்சென்று சோமசுந்தரக்கடவுள் அடிகளில் இறைஞ்சி இன்புற்றிருந்தார்.

ஆலவாயெம்பெருமான் வந்தி யென்னும் பிட்டுவாணிச் சிக்குக் கூலியாளென்று தம்மை எழுதுவித்துக் கொண்டார். மண் சுமந்தது. ஆனால் கரையை யடையாது விளையாடிக் கொண்டு இறுமாந்திருந்தார். ஏவலாளர் அரசனுக்கு விண்ணப்பஞ்செய்தனர். பாண்டியன் வெகுண்டு பொற்பிரம்பால் இறைவன் திருமுதுகில் அடித்தான். கூடை யோடுமண்ணை உடைப்பிலே கொட்டிவிட்டு இறைவன் மறைந் தார். அரசன் அசரீரியால் மாணிக்கவாசகர் பெருமையினை யுணர்ந்தான்; கோயிலில் அவரைக்கண்டு தொழுதான். அவரும் விடைகொண்டு பல சிவஸ்தலங்களையும் வணங்கிச் சிதம் பரத்தையடைந்தார்; சின்னாள் நடராஜப்பெருமானை வழிபட்ட பின், கிழக்கேயுள்ள தபோவனத்தில் சிவயோகம் செய்யத் தொடங்கினர். அந்நாளிலே ஈழமண்டலத்தினின்று புத்தர் வாதத்திற்கு வந்தனர். தம் கனவிலே தோன்றிய சபாபதியின் ஆணைக்கிணங்க, மூவாயிரவரும் வாதவூரரை யழைத்தனர். சிவயோகி மறுத்துவிட்டார். வருந்திய மூவாயிரவர் கனவில் மீளவும் தோன்றிய இறைவனது ஆணைக்கிணங்க, அவர்கள் திருப்பெருந்துறையில் குருந்தமரத்தடியிலே இறைவன் ஆட் கொண்ட முறைமையினையறிவித்து, அவரிட்ட 'மாணிக்க வாசகன்' என்ற பெயரால் அழைத்தனர். அவரும் வந்து புத்தரை வென்று பிறவியூமையாயிருந்த சோழன் புதல்வியை

'ஊமை' தீர்த்துச் சிலகாலம் திருவாசகம் பாடி இறைவனைத் துதித்துக்கொண்டு சிதம்பரத்திலேயே தங்கியிருந்து திருவடி பெற்றார்.

## திருப்பெருந்துறைப் புராணமும் திருவுத்தரகோசமங்கைப் புராணமும்

வாதவூரராகிய மாணிக்கவாசகர் திருப்பெருந்துறையில் ஞானோபதேசம் பெற்றனரென்று முன்வந்த நூல்கள் முழக்குகின்றன. இத்தகைய தலத்தின் வரலாறு கூறும் புராணங்கள் (பழையது, புதியது என) இரண்டுண்டு. புதியது, மகாவித்வான் மீனாட்சிசுந்தரம் பிள்ளையால் பாடப்பட்டது. மாணிக்கவாசகர் வரலாறு கூறுவதில், திருப்பெருந்துறைப் புராணங்கள், மற்றைய நூல்களைப் பார்க்கிலும் சிறந்தவையல்ல. எனவே, இப்புராணங்களில் காணப்படும் சரித வேறுபாடுகள் முக்கியமானவையல்ல என்பது எமது கருத்து.

திருவுத்தர கோசமங்கைப் புராணத்தில் எட்டாவது அத்தியாயத்தில் வாதவூரர் வரலாறு ஒரு சிறிது காணப்படுகின்றது. இது சரித ஆராய்ச்சிக்கு ஒரு சிறிதும் பயன்படுவதில்லை.

சுருங்கக் கூறுமிடத்து, மாணிக்கவாசகர் சரித்திர விஷயங்களில் திருவாதவூரர் புராணம் ஒன்றே ஆராய்ச்சிக்குரிய ஆதாரமாக மதிக்கத்தக்கது என்று கருதுதல்கூடும். "திருவாசகத்தினுள்ளேயிருந்து நமது சுவாமிகளின் சரிதத்திற்குக் கிடைக்கும் சிற்சில ஆதாரவுகளுக்குத் திருவாதவூரர் புராணமே ஒத்து இடந்தருவது காணத் தக்கதாகும்" என்று திரு. வி. கே. சுப்பிரமணியமுதலியாரவர்கள் கூறுவது கவனிக்கத் தகுந்தது. இனி ஸ்ரீமாணிக்கவாசக

சுவாமிகளின் சரிதத்திற்கும் திருவாக்கிற்கும் உள்ள தொடர் பினை ஒருவாறு ஆராயமுயல்வோம்.

## வாதவூரர் அவதாரம்

வாதவூரர் திருவாக்காகிய திருமுறைகள் இரண்டு. இவை திருவாசகம் திருக்கோவையார் என்பன. இந்நூல்களில் மாணிக்கவாசகர் சரிதப்பகுதிகளுக்கு எத்தகைய ஆதாரம் காணப்படுகின்றது ?

"தண்ணீர் தமிழளிக்கும் தண்பாண்டி நாட்டானை"

"அப்பாண்டி நாட்டைச் சிவலோகமாக்குவித்த
அப்பார் சடையப்பன்"

"ஏதமிலா இன்சொல் மரகதமே! ஏழ்பொழிற்கும்
நாதனமை யாளுடையான் நாடுரையாய்-காதலவர்க்
கன்பாண்டு மீளா அருள்புரிவான் நாடென்றும்
தென்பாண்டி நாடே தெளி."

இங்ஙனம் மணிவாசகர் திருவாக்கால் புகழ்ந்தோதப் பெறும் பாண்டிவள நாட்டிலே இவர் அவதரித்தருளினரென் பது திண்ணம். இந்நாட்டிலே வையையாற்றங்கரையிலே மதுரைமூதூருக்குச் சுமார் பதினன்கு மைல் தூரத்திலே யுள்ள திருவாதவூர் என்னும் சிவஸ்தலம் இவரது அவதார ஸ்தலமாகுமென்று இவர் சரித்திரம் கூறும் நூல்களெல்லாம் கூறுகின்றன. எனினும் இவர் வாதவூரில் அவதரித்தார் என்ப தற்கும் இவர் நூல்களில் ஆதாரமில்லை. திருவாசகம் கீர்த்தித் திருவகவலில்,

"வாதவூரினில் வந்தினிதருளிப்
பாதச்சிலம்பொலி காட்டியபண்பும்"

என்று பல ஸ்தலங்களையும் பிரஸ்தாபிக்கும்போது வாதவூரின் பிரஸ்தாபமும் வருகின்றது. இறைவன் பரிமேலேறி வரும் பொழுது வாதவூரடைந்தவுடன் மாணிக்கவாசகருக்குத் தம் பாதச் சிலம்பொலி கேட்கச் செய்தார் என்று திருவாலவாயுடையார் திருவிளையாடற்புராணம் கூறுகின்றது. எல்லா வரலாறுகளும் மாணிக்கவாசகரை வாதவூரரென்று அழைப்பதாலும், இவர் சரிதம் மாத்திரம் கூற வெழுந்த புராணம் திருவாதவூரர் புராணம் என்றே அழைக்கப்பெறுவதாலும், இவர் வாதவூரிற் பிறந்தார் என்பதற்கு வெளிப்படையான ஆதாரம் இவர் நூல்களில் பெறப்படாதிருப்பினும், இவர் வாதவூரில் அவதரித்தார் என்று கொள்வது தவறாகாது.

இவரது பிள்ளைத்திருநாமம் இதுதானென்று துணிந்து கூறுதற்குத் தக்க ஆதாரமில்லை. மாணிக்கவாசகர் என்பது காரணப் பெயரேயாகும். வாதவூரில் கோயில்கொண்டிருக்கும் சிவபெருமான் 'வாதபுரேசர்' என்றழைக்கப் பெறுவர். இத் திருநாமத்தையே இவர் பெற்றோர் இவருக்கு இட்டிருத்தல் கூடும் என்பர்.

## சற்குரு தரிசனம்

வாதவூரரது உள்ளம் பெரிதும் ஆன்மவிசாரணையில் ஈடுபட்டிருந்ததென்பது அவர் திருவாக்கால் இனிதறியப்படும். இவர் திருப்பெருந்துறையில் சற்குரு தரிசனஞ் செய்து ஞானோபதேசம் பெற்றார் என்று இவர் வரலாறுகளெல்லாம் ஒருமுகமாகக் கூறுகின்றன. இவரது தனிப்பெருந் தோத்திர நூலாகிய திருவாசகத்தில் திருப்பெருந்துறை அடிக்கடி பிரஸ்தாபிக்கப் பெறுகின்றது. சிவபெருமானே அந்தணனாகிவந்து மாணிக்கவாசகரை யாட்கொண்டருளினார் என்று புராணங்கள் கூறுகின்றன.

" ... ... ... உனக்குக்
கலந்த அன்பாகிக் கசிந்துள் ளுருகு
நலந்தா னிலாத சிறியேற்கு நல்கி,
நிலந் தன்மேல் வந்தருளி நீள்கழல்கள் காட்டி
நாயிற் கடையாய்க் கிடந்த அடியேற்குத்
தாயிற் சிறந்த தயாவான தத்துவனே"

(திருவா. சிவபுராணம் 56—61)

" அந்தண னாகி யாண்டுகொண் டருளி
இந்திர ஞாலம் காட்டிய இயல்பும்"

(கீர்த்தித்திருவகவல் 42—43)

" திருவார் பெருந்துறைச் செல்வ னாகிக்
கருவார் சோதியில் கரந்த கள்ளமும்"

(கீர்த்தித்திருவகவல் 54—55)

" என்னே ரனையோர் கேட்கவந் தியம்பி
அறை கூவியாட் கொண்டருளி
மறையோர் கோலம் காட்டியருளலும்"

(திருவண்டப்பகுதி 147—149)

" திருவார் பெருந்துறை வரையில் ஏறி
... ... ... ... ...
அண்டத்தரும் பெறன்மேகன் வாழ்க"

(திருவண்டப்பகுதி 68—95)

" அருபரத்தொருவன் அவனியில் வந்து,
குருபர னாகி யருளிய பெருமையை"

(போற்றி 75—76)

" மெய்தரு வேதிய னாகி வினைகெடக்,
கைதர வல்ல கடவுள் போற்றி"

(போற்றி 88—89)

" என்னையும் ஒருவனாக்கி யிருங்கழல்,
சென்னியில் வைத்த சேவக போற்றி "

(போற்றி 129—130)

" ஈறிலாத நீ எளியை யாகிவந்(து)
ஒளிசெய் மானிடமாக நோக்கியும் "

(திருச்சதகம்—91)

" தென்னன் பெருந்துறையின் மேயானை "

(திருவெம்பாவை)

" செங்க ணெடுமாலும் சென்றிடந்தும் காண்பரிய
பொங்கு மலர்ப்பாதம் பூதலத்தே போந்தருளி
எங்கள் பிறப்பறுத்திட் டெந்தரமு மாட்கொண்டு
தெங்கு திரள்சோலைத் தென்னன் பெருந்துறையான்
அங்கண னந்தணனா யறைகூவி வீடருளும்
அங்கருணை வார்கழலே பாடுதுங்கா ணம்மானாய் "

(திருவம்மானை—1)

" பெண்ணாளும் பாகனைப் பேணு பெருந்துறையில்
கண்ணார் கழல்காட்டி நாயேனை யாட்கொண்ட
அண்ணா மலையானைப் பாடுதுங்கா ணம்மானாய் "

(திருவம்மானை—10)

" தெளிவந்த தேறலைச் சீரார் பெருந்துறையில்
எளிவந் திருந்திரங்கி யெண்ணரிய வின்னருளால்
ஒளிவந்தென் னுள்ளத்தி னுள்ளே யொளிதிகழ
அளிவந்த வந்தணனைப் பாடுதுங்கா ணம்மானாய் "

(திருவம்மானை—18)

" அருவாய் மறைபயி லந்தணனா யாண்டுகொண்ட
திருவான தேவற்கே சென்றூதாய் கோத்தும்பீ. "

(திருக்கோத்தும்பி—14)

"உரு நாமறியவோ ரந்தணனா யாண்டுகொண்டான்"
(திருத்தெள்ளேணம்—1

"அந்தணனாய் வந்திங்கே யழகியசே வடிகாட்டி
எந்தமரா மிவனென்றிங் கென்னையு மாட்கொண்டருளும்
செந்தழல் போற்றிருமேனித் தேவர்பிரான் வரக்கூவாய்"
(குயிற்பத்து—10)

"அந்தண னாவதுங் காட்டி வந்தாண்டா
யாரமுதே பள்ளி யெழுந்தருளாயே"
(திருப்பள்ளி யெழுச்சி—8)

"பத்தர்சூழப் பராபரன் பாரில்வந்து பார்ப்பானென"
(சென்னிப்பத்து—4)

"எனையாண்ட, பார்ப்பானே!" (புணர்ச்சிப்பத்து—10)

இத்தகைய வாக்கியங்களால் சற்குரு வேதியவடிவமாக இவருக்குத் திருவடி தீக்ஷைசெய்து ஆட்கொண்டருளினார் என்பது இனிது புலனாகின்றது.

"......................சங்கரா! கருணையினால்
பெரியோனொருவன் கண்டுகொளென்றுன் பெய்கழல்காட்டி"
(எண்ணப்பதிகம்—2)

"சங்கரா! கருணையால் பெரியோனாகிய ஒருவன் கண்டு கொள்வாயென்று கழலணிந்த உனது திருவடியைக்காட்டி யருளினை"னென்று மாணிக்கவாசகர் தமது அந்தணகுருவைப் பாராட்டிக்கூறுகின்றார்.

"தேனையும் பாலையுங் கன்னலையு மொத்தினிய [வானவன்."
கோனவன்போல் வந்தென்னைத் தன்றொழும்பிற் கொண்டருளும்
(திருவம்மானை—14)

"தேன் முதலியபோல எனக்கினிமைதரும் இறைவனைப் போல் வந்து என்னைத் தன் தொண்டுக்குரியனாக்கியருளின தேவன்" என்று மாணிக்கவாசகர் தமது சற்குருவைப் பாராட்டிப் போற்றுகின்றார்.

## இறைவன் குதிரைச்சேவகனாக எழுந்தருளியது.

வாதவூரடிகளுக்காக இறைவன் நரிகளைப் பரிகளாக்கித் தாம் ஓர் பரிப்பாகனாக எழுந்தருளினார் என்பது புராணங்களின் கூற்று. இக்கதைக்கு எத்தகைய பிரமாணம் திருவாசகத்தில் கிடைக்கின்றது?

"குதிரையைக் கொண்டு குடநா டதன் மிசைச்
சதிர்படச் சாத்தாய்த் தானெழுந் தருளியும்
நரியைக் குதிரை யாக்கிய நன்மையும்
ஆண்டு கொண்டருள வழகுறு திருவடி
பாண்டியன் தனக்குப் பரிமா விற்று
ஈண்டு கனக மிசையப் பெறாஅது
ஆண்டா னெங்கோ னருள்வழி யிருப்பத்
தூண்டு சோதி தோற்றிய தொன்மையும்
அந்தண னாகி யாண்டுகொண் டருளி
யிந்திர ஞாலங் காட்டிய வியல்பு
மதுரைப் பெருநன் மாநகரிருந்து
குதிரைச் சேவக னாகிய கொள்கையும்"

என்று கீர்த்தித்திருவகவல் கூறுகின்றது.

"'நரியைக் குதிரையாக்கிய நன்மையும்' என்று பின் வருவதினின்று அதனைப் பிரித்த ஏது புலப்படவில்லை. பாண்டியனுக்குக் குதிரைவிற்றுப் பொன்னைப் பெறவில்லையென்று குறித்ததுபோலத் தோன்றுகின்றது. இதன்பின் அந்தணனாய்க் கடவுள் ஆண்டுகொண்டனரென்றுரைத்ததும்,

பின்னும் ஒருமுறை மதுரையில் இருந்து குதிரைச் சேவக ஞயினர் என்றதும் முறைப்பிறழ்வோ அன்றிப் புராணக் கதை கள் சிறிது பொருந்தா என்று காட்டுவனவோ?'' என்று திருவாளர் எஸ். அனவரதவிநாயகம்பிள்ளையவர்கள் எழுப் பும் ஐயங்கள் ஆராயத்தக்கன.

"பந்தம் பறியப் பரிமேற் கொண்டான்றந்த
வந்தமிலா வானந்தம்" (திருவம்மானை—3)

"ஞால மிகப்பரி மேற்கொண்டு நமையாண்டான்"
(திருப்பொன்னூசல்—8

"வெள்ளைக் கலிங்கத்தர் வெண்டிரு முண்டத்தர்
பள்ளிக் குப்பாயத்த ரன்னே என்னும்
பள்ளிக்குப் பாயத்தர் பாய்பரிமேல் கொண்டென்
உள்ளங் கவர்வரா லன்னே என்னும்" (அன்னைப்பத்து)

"நற்பரிமேல் வருவானை" (குயிற்பத்து—6)

"தாவிவரும் பரிப்பாகன்" ( ,, —8)

"வான்புரவி யூரும் மகிழ்ந்து" (திருத்தசாங்கம்—6)

"தெரிவுற நின்றுருக்கிப் பரிமேற்கொண்ட சேவகனார்"
(திருப்பாண்டிப்பதிகம்—1)

"பாரின்பவெள்ளங் கொளப் பரிமேற்கொண்ட பாண்டியனார்"
(திருப்பாண்டிப்பதிகம்—3)

"பாண்டியனார் புரவியின்மேல்வர" ( ,, —9)

"கொற்றக் குதிரையின்மேல்வந்து
கூடிடுமேற் குடிகேடு கண்டீர்"
(திருப்பாண்டிப்பதிகம்— )

"நரிகளெல்லாம், பெருங்குதிரையாக்கிய வாறன்றே
யுன் பேரருளே" (திருவேசறவு—1)

" ஆடலமர்ந்த பரிமா வேறியையன் பெருந்துறை யாதியந்நாள்
ஏடர்களை யெங்கு மாண்டுகொண்ட வியல்பறிவார் "
(திருவார்த்தை—4)

" வண்சாத்தினோடுஞ் சதுரன் பெருந்துறை யாளியன்று
மங்கையர் மல்கு மதுரை சேர்ந்த வகையறிவார் "
(திருவார்த்தை—10)

" தேவருங் காணாச் சிவபெருமான் மாவேறி,
வையகத்தே வந்திழிந்த வார்கழல்கள் வந்திக்க "
(திருவெண்பா—9)

" பரியின்மேல் வந்த—வள்ளல் மருவும்
பெருந்துறையை வாழ்த்துமின்கள் ?"
பண்டாயநான்மறை—2)

" நரியைக் குதிரைப்பரியாக்கி ஞாலமெல்லா நிகழ்வித்து "
(ஆனந்தமாலை—7)

ஆதிய வாக்கியங்கள் சிவபெருமான் பரிமேற்கொண்டு மதுரை சேர்ந்தாரென்பதை வலியுறுத்துகின்றன. நரியைக் குதிரையாக்கிய திருவிளையாடல் இவர் உவந்தெடுத்தாலும் ஓர் பழங்கதை போலும்! பரிகள் மறுபடியும் நரிவடிவை யடைந்தன என்னுங்கதைக்குத் திருவாசகத்தில் ஒரு சிறிதும் ஆதாரம் காணப்படவில்லை.

### இறைவன் மண் சுமந்தது.

சிவபெருமான் பிட்டுவாணிச்சிக்குக் கூலியாளாக எழுதுவித்துக்கொண்டு மண் சுமந்து பிரம்படிபட்ட கதைக்கு ஆதாரம் திருவாசகத்தில் உண்டு.

" ஆங்கது தன்னி லடியவட்காகப்
பாங்காய் மண்சுமந் தருளிய பரிசும் "
(திருவா. கீர்த்தித்திருவகவல்—49)

"மண்சுமந்து கூலிகொண்டக் கோவான் மொத்துண்டு,
புண்சுமந்த பொன்மேனி பாடுதுங்காண்" (திருவம்மானை—8)
"மண்பால் மதுரையிற் பிட்டமுது செய்தருளித்
தண்டாலே பாண்டியன் றன்னைப் பணிகொண்ட
புண்பாடல்பாடி நாம் பூவல்லி கொய்யாமோ?"
(திருப்பூவல்லீ,16)

"பிட்டுநேர்பட மண்சுமந்த பெருந்துறைப் பெரும்பித்தனே!"
(திருக்கழுக்குன்றப்பதிகம்—2)

ஆனால் இக்கதைக்கும் மாணிக்கவாசகர் சரித்திரத்திற்கும் உள்ள தொடர்பு வெளிப்படவில்லை.

## முக்கியமான சரிதப்பகுதிகள்

மேலே காட்டிய குறிப்புக்களைக்கொண்டு புராணமுடையார் மாணிக்கவாசகர் சரித்திரத்தைத் தம் கற்பனையுடன் கலந்து விரித்துரைப்பாராயினர் என்று ஊகித்தல் தவறாகாது. மாணிக்கவாசகர் பாண்டிநன்னாட்டிலே மதுரைக்கடுத்த இடங்களில் பிறந்து வளர்ந்தனர் என்பதும், திருப்பெருந்துறையில் ஓர் அந்தணர்பால் ஞானோபதேசம் பெற்றனரென்பதும், தமது சற்குருவை இறைவனாகவே கொண்டனரென்பதும், அவ்விறைவனே பரிமேற்கொண்டு இவரது உள்ளங்கவர்ந்து இவருக்கு "வாழ்வறவாழ்விக்கும் மருந்தாயி" னன் என்பதும், பல ஸ்தலங்களைத்தரிசித்து இவர் முத்தி பெற்றனரென்பதும் இவரது சரித்திரத்தின் முக்கியமான பகுதிகளாகும். இவை, சைவத்திருமுறைகள் பன்னிரண்டுள் எட்டாவது திருமுறையாகப் பாராட்டப்பெறும் இவர் திருவாக்காகிய திருவாசகத்தால் ஆதரிக்கப்பெறுகின்றன. இவர் முதன்மந்திரியாயிருந்தார் என்பதற்கு இவர் திருவாக்கில் ஆதாரமில்லை. எனி

னும் இவருக்கும் பாண்டிய மன்னனுக்கும் தொடர்பு இருந்த தென்பது இவரது போற்றித்திருவகவலினின்றும் திருப்பாண்டிப் பதிகத்தினின்றும் ஒருவாறு உய்த்துணரப்படும். பல ஸ்தலங்களிலும்சென்று இவர்பாடல்கள் பாடியிருந்தபோதிலும் இருபத்திரண்டு பதிகங்களும் மூன்று அகவல்களும் சிதம்பரத்தில் அருளிச்செய்யப்பட்டனவென்பர். எனவே இவர் தம் இறுதிக்காலத்தைத் தில்லையிலே கழித்தனர் என்று ஊகித்தல் கூடும்.

ஆனால் அடியார்கள் பொய்கையில் எரியிடை மூழ்கி முத்திபெற்றனர் என்ற புராண கதை, கீர்த்தித் திருவகவலில் காணப்படும் குறிப்போடு மாறுபடுகின்றது.

"நாயினேனை நலமலி தில்லையுள்
கோல மார்தரு பொதுவினில் வருகென
ஏல என்னை யீங்கொழித் தருளி
அன்றுடன் சென்ற அருள்பெறும் அடியவர்
ஒன்ற ஒன்ற உடன்கலந் தருளியும்
எய்தவந் திலாதார் எரியிற் பாயவும்
மாலது வாகி மயக்க மெய்தியும்
பூதலம் அதனிற் புரண்டு வீழ்ந் தலறியும்
கால்விசைத் தோடிக் கடல்புக மண்டி
நாத நாத! என்றழு தரற்றிப்
பாத மெய்தினர் பாத மெய்தவும்
பதஞ்சலிக் கருளிய பரம நாடக என்
றிதஞ்சலிப் பெய்தநின் றேங்கினர் ஏங்கவும்
எழில்பெறும் இமயத் தியல்புடை யம்பொற்
பொலிதரு புலியூர்ப் பொதுவினில் நடநவில்
கனிதரு செவ்வா யுமையொடு காளிக்

கருளிய திருமுகத் தழகுறு சிறுநகை
யிறைவன் ஈண்டிய அடியவ ரோடும்
பொலிதரு புலியூர்ப் புக்கினி தருளினன்
ஒலிதரு கைலை யுயர்கிழ வோனே.

(கீர்த்தித்திருவகவல், 127-146)

திருச்சதகத்திலும் பிரார்த்தனைப்பத்திலும் காணப்படும் குறிப்புக்களை மேலே குறித்த திருவகவலில் அடிகளுக்குப் பொருத்தமாகப் பொருள்செய்துகொள்வதே முறையாகும். இங்ஙனம் ஆராயுமிடத்து, அடியார்கள் பொய்கையிலே எழுந்த தீயில் பாய்ந்து வீடுபெற்றனர் என்னும் அற்புதம் திருவாசகத்தால் ஆதரிக்கப்பெறவில்லை யென்பது தெளிவாகும்.

மாணிக்கவாசகர் சரிதமுரைக்கும் புராணங்களுக்கு அவரது திருவாக்கிலே எத்தகைய அகச்சான்று கிடைக்கிறதென்பதை ஒருவாறு ஆராய்ந்தோம். இனி இவர் காலத்தைப்பற்றி ஆராய்வோம்

# கால ஆராய்ச்சி

ஓராசிரியரது சரிதத்தையும் நூலையும் ஒப்பிட்டு ஆராய்வதற்குக் கால ஆராய்ச்சி இன்றியமையாததாகும். இவ்விஷயத்தில் நமது முன்னோர் சிரத்தைகொண்டதேயில்லை. ஆழ்வார்களிற் சிலர் கலியுக ஆரம்பத்திலும் துவாபரயுக அந்தத்திலும் இருந்தனர் என்று நம்புவோருண்டு. திருமூலர் மூவாயிரம் ஆண்டுகள் யோகத்திலிருந்ததாக நம்புவோருண்டு. சடவாழ்வை மாயமாக மதிக்கும் கொள்கையுடைய நம்மவர்கள் கால ஆராய்ச்சித்துறையில் காலம்போக்காமலிருந்தது ஆச்சரியமன்று. எனினும் 'தொன்று தோன்றிய யாவையும் தூயன' என்ற நம்பிக்கையால் இவர்கள் நூற்றாண்டுகளை ஆயிரக்கணக்கான வருஷங்களாகப் பெருக்கி யுரைப்பதுமுண்டு. மாணிக்கவாசகர் காலத்தைக் குறித்து, அவரது சரித்திரம் கூறும் புராணங்களெல்லாம் மௌனம் சாதிக்கின்றன. அடியார்கள் முத்திபெற்ற திருநட்சத்திரமே சைவசமயிகளால் முக்கியமானதென்று கருதப்படுகிறது. இது குருபூசைநாளாகக் கொண்டாடப்படும். மாணிக்கவாசகர் தமது முப்பத்திரண்டாம் ஆண்டில் ஆனி மகநட்சத்திரத்தில் முத்திபெற்றனரென்பர். ஆனால் இவர் இன்னகாலத்திருந்தார் என்பதைக் குறித்துக் கர்ணபரம்பரையும் உரைக்க இல்லை.

மாணிக்கவாசகர் காலத்தைப்பற்றி ஆராய்வோர் ஒவ்வொருவரும் ஒவ்வொரு கொள்கையை வெளியிட்டுள்ளார். கி. பி முதல்நூற்றாண்டுமுதல் பதினோராம் நூற்றாண்டு வரை இவர்கள் குறிப்பிடும் கால எல்லை பரந்து செல்லுகின்றது. சமயகுரவர் நால்வரையும் முறைப்படுத்தும்பொழுது மூவருக்குப்பின் மாணிக்கவாசகரை வைத்துக் கூறுவதே

சைவர் மரபு. இவர் திருமுறை மூவர் திருமுறைகளுக்குப் பின்னே நம்பியாண்டார் நம்பிகளால் வகுக்கப்பட்டுளது. எனவே ஞானசம்பந்தராதிய மூவருக்கும் பிந்தியவர் மாணிக்க வாசகர் என்ற கொள்கைக்கு ஒருவாறு ஆதாரம் கிடைக்கின்றது. ஆனால் சிலர் மூவருக்கு இவர் முந்தியவர் என்ற கொள்கையினையும் ஆதரித்துவந்துள்ளார். இவர்கள் திருமுறை வகுப்பைக்கொண்டு ஊகிப்பது தகாதென்று கூறுகின்றனர். சுந்தரமூர்த்திநாயனருக்கு மணிவாசகர் காலத்தால் முற்பட்டவராயின் தமது திருத்தொண்டத்தொகையில் சுந்தரமூர்த்திகள் இவரைக் கூறாது விட்டதற்குக் காரணமென்ன? இதற்குச் சொல்லும் சமாதானம் காய்தல் உவத்தலகற்றி ஆராய்வோர் ஒப்புக்கொள்ளத் தக்கதன்று. திருத்தொண்டத்தொகையில் இவர் சேர்க்கப்பெறாததால் நம்பியாண்டார் நம்பிகள் தமது திருத்தொண்டர் திருவந்தாதியிலும் இவரைக்குறிப்பிடவில்லை. இக்காரணம்பற்றியே சேக்கிழாரது திருத்தொண்டர் புராணத்தும் இவர் வரலாறு கூறப்படவில்லை. வீரசைவராதலின் குறித்த பிரபந்தங்களில் இவர்பெயர் வாராதொழிந்தது என்று சிலர் கூறுவர். ஆனால் மாணிக்கவாசகர் வீரசைவரென்பதற்குத் தக்க ஆதாரமில்லை.

மாணிக்கவாசகர் சுந்தரமூர்த்தி நாயனருக்கு முற்பட்டிருந்தால் சுந்தரர், பெயர் குறித்துத் திருத்தொண்டத்தொகையில்இத்தகையபெரியாரைச் சேர்க்காமல் விட்டிருத்தல் கூடுமா? எனவே இவர் சுந்தரருக்குப் பின்னிருந்தவர் என்னும் கொள்கை உறுதியாகின்றது. சுந்தரமூர்த்தி நாயனர்காலம் 9-ம் நூற்றுண்டின் முற்பகுதயென ஒருவாறு நிச்சயிக்கப்பட்டுள்ளது. எனவே மணிவாசகர் 9-ம் நூற்றுண்டிலாவது அதற்குப் பின்னுவது வாழ்ந்திருத்தல்வேண்டும். இனிப்பட்டினத்தடி

கள், பெருந்துறைப்பிள்ளையென்று இவரைத் துதித்திருப்பதால் இவர் பட்டினத்தடிகளுக்கு முற்பட்டவரென்பது வெளிப்படை. பட்டினத்தடிகளின்காலம் 10-வது நூற்றாண்டென்பது ஆராய்ச்சியாளர் துணிபு. எனவே மணிவாசகர் 9-ம் நூற்றாண்டுக்குப் பின்னும் 10-ம் நூற்றாண்டுக்கு முன்னும் வாழ்ந்திருத்தல் வேண்டும்.

## திருக்கோவையார் தரும் சான்று.

"சிறைவான் புனற்றில்லைச் சிற்றம்பலத்துமென் சிந்தையுள்ளும்
உறைவான் உயர்மதிற் கூடலின் ஆய்ந்த ஒண்டீந்தமிழின்
[துறை"

"மன்னவன் றெம்முனை மேற்செல்லுமாயினு மாலரியே
றன்னவன்றேர் புறத்தல்கல் செல்லாது வரகுணனுந் [கெல்லாம்
தென்னவனேத்து சிற்றம்பலத்தான் மற்றைத்தேவர்க்
முன்னவன் மூவலன் ளுமற்றோர் தெய்வ முன்னலளே"

"புயலோங் கலர்சடையேற்றவன் சிற்றம்பலம்புகழும்
மயலோங்கிருங்களியானை வரகுணன் வெற்பின் வைத்த
கயலோங்கிருஞ்சிலை கொண்டுமன் கோபமுங் காட்டிவருஞ்
செயலோங் கெயிலெரி செய்தபி னின்றோர் திருமுகமே."

இப்பாடல்களில் மதுரைச்சங்கத்தைக்குறித்த பிரஸ்தாபமும் வரகுணபாண்டியனைக் குறித்த பிரஸ்தாபமும் வருகின்றன. மாணிக்கவாசகர் கடைச்சங்க காலத்திற்குப் பின் இருந்திருக்க வேண்டுமென்பது வெளிப்படை. இனி வரகுணபாண்டியர் இருவர் இருந்தனர் என்பது சாசன ஆராய்ச்சியால் தெரிகின்றது. இருவரில் ஒருவன் கி. பி. 862 ஆண்டின்போது (9-ம் நூற்றாண்டின் பிற்பகுதியில்) ஆட்சி செய்தனன். மற்றவன் இவனது பாட்டனைவன் பின்னவனே. மாணிக்கவாசகரால் பிரஸ்தாபிக்கப்பெறும் வரகுணனவான் என்று சாசன ஆராய்ச்

சியாளர் துணிகின்றார். 9-ம் நூற்றாண்டுக்கு முன் வரகுணப் பெயர் வாய்ந்த மன்னனொருவனும் இருந்தானென்று ஏற்படவில்லை. இப்பெயர் வாய்ந்த இரண்டு அரசர்களும் 9-ம் நூற்றாண்டுக்கு முன் இருந்தவரல்லர் என்று துணியப்படுகின்றது. எனவே மணிவாசகப்பெருமான் 9-ம் நூற்றாண்டின் பிற்பகுதியில் தாம் குறித்த வரகுணமன்னன் காலத்தவராக வாழ்ந்தார் என்று கொள்ளலாம். அல்லது 10-ம் நூற்றாண்டின் தொடக்கத்தில் பட்டினத்தடிகள் காலத்திற்கு முன் இருந்தனரென்று கொள்ளலாம். திருவிடைமருதூர் மும்மணிக்கோவையில் பெருந்துறைப்பிள்ளையென்று மாணிக்கவாசகரைத்தோத்திரஞ் செய்யும் பட்டினத்தடிகளே அவ்வகவலில்வரகுணபாண்டியனையும் துதித்திருக்கின்றார். நம்பியாண்டார் நம்பிகளும் இவ்வரகுணனைத் தோத்திரஞ்செய்துள்ளார்.

புராணங்கள் மாணிக்கவாசகர் காலத்திலிருந்த பாண்டியனை அரிமர்த்தனபாண்டியனென்று கூறுகின்றன. இதனால் வரகுணனுக்கு அரிமர்த்தனன் என்றொரு பேருமுண்டு எனச் சிலர் ஊகிக்கின்றனர்.

**சிலாசாசனங்களிலிருந்து கிடைக்கும் வேறு சில கருத்துக்கள்**

இன்னும் சிலாசாசனங்களிலிருந்து கிடைத்திருக்கும் கருத்துக்களை ஆராய்வோம். தென்னாட்டுச் சிலாசாசனங்களில் 11-ம் நூற்றாண்டுக்கு முன் மாணிக்கவாசகர் பெயர் காணப்படவில்லை. தேவாரமுடையார் பெயர்களும் மற்ற நாயன்மார் சிலரின் பெயர்களுமே காணப்படுகின்றன. அரசரும் பிறரும் தானதருமங்கள் செய்தபொழுது தங் காலத்துப் பெரியார் பெயர்களையும் தங்காலத்து முன்னிருந்த பெரியார் பெயர்களையும் குறித்திருக்கின்றனர். தேவாரமோதுதற்கு ஏற்பாடுகள் செய்யப்பட்டிருந்தன என்று சிலாசாசனங்கள் அறிவிக்கின்றன, மாணிக்க

வாசகர் தேவாரமுடையாருக்கு முற்பட்டவராய் இருந்தால் அவர் சரிதப்பெருமையும் நூல்களின் சிறப்பும் பரவாமல் இருந்தனவென்றும் அரசர் முதலியோரால் அவர் கொண்டாடப்பெறுமல் இருந்தனரென்றும் கருதுதல் தவறுடையதாகும். மாணிக்கவாசகன் என்றபெயர் பிரசித்தமாக வழங்கப்பெற்ற காலம் 11-ம் நூற்றுண்டின் முற்பகுதியாகும் என்று தெரிகிறது. திருவொற்றியூர் ஆலயத்தில் கருப்பக்கிரகச் சுவரில் கி.பி. 1024-ம் ஆண்டில் பொறித்த சாசனம் ஒன்றில் ஒரு பெரிய நாயன் என்கிற மாணிக்கவாசகன் என்ற பெயருடைய கோயில் ஊழியஞ்செய்யும் ஓர் அன்பனுர் அக்கோயிலுக்கு 32-பசுக்கள் தானஞ்செய்த வரலாறு அறியப்படுகிறது (தென்இந்திய சாசனங்கள் செங்கற்பட்டு ஜில்லா 976-ம் நம்பர் சாசனம்). மேற்படி ஜில்லா 997-ம் நம்பர் சாசனமாகிய திருவொற்றியூர்ச் சாசனத்திலிருந்து அக்கோயிலில் 11-ம் நூற்றுண்டிலே திருவெம்பாவை ஓதுவதற்குப் பூதானம்செய்த விஷயம் அறியப்படுகின்றது. தென்னுர்க்காடுஜில்லா சாசனம் ஒன்றினுல் 12-ம் நூற்றுண்டில் திருக்கோயிலூர்த்தாலூக்காவிலுள்ள ஒருகோயிலில்திருச்சாழல் ஓதுவதற்கென்று பூதானஞ்செய்த விஷயம் அறியக்கிடக்கின்றது. 12-ம் நூற்றுண்டில் பொறித்த தஞ்சாவூர்ச்சாசனம் ஒன்றினுல் திருவலஞ்சுழிக்கோயிலில் திருவாதவூர் அடி சுவாமிகளுக்குப் பூதானமொன்று செய்யப்பட்டிருக்கிறதாகத் தெரிகிறது. இக்காலத்திலேயே பொறித்த வேறு இரண்டு சாசனங்கள் திருவழுவூர் ஆலயத்தில் கிடைக்கின்றன. இச்சாசனங்களிலிருந்து வாதவூராளிநாயனுர் சந்நிதானத்திலே மார்கழித் திருவாதிரை உற்சவத்தில் திருவெம்பாவை ஓதுவதற்கும் நாயனுர் பூசைக்கும் தானங்கள் செய்யப்பட்டவிஷயம் அறியப்

படுகின்றது. இவ்வாறு 11-ம் நூற்றாண்டிலும், 12, 13-ம் நூற்றாண்டுகளிலும் கிடைக்கும் சாசனங்களிலிருந்து மாணிக்க வாசகரது பேரும் புகழும் தமிழ் நாட்டில் பிரசித்தமாகப் பரவியிருந்தன என்பது தெரிகின்றது. எனவே 11-ம் நூற்றாண்டின் இடைக்காலத்தில் வாழ்ந்த நம்பியாண்டார் நம்பிகள் மாணிக்கவாசகர் அருளிய நூல்களைத்தாம் வகுத்த திருமுறைகளில் அமைத்துள்ளார். 10-ம் நூற்றாண்டில் மாணிக்கவாசகர் பெயர் பிரசித்தமாக இருந்ததென்பதற்குச் சிலாசாசன ஆதாரம் இல்லை, எனினும் பெருந்துறைப்பிள்ளையென்று முற்றத் துறந்த பட்டினத்துப்பிள்ளையால் இவர் புகழ்ந்தோதப்பெறுகின்றார். இதனால் இவரது சரிதமும் பெருமையும் 10-வது நூற்றாண்டிலேயே தமிழ் நாட்டு அறிஞர்கூட்டத்தில் பரவத் தொடங்கிவிட்டதென்றும் பின்னரே பொதுமக்களுள் பரவலாயிற்றென்றும் ஊகித்தல் கூடும். எனவே மாணிக்கவாசகர் 9-ம் நூற்றாண்டின் இறுதியிலாதல் 10-ம் நூற்றாண்டின் தொடக்கத்திலாதல் பிரசித்திபெற்று வாழ்ந்தனர் என்று கொள்வது பொருத்தமுடையதாகும்.

## மாணிக்கவாசகரும் தேவாரமுடையாரும்

மாணிக்கவாசகர், தேவாரமுடையார்க்குக் காலத்தால் முற்பட்டவரென்று கூறுவோர் பின்வரும் ஆதாரங்களைக் காட்டுகின்றார்.

"நரியைக் குதிரைசெய்வானும் நரகரைத் தேவுசெய்வானும்
விரதங் கொண்டாட வல்லானும் விச்சின்றி நாறுசெய்வானும்
முரசதிர்ந் தானை முன்னோட முன்பணிந் தன்பர்களேத்த
வரவரைச் சாத்தி நின்றானு மாரூர் அமர்ந்த அம்மானே"

" குராமலரோ டராமதியஞ் சடைமேற் கொண்டார்
குடமுழநந் தீசனைவா சகனுக் கொண்டார்
சிராமலைதஞ் சேர்விடமாத் திருந்தக் கொண்டார்
தென்றனெடுந் தேரோனைப் பொன்றக் கொண்டார்
பராபர னென்பதுதமது பேராக் கொண்டார்
பருப்பதங் கைக் கொண்டார் பயங்கள் பண்ணி
இராவணனென் றவனைப்பே ரியம்பக் கொண்டார்
இடருறுநோய் தீர்த்தென்னை யாட்கொண்டாரே"

"வையைத் திருக் கோட்டி னின்றதோர்
திறமுந் தோன்றும்."

மேலேகுறித்த மூன்று பிரமாணங்களும் திருநாவுக்கரசு நாயனார் தேவாரத்தில் காணப்படுகின்றன. இவற்றுள் முதலாவதிலுள்ள 'நரியைக் குதிரைசெய்வானும்' என்பது மாணிக்கவாசகர்க்காக இறைவன் நரி பரியாக்கிய திருவிளையாடலைக் குறித்து நிற்பது வெளிப்படையென்பர். மூன்றாவது பிரமாணம் மாணிக்கவாசகர்க்காக இறைவன் மண்சுமந்த திருவிளையாடலைக் குறிக்குமென்பர். மார்க்கண்டர் அர்ச்சுனன் தருமி ஆதியோர்க்காக இறைவன் நிகழ்த்திய திருவிளையாடல்களைப் பெயர்சுட்டிக் குறிப்பவர் மாணிக்கவாசகர் பெயரைக் குறிக்கவில்லை. இத்திருவிளையாடல்கள் மாணிக்கவாசகர் காலத்துக்கு முன்னரே மக்களுள் வழங்கிவந்த பழைய கதைகளைக் குறித்து நிற்பன என்று கருதுவது தவறாகாது. இவ்வற்புதங்களைக்குறித்து மாணிக்கவாசகர் தமது திருவாசகத்தில் குறிப்பிடும் விதமும் இவ்வற்புதங்கள் அவர்பொருட்டே நிகழ்ந்தனவென்று உறுதியாகக் கூறுவதற்கு இடந்தரவில்லை. இவ்வற்புதங்களைக் குறிக்கும் திருவாசக அடிகளை வாசகர் உற்றுநோக்கி நன்கு சிந்தைசெய்தல் வேண்டும். தாம் ஞானோப

தேசப்பெற்ற வரலாறுபோன்ற சரிதப்பகுதிகளுக்கு மாணிக்க வாசகர் தமது பாசுரங்களில் அகச்சான்று தருவதுபோல, நரி பரியாக்கிய அற்புதத்திற்கும் மண்சுமந்த அற்புதத்திற்கும் அகச்சான்று அளிக்கவில்லை. எனவே, குறித்த இரண்டு அற்புதங்களும் தேவாரமுடையார் காலத்திற்கு முற்பட்ட கதைகளாகவே இருத்தல் வேண்டும்.

'நரியைக் குதிரைசெய்வான்'

என்பது இறைவனது சர்வசத்தியைக் குறிப்பதென்றும், மாணிக்கவாசகருக்காக நடந்த அற்புதத் திருவிளையாடலைக் குறிப்பது அன்று என்றும் தமிழாராய்ச்சியில் தலை சிறந்து விளங்கிய திருவாளர் சீனிவாசப்பிள்ளை தமது 'தமிழ் வரலா'ற்றில் கூறியுள்ளார். 'நரியைக் குதிரை செய்வான்' என்பது சரித நிகழ்ச்சியானல் அப்பாட்டிலுள்ள 'நரகரைத் தேவுசெய்வான்' முதலியவும் சரிதங்களைக் குறிக்கவேண்டுமே என்று பிள்ளையவர்கள் ஐயுறுவது கவனிக்கத்தக்கது. "வையைத்திருக்கோட்டினின்றதோர் திறம்" என்பது மண்சுமந்த திருவிளையாடலையே குறிப்பதல்லவென்றும், வையைக்கரையில் ஆலவாயிலே எழுந்தருளியிருக்கும் நிலையினைத்தான் குறிக்குமென்றும் பிள்ளையவர்கள் கருதுகின்றார். வையைக்கரையிலுள்ள பலஸ்தலங்களிலும் பிரதானமான ஸ்தலமாகவிளங்கும் திருவாலவாயில் இறைவன் எழுந்தருளியிருக்கும் திறத்தினையே திருநாவுக்கரசர் குறித்துச்செல்கின்றார் என்று கொள்வதில் ஆட்சேபம் ஒன்றுமில்லை. எனினும் தேவாரவாக்கியத்தின் போக்கினை நோக்கும்போது அது வையைத்திருக்கோட்டுக்கு விசேடத்தைத்தரும் ஓர் அருஞ்செயலைக்குறிப்பது போலத் தோன்றுகின்றது. ஆனல் இவ்வருஞ்செயல் புராணங்களில் மாணிக்கவாசகர் வரலாற்றோடு புணர்த்துக்கூறும் அற்புதத்திருவிளையாடலே

8

யாகுமென்று துணிவதற்கு எட்டுணையும் ஆதாரமில்லை. வையையின் கரைமுழுதுஞ்செல்லும் பொதுப்பொருளைவிடக் கூடற்கரைக்குரியதோர் சிறப்புப் பொருளாகிய மண்சுமந்த திருவிளையாடலைக் குறிப்பது இப்பிரமாணம் என்று கருது வோரும் குறித்த திருவிளையாடல் மாணிக்கவாசகர்க்காகவே நிகழ்ந்தது என்பதற்குத் தேவாரத்திலாதல் திருவாசகத்திலா தல் தக்க ஆதாரங்காட்ட இயலாது தமொறுகின்றார்.

'குடமுழநந்தீசனை வாசகனுக்கொண்டார்'

வாக்கியத்திலுள்ள குறிப்பு ஆராயத்தக்கது. இதற்கு, (சிவபெருமான்) குடமுழாவை வாசிக்கும் திருநந்திதேவரை வாசகனைக் கொண்டார் என்பதே நேர்பொருள். இவ்வாக்கியத் திற்கு நந்திதேவரை ஸ்ரீ மாணிக்கவாசகராக அவதரிக்கும்படி இறைவன் திருவுளத்தில் கொண்டருளினர் என்று மகாமகோ பாத்தியாயர் உ. வே. சாமிநாதையர் பொருள் கொள்ளுகின் றார். இவர்கள் கூறுவது வருமாறு:—

"பண்டைக்காலத்தில் பூமியிற் பௌத்தமதம் அதிகரித்த பொழுது வேதாகம ஒழுக்கம் குன்ற, அக்குறையை அகற்றக் கருதிய தேவர்களுடைய பிரார்த்தனைப்படி, சிவாஞ்ஞையால் திருநந்திதேவர் ஸ்ரீ வாதபுரத்தில் ஸ்ரீ சம்புபாதாசிருதரென்னும் ப்ராஹ்மணோத்தமருக்கும் அவர் பத்தினியார் சிவஞானவதி யார்க்கும் புத்திரராக அவதரித்தருளின ரென்பது, திருப் பெருந்துறையின் வடமொழிப் புராணமாகிய ஸ்ரீ ஆதி கைலாஸ மாஹாத்மியம் 36-ம் அத்தியாயத்திலும் ஸ்ரீ மாணிக்கவாசகருடைய வடமொழிச் சரித்திரமாகிய ஸ்ரீமணிவாக்கிய சரித்திரம், 6-ம் அத்தியாயத்திலும், விரித்துக் கூறப்பெற்றிருத்தலின், இதற்கு இதுவே பொருளென்றுதெரி கிறது. இதனால் ஸ்ரீ மாணிக்கவாசக ஸ்வாமிகள் திருநாவுக்கரசு

நாயனார்க்குக் காலத்தால் முந்தியவரென்று நன்குபுலப்படுதல் காண்க.'' நந்திதேவர் மாணிக்கவாசகராய் அவதரித்தாரென்பது அவர் சரிதங்கூறும் தமிழ்ப்புராணமொன்றிலும் காணப்படவில்லை. 'கணநாதர் தமிலொருவர்' 'நன்கணத்தலைவர்' என்றிவ்வாறு பொதுவாகவே புராணங்கள் கூறுகின்றன. இக்கூற்றும் மாணிக்கவாசகர் சரித நூல்களில் அதிமுக்கியமானதாகிய திருவாதவூரர் புராணத்தால் ஆதரிக்கப் பெறுவதில்லை. சிவ கணநாதராயிருந்தவர் மாணிக்கவாசகராக வந்தார் என்பதற்காதல், நந்தீசர் அவ்வாறு அவதரித்தார் என்பதற்காதல், மணிவாசகப்பெருமானது திருவாக்கில் நினைத்துணையும் ஆதாரம் கிடைக்கவில்லை. குறித்த தேவாரவாக்கியத்திற்குச் சிவகணத் தலைவராகிய நந்தீசர், மாணிக்கவாசகராக வந்தார் என்று பொருள்கொள்வது வலிந்தும் நலிந்தும் பொருள்கொள்வதே யாகும். மாணிக்கவாசகரென்று விவரமாகக் குறிப்பிடாதது கவனிக்கத்தக்கது. 'வாசகனைக் கொண்டார்' என்றுமாத்திரம் காணப்படுவதால் இதற்குப் பொருள் வேறுதல் வேண்டுமெனத் துணிவதே முறையாகும். இறைவன் விாசகங்களை (ஆக்ஞைகளை) வெளிப்படுத்தும் கருவியாயுள்ளவர், தூதன், பணியாளர், ஏவலாளர் என்பதே வாசகன் என்பதற்குக் குறித்த தேவார வாக்கியத்தில் பொருள் கொள்ளவேண்டுமென்று திரு. சீனிவாசப்பிள்ளை கூறுகின்றார். இப்பொருளே உண்மையான பொருளென்பது எமது கருத்து. சிவபெருமான் நந்தீசரைத் தம் காரியத்தலைவராகக் கொண்டார் என்பது திருநாவுக்கரசர் கொள்கை. கணநாதர்க்கெல்லாம் தலைமைபூண்டு கைலையங்கிரியில் தேவராதியர் செல்லவேண்டின் இறைவனுக்கு அறிவித்து அவர்களைச் செல்லவிடுவதும், இறைவனாணையை அவர்களுக்கு அறிவிப்பதும் நந்தீசர் கடமையென்பது புராண

சம்மதம். இன்னும் சிவபெருமானிடத்திருந்து மேலானஞானம் நந்தீசர் வாயிலாகவெளிப்படுகிறதென்பதும் சிவபுராணங்களின் கொள்கை. இத்தகைய புராணக்கொள்கையினையே அப்பர் சுவாமிகள் தமது தேவாரத்தில் "குடமுழநந்தீசனை வாசகனுக் கொண்டார்" என்ற வாக்கியத்தில் எடுத்தாளுகின்றார் என்று கொள்வது பொருத்தமுடையதாகும். இனி 'வாசகனுக்கொண்டார்' என்பது 'வாகனனுக்கொண்டார்' என்றிருத்தல் வேண்டுமெனக் கருதுவோரும் உளர்.

தமிழ்ப்புராணங்களில் நந்திதேவர் மாணிக்கவாசகராக அவதரித்தனர் என்பதற்கு ஓர் ஆதாரமும் அகப்படாமலிருக்கும்பொழுது வடமொழிப் புராணங்களில் ஆதாரங்கிடைப்பதற்குக் காரணமென்னை? மஹாமஹோபாத்தியாயர் அவர்கள் எடுத்துக்காட்டும் வடமொழிப்புராணமும், வடமொழிச் சரித்திரமும் எக்காலத்தில் தோன்றின? வடநாட்டில், இந்நூல்களை அறிவார் உண்டா? ஸ்ரீமணிவாக்கிய சரித்திரம் தமிழ் நூல்களைப் பின்பற்றி, தென்னாட்டிலுள்ள வடநூல் வல்லார் ஒருவரால் மனோதர்மத்திற்குரிய விகற்பங்களோடு விரிக்கப்பெற்றதென்பதே எமது கொள்கை. ஸ்தலபுராணங்களில் ஒன்றாகிய ஆதிகைலாஸமாகாத்மியம் பல்வேறு ஸ்தலபுராணங்களைப்போலவே தோன்றியதாகும். இப்புராணங்கள் சரித ஆராய்ச்சி செய்வோர்க்கு நற்பயனளிப்பதில்லை. மாணிக்கவாசகர்சரித்திரம் கூறும் தமிழ் நூல்களில் இற்றைக்குச் சுமார் எழுநூறு ஆண்டுகட்கு முன் தோன்றிய வேப்பத்தூரார் திருவிளையாடற் புராணமும் திருவாதவூரர் புராணமுமே மிகப் பழமையானவை. திருவாதவூரர் புராணத்திற்கு வடநூலாதார மிருப்பதாகத் தெரியவில்லை. வேப்பத்தூரார் திருவிளையாடற் புராணத்திற்கு முதனூலாக மகாமகோபாத்தியாயரவர்கள்காட்டும் உத்தர மகா

புராணம் என்னும் வடநூல் இப்பொழுது கிடைக்கவில்லை யென்று அவர்களே ஒப்புக்கொள்ளுகிறார்கள். தமிழிற் புராணங்களெழுதுவோர் எப்படியாவது வடநூலாதாரங் காண்பதற்காகப்பகீரதப்பிரயத்தனம் செய்வதுண்டென்பதை ஆராய்ச்சியாளர் நன்கறிவர். வட இந்தியாவில் வழங்காமல் தென்னாட்டில் மாத்திரம் வழங்கும் வடமொழிப் புராணங்களிற் பல, விசுவாமித்திர சிருட்டிகளாக முளைத்திருத்தல் கூடும். இதற்குக் காரணங்கள் இரண்டு. தமிழ் நூல்களுக்கெல்லாம் வடமொழி யாதாரம் வேண்டுமென்று கருதும் தமிழ் மக்களது மனநிலை ஒரு காரணம். வடமொழியே தமிழ் மொழியின் முதற்றாயாகும் என்று கருதும் வடமொழியாளர் மனநிலை இரண்டாவது காரணமாகும். எனவே குறித்த வடமொழி நூல்களில் நந்திதேவரே மாணிக்கவாசகராக வந்தாரென்று காணப்படும் ஆதாரம், தமிழ் நூல்களில் கிடைக்கும் ஆதாரத்தைப் பார்க்கிலும் சிறந்த சான்றாக மதிக்கத்தக்கதன்று. ஆனால் இப்பொழுது ஒருவினா எழுகின்றது. நந்திதேவர் மாணிக்கவாசகராக வந்தாரென்று மகாமகோபாத்தியாயர் குறித்துள்ள இரண்டு வட நூல்களும் கூறுவதற்குக் காரணந்தானென்னை?

'குடமுழ நந்தீசனை வாசகனுக்கொண்டார்' என்றவாக்கியத்திற்கு ஆராய்ச்சி முறையில் உண்மைப் பொருள் காண முயலாது, மாணிக்கவாசகரென்று 'வாசக'னென்பதற்குப் பொருள் கொண்டதே, மேற்குறித்த வடமொழி நூல்களில் காணப்படும் கதைக்குக் காரணமாகும். மாணிக்கவாசகர் பெயரைப் பிரசித்தமாக அறிந்திருந்த வடமொழி வித்துவான்கள் குறித்த தேவார வாக்கியத்திற்குத் தாங்கள் கொண்ட பொருளிலிருந்து பிற்காலத்தில் தங்கள் மனோதர்மத்தால், நந்தி தேவர் மாணிக்கவாசகராக அவதரித்தனரென்ற ஓர் புதிய கதையினைச்

சிருட்டித்து விரித்துக் கூறி யிருத்தல் வேண்டும் என்பது எமது கொள்கை. இவ்வாறே தமிழ்ச் சொற்களுக்கும், சொற்றொடர்களுக்கும் வினோதப் பொருள் கொண்டு புராண மும் பிரபந்தமும் செய்துள்ள வடமொழிப் புலவர் வேறு சில ரும் உண்டு. 'ஆர்க்காடு' என்ற பதம் ஆத்தி மரங்கள் நிறைந்த காடு என்றே தமிழில் பொருள் படுவதாயிருக்க, இதனை யறி யாது 'ஆறுகாடு' எனக் கொண்டு 'ஷடாரண்ய க்ஷேத்திர' மென்று வடமொழியிற் பெயர்த்து எழுதி ஒருவர் ஒரு புராண மும் புனைந்து விட்டனர். மற்றொரு வடமொழிப் புலவர், ஆழ்வார் வாக்கிலே பயிலும் 'காய்சின வேந்தன்' என்ற சொற் றொடரின் மெய்ப் பொருள் காணாது, இச் சொற்றொடரைக் 'காசினி வேந்தன்' எனக் கொண்டு 'பூமிபாலன்' என்று வட மொழியில் பெயர்த்துப் பிரபந்தம் செய்துள்ளார். இங்ஙனம் தமிழ் நூல்களிலிருந்து பொருள் பெயர்த்து மொழி பெயர்த் துள்ள வினோதங்கள் தென்னாட்டில் வழங்கும் சில வடநூல் களில் காணப்படுகின்றன. எனவே தமிழரைப் பற்றியும் செந் தமிழ்ப் பெரியோர்களைக்குறித்தும் தமிழ் நூல்களைக்குறித்தும் வடமொழியாளர் கற்பனைக்கண் கொண்டு கண்டுள்ள விஷயங் களை ஆராய்ச்சியாளர் அறிவுக்கண்கொண்டு சோதித்துத் தெளிவதே முறையாகும்.

மாணிக்கவாசகர் தேவார முடையார்க்கு முற்பட்டவர் என்று கூறுவோர் காட்டும் ஆதாரங்களை ஆராய்ந்து பார்த்தால் அவை சரியானவையல்ல என்பது புலனாகின்றது. மூவர்க் கும் மாணிக்கவாசகர் பிற்பட்டவர் என்னும் கொள்கையினை அசைக்கத்தக்க வலிமையும் குறித்த பிரமாணங்களுக்கில்லை. மற்று வாதவூரர் மூவர்க்கும் பிற்பட்டவராயின் அவர்களைப் பற்றி ஏன் குறிக்கவில்லை? இத்தகைய ஆசங்கை யெழுவது

இயல்பே. பழவடியாரைப் பொதுப்பட வணங்கும் வாதவூரர் திருக்கோத்தும்பியிலும் திருத்தோணோக்கத்திலும் கண்ணப்ப நாயனாரைக் குறிப்பிடுகின்றார். திருத்தோணோக்கத்திலே சண்டேசுர நாயனாரையும் தெளிவாகக் குறித்துள்ளார். இவ்வாறே, இவர் மூவரையும் தெளிவாகக் குறிக்கின்றனரா? 'செந்நாவலர் பரசும்புகழ்' என்று உயிருண்ணிப்பத்திலும் 'பண்சுமந்த பாடல்' என்று திருவம்மானையிலும், தேவாரம் குறிக்கப்படுவதாகக் கருதுவோருண்டு. அது பொருத்தமன்றென்று கருதும் ஒருவர்,

"பண்ணொன்ற இசைபாடு மடியவர்கள் குடியாக
மண்ணின்றி விண்கொடுக்கும் மணிகண்டன்"

என்பது போன்ற வாக்குகள் தேவாரத்திலும் காணப்படுகின்றன வென்று காட்டுவர். ஆனால் பன்னிருதிருமுறைப் பதிப்பில் திருவாசகத்திற்குத் திரிசொற்பொருள் விளக்கமெழுதியவர், 'செந்நாவலர்' திருநெறித் தேவாரமருளிச் செய்தவர் என்று எழுதி வைத்ததை ஸ்ரீமான். எஸ். அனவரத விநாயகம் பிள்ளையவர்கள் குறிப்பிடுகின்றார்.

"கழுமல மதனில் காட்சி கொடுத்தும்"
"தேனமர் சோலைத் திருவாரூரின்
ஞானந்தன்னை நல்கிய தன்மையும்"

என்னும் திருவாசக வாக்கியங்களை முறையே திருஞான சம்பந்தர்க்கு அம்மையப்பனாகிய இறைவன் காட்சி கொடுத்ததையும், சுந்தர மூர்த்திகளை யாட்கொண்டதையும் குறிப்பனவாகக் கருதுவோருண்டு. இக்கருத்தோடு, தேவாரத்திற்கும் மாணிக்க வாசகர் திருவாக்கிற்கும் காணப்படும் சொல்லொற்றுமைகளையும் ஒப்பிட்டு நோக்குவோர், மூவர்க்கும் மாணிக்கவாசகர் பிற்பட்டவர் என்ற கொள்கையினையே ஆதரிப்பர்.

## இன்னுஞ் சில சான்றுகள்

சிலர் கோவை, சதகம், அம்மானை முதலிய பிரபந்த வகைகள் தேவார காலத்தில் இல்லை என்பர். ஆனால் தேவாரப் பதிகங்களில் சில அந்தாதித் தொடையால் அமைந்துள்ளன. தேவார காலத்திலும் அதற்கு முன்னும் பிரபந்த வகைகள் வழங்கின என்பதற்குச் சான்றுகள் உண்டு. எனவே பிரபந்த வகைகளைப் பற்றிய கொள்கை நமது ஆராய்ச்சிக்குப் பயன் தருவதன்று.

"தருந்தடக்கை முத்தழலோர் மனைகடொறு
மிறைவனது தன்மை பாடிக்
கருந்தடங்கண்ணார் கழல் பந்தம் மானைப்
பாட்டயரும் கழுமலமே"

என்னும் தேவார அடிகள் திருவாசகப் பகுதிகளைக் குறிப்பன வென்று சிலர் கருதுகின்றார். இவ்வடிகள் பொதுவாக மகளிர் பாடும் பாடல்களையே குறித்துச்செல்லுகின்றன; மாணிக்கவாசகர் பாட்டுகளைக் குறிப்பதல்ல. சிவநேசச் செல்வர்களது மனைகளில் மகளிர் 'இறைவனது தன்மை பாடிக் கழல், பந்து, அம்மானைப் பாட்டயரும்' வழக்க முண்டென்று தேவாரத்தினின்றும் தெரிந்துகொள்கிறோம். இத்துறைகளை யமைத்து மகளிர் பாடுவதுபோல் மாணிக்கவாசகர் பிற்காலத்தில் பிரபந்தங்கள் செய்திருத்தல் வேண்டும்.

மாயாவாதம் முதலிய சில கொள்கைகள் திருவாசகத்தில் காணப்படுகின்றன வென்றும், தேவாரத்தில் காணப்படவில்லை யென்றும் சில ஆராய்ச்சியாளர் சுட்டிக் காட்டுகின்றார். மாயாவாதம் என்பது ஸ்ரீ சங்கராசாரியாரது கொள்கையைக்குறிக்குமென்பர். சங்கரர் கி. பி. எட்டாவது நூற்றாண்டில் இருந்ததாகப் பல ஆராய்ச்சியாளரும் ஒப்புக்கொள்ளுகின்றார். சங்

காரது கொள்கை தென்னாட்டில் விசேஷமாகப் பரவியபின் மாணிக்கவாசகர் இருந்தாரென்பதும், அங்ஙனம் பரவுமுன் திருநாவுக்கரசரும் திருஞானசம்பந்தரும் இருந்தனரென்பதும் ஊகிக்கப்படுகின்றன.

"தொல்காப்பியம் அகத்திணை, களவு கற்பு இலக்கணங் களுக்கு இளம்பூரணர் திருக்கோவையாரிலிருந்து ஒரு துறை யையும் மேற்கோள் காட்டவில்லை. இறையனார் அகப்பொரு ளுரையில் எட்டாம் நூற்றாண்டிலிருந்த பாண்டியன் கோவை யிலிருந்து உதாரணங் காட்டியிருக்கத் திருக்கோவையிலிருந்து ஒன்றுங் காட்டப் பெறவில்லை. 10-ம் நூற்றாண்டுகட்குமுன் இயற்றிய உரையில் திருவாசகம் திருக்கோவையிலிருந்து மேற் கோள்களெடுக்கப்படவில்லை." என்று சில ஆராய்ச்சியாளர் எடுத்துக் காட்டியுள்ளார். மாணிக்கவாசகர் மூவருக்கும் முற் பட்டவரென்று கூறுவோர் இன்னுமிதற்குத் தக்க சமாதானங் கூற முன்வரவில்லை.

தேவாரத்தின் யாப்போடும் இயல்போடும் மாணிக்கவாச காது யாப்பும் இயல்பும் ஒப்பிட்டு ஆராய்த்தக்கன. இங்ஙனம் ஆராயுமிடத்து, மாணிக்கவாசகர் தேவார ஆசிரியர்க்குப் பிற் பட்டவர் என்னுங்கொள்கை இன்னும் வலியுறுகின்றது. சைவ சித்தாந்தக் கருத்துக்கள் தேவாரத்தைக் காட்டிலும் மணிவாச கர் திருவாக்கினை ஆதாரமாகக் கொள்ளுதல் கூடும். தேவாரத் தில் சைவசித்தாந்தத்தின் குழந்தைப் பருவத்தினையே காண்கின் றோம். இதன் வளர்ச்சியினை மணிவாசகர் திருவாக்கிலே காண் கின்றோம். பதியொருவன் உண்டென்பதும் எல்லாப் பொருள் களும் அவனே என்பதும், ஆனால் அவை யொன்றும் அவ னல்ல என்பதும், அவனது கருணையே நம்மை ஆட்கொள்ளுவ

தென்பதும் இறைவனை யடைதற்குச் சாதனங்கள் சரியை முதலாயின வென்பதும் அடியார்தன்மை இத்தகையதென்பதும் மணிவாசகர் திருவாக்கில் முதிர்ந்துகாணப்படுவது போல், தேவாரமுடையார் திருவாக்கில் காணப்படுவதில்லை. 'சித்தமல மறுவித்துச் சிவமாக்கி' ஆட்கொள்ளும் சித்தாந்தம் மாணிக்கவாசகரது அருமைத் திருவாக்கிலே விளைந்து பழுத்துவருகிறது. இன்னும் இவரது திருவாக்கிற்கும் சைவசித்தாந்தத்திற்குமுள்ள தொடர்பு நூலாராய்ச்சியில் விரித்துக்கூறப்படும். இத்தகைய ஆராய்ச்சியாலும் மாணிக்கவாசகர் மூவர்க்கும் பிற்பட்டவரென்பதே புலனாகின்றது.

# மாணிக்கவாசகர் குருநிசயம்

சைவசமய குரவர் நால்வருள் மாணிக்கவாசகரே தலைமை வகிக்கத் தக்கார் என்று கருதும் பக்தமணிகளுமுண்டு. இவர் அறிவால் சிவனே என்பது திண்ணமென்று இலக்கணக்கொத்துடையார் வியந்துள்ளார். "ஆளுடையஅடிகள்" என்னும் திருப்பெயரால் இவர் அழைக்கப்படுவதும் இவர் பெருமைக்கு ஒரு சான்றாகும். சமயகுரவ நாயன்மார்களின் திருக்கூட்டத்தில் கவிக்கிரீடத்திற்குத் தனியுரிமை வாய்ந்தவர் மாணிக்கவாசகரே யென்பது இரசிகர் கொள்கை. ஆழ்ந்தகன்ற நுண்ணறிவாளராகிய மாணிக்கவாசகர் பேரன்பராகவும் கருவிலே திருவுடைய மகா கவியாகவும் முற்றத் துறந்த முனிவர்களும் மருளும் குணமலையாகவும் விளங்கியருளினர். இவருக்குப் பின் வந்த சிவநேசச் செல்வருள் இவரைப் புகழாதாரில்லை.

'திருந்திய அன்பிற் பெருந்துறைப் பிள்ளை'

என்று கூறி, பட்டினத்தடிகள் இவரை மூவர்க்கும் பின்முறைப் படுத்திவைத்து வாழ்த்திய காலத்திற்குப் பின்னர் சைவ உலகில் இவரை யறியாதார் அறியாதாரே யாவர். பிற்காலத்துச் சிவப்பிரகாசர், நால்வர் நான் மணிமாலை யென்னும் நூலில் மாணிக்கவாசகரது பெருமையினை எவ்வாறு சித்திரிக்க முயலுகின்றார் என்பதை அந்நூலினை ஓதுவோர் நன்குணர்வர்.

"செய்யவார் சடைத் தெய்வ சிகாமணி
பாதம் போற்றும் வாதவூரன்ப!
பாவெனப் படுவதுஉன் பாட்டுப்
பூவெனப் படுவது பொறிவாழ்பூவே"

"விளங்கிழை பகிர்ந்த மெய்யுடை முக்கட்
காரண னுரையெனு மாரண மொழியோ
ஆதிசீர் பரவும் வாதவூ ரண்ணல்
மலர்வாய்ப் பிறந்த வாசகத் தேனோ,
யாதோசிறந்த தென்குவீராயின்
வேத மோதின் விழிநீர் பெருக்கி
நெஞ்சநெக் குருகி நிற்பவர்க் காண்கிலேம்
திருவா சகமிங் கொருகா லோதிற்
கருங்கன் மனமுங் கரைந்துகக் கண்கள்
தொடுமணற் கேணியிற் சுரந்து நீர்பாய
மெய்ம்மயிர் பொடிப்ப விதிர்விதிர்ப் பெய்தி
யன்ப ராகுந ரன்றி
மன்பதை யுலகில் மற்றையரி லரே!''

என்றிங்ஙனம்கூறிய சிவப்பிரகாசர் கூற்று எத்தனை மேதாவிய ருள்ளங்களில் எதிரொலி கொள்ளுகின்றது! வான்கலந்த மாணிக்கவாசகரை இராமலிங்கசுவாமிகள் வாழ்த்திய வாழ்த் துரைகள் தமிழ்மக்கள் உள்ளங்களில் தேனினும் களிப்புச் செய்கின்றன.

"மனங்கரைத்து மலங்கெடுக்கும் வாசகத்தின் மாண்டோர்கள்
கனஞ்சடையென்று உருவேற்றிக் கண்மூடிக் கதறுவரோ?"

என்று மனோன்மணீய ஆசிரியர் கூறுவது நம் தமிழ்மக்கள் மாணிக்கவாசகரை யெவ்வாறு மதிக்கின்றனரென்பதை வெளி யிடுகின்றது. இத்தகைய பெரியாரது பெருமை சைவ உலகினையும் தமிழ் உலகினையும் கடந்து பரவிவருகின்றது.

மாணிக்கவாசகரது குணாதிசயத்திற்கு இவரது அருமைத் திருவாக்கே தக்க சான்று தருகின்றது.

"சொல்லுவ தறியேன் வாழி முறையோ
தரியே னாயேன் தானெனைச் செய்தது
தெரியே னாவா செத்தே னடியேற்
கருளிய தறியேன் பருகியு மாரேன்
விழுங்கியு மொல்ல கில்லேன்
செழுந்தண் பாற்கடல் திரைபுரள்வித்
துவாக்கடலுள்ளுநீ ருள்ளகம் ததும்ப
வாக்கிறந் தமுத மயிர்க்கா றோறுந்
தேக்கிடச் செய்தனன் கொடியே னூன்றழை
குரம்பை தோறு நாயுட லகத்தே
குரம்பைகொண் டின்றேன் பாய்த்தி நிரம்பிய
அற்புத மான அமுத தாரைகள்
எற்புத் துளைதொறு மேற்றினன் உருகுவ
துள்ளங் கொண்டோ ருருச்செய் தாங்கெனக்
கள்ளூ றாக்கை யமைத்தன னொள்ளிய
கன்னற் கனிதேர் களிறெனக் கடைமுறை
யென்னையு மிருப்ப தாக்கின னென்னிற்
கருணை வான்றேன் கலக்க
அருளொடு பராவமு தாக்கினன்"

(திருவண்டப்பகுதி)

என்னும் திருவாக்கு மாணிக்கவாசகரது ஆனந்தசொரூபத் தினைச் சித்திரித்துக் காட்டுகின்றது. இறைவனோடு இசைந்த இன்பவாழ்வே மணிவாசகர் வாழ்வு.

"இன்பமே யுன்னைச் சிக்கெனப் பிடித்தேன்,
எங்கெழுந் தருளுவ தினியே"

என்று இறைவனை நோக்கிக் கூறும் குழந்தை யுள்ளத்தினை இவர் பெற்றிருந்தார். இவரது பக்தியே, 'தீவினை கெடுத்து'

'மாய வாழ்க்கையை மெய்யென் றெண்ணி மதித்திடா'த வீரத் துறவியாக இவரை உருவாக்கியது. இவரது துறவு - நெறி ஆநந்த மயமாக விளங்குகின்றது. ஏனெனில் 'அறை கூவி யாட் கொண்டரு'ளும் இறைவன், அன்பன் அழகன் ஆனந்தன் அமுதனைக் காட்சி தருகின்றான். "உற்றாரை யான் வேண்டேன்" என்று துறந்த மாணிக்கவாசகர் அன்பு மயமாகவே திகழ்கின்றார். 'கற்பனவும் இனியமையும்' என்றுகூறும் இவர், கல்வியிற் சிறந்தவராகவும் கற்றார்க்கு வரம்பாகும் பரஞானச் செல்வராகவும் நம் கண் முன் வருகின்றார். துறவும் தெளிவும் பக்தியும் மாணிக்கவாசகர் உள்ளத்தில் ஒன்றுபட்டிசைந்து, இவரை இறையருளுக்கு இலக்காக்கி, 'சாதிகுலம் பிறப்பென்னும்,சுழிப்படாது காக்கின்றன. "அத்தனெனக் கருளியவாறு ஆர் பெறுவார் அச்சோவே" என்று கூறும் மாணிக்கவாசகர்,

" அன்றே என்றன் ஆவியும்
உடலும் உடைமை எல்லாமும்
குன்றே யனையாய்! என்னை யாட்
கொண்டபோதே கொண்டிலையோ?
இன்றோர் இடையூறெனக் குண்டோ?
எண்டோள் முக்கண் எம்மானே
நன்றே செய்வாய் பிழை செய்வாய்
நானோ இதற்கு நாயகமே"

என்ற பெருங்கொள்கையோடு பெருவாழ்வு வாழ்ந்தார். எனினும் ஆடம்பர வைபவங்களோடு கூடிய மாயவாழ்வினையே பெரிதெனா மயங்கிய உலகம் இவர் காலத்தில் இவரைப் பித்தர் பேயரென இகழ்ந்ததென்றும் இவர் உலகத்தின் சிரிப்பையும் பழித்தலையும் பொருளாகக் கருதவில்லை யென்றும் இவர் திரு

வாக்கினின்றும் தெரிந்து கொள்ளுகிறோம். சுருங்கக் கூறு மிடத்து, மாணிக்கவாசகரை 'அழுதடி யடைந்த அன்பர்' என்று அழைப்பது இவரது குணாதிசயத்திற்குப் பெரிதும் பொருத்த முடையதாகும்.

"தேனேயு மலர்க்கொன்றைச் சிவனே யெம்பெருமானெம்
மானே யுன்னருள் பெறுநாள் என்றென்றே வருந்துவனே—."

இத்தன்மை மணிவாசகரது விசேட அருங்குணமாக அமைந் துளது. "விளக்கறியா இருட்டறையில் விழுந்து கிடந்த ழுது விம்முகின்ற குழவியினும் மிகப் பெரிதுஞ் சிறியேன்" என்று வருந்தும் அடியார் திருக்கூட்டத்தில் 'அழுதடியடைந்த அன்பர்' தனிமுடி கவித்தாளும் தகுதி வாய்ந்தவரென்பது திண்ணம்.

---

# நூலாராய்ச்சி

## மணிவாசகர் கவியுள்ளம்.

மணிவாசகரது குணாதிசயத்தை அறிந்து அவர் தம் பொருவரிய திருமனத்தோடு பழகிப் பயன்துய்க்க விரும்புவோர் திருவாசகம் திருக்கோவையார் என்ற நூல்களைப் பன்முறையும் ஓதுதல்வேண்டும். மணிவாசகரது உண்மை வரலாறு, அவரது சரித்திரம் கூறவெழுந்த புராணங்களிற் காணப்படுவதைப் பார்க்கிலும் அவரது நூல்களிலேயே நன்கு பிரதிபலிக்கின்றதென்பது எமது கொள்கை.

"பத்துடையீர் ஈசன் பழவடியீர்" என்று மணிவாசகர் அழைக்கும் பத்துடை யடியவரது திருக்கூட்டம் வாழையடி வாழையென வந்து மக்களை வாழ்விக்குமென்பது தமிழர் கொள்கை.

"இறைவன் கழலேத்தும் செல்வம் செல்வமே"

"செல்வன் கழலேத்தும் செல்வம் செல்வமே"

என்பது அன்புருவினராகிய அடியவர் திருக்கூட்டத்தின் துணிபு. பக்தியின்பம் கவியின்பத்தோடு கலந்து பெருக்கெடுத்து வரும்பொழுது மக்களுள்ளம் இயற்கையாகவே வசீகரிக்கப் பெறுகின்றது ; மக்கள்வாழ்க்கை எளிதில் மலர்ச்சி பெறுகின்றது. ஒரு மகாகவி தீர்க்கதரிசியுமாவான். ஒரு மகா பக்தன் ஓதாதுணர்ந்த உயர்ஞானியாகவும் உண்மைக் கவியாகவும் விளங்குதல் கூடும். பக்திச்சுவையோடு கவிச்சுவை இரண்டறக் கலந்த நிலையில்,

"இச்சுவை தவிர யான்போய்
இந்திர லோகம் ஆளும்
அச்சுவை பெறினும் வேண்டேன்"

என்று அறிஞராகிய இரசிகர் துணிவது இயல்பேயாகும். பக்திக்காதலும் கவிவனப்பும் தம்முட் கலந்து ஒருருவமாகச் சமைந்து மணிவாசகப் பெருமானாக விளைந்து வருகின்றனவெனக்கூறுவது மிகையாகாது. திருவாலவா யெம்பெருமானாகிய சொக்கனருளால் மணிவாசகரது உள்ளத்தே தழைத்து வளர்ந்த பக்தி, 'தண்ணார் தமிழளிக்குந்தண்பாண்டி நாட்'டிலே

" உயர் மதிற்கூடலின் ஆய்ந்த ஒண்
தீந்தமிழின் துறைகள் "

வாயிலாக நுழைந்து, வளமும் வனப்புமுற்று வெளிப்படுகின்றது. சிவ மணத்தோடு தமிழ் மணமும் அளாவி, இவரது பாடல்கள் என்றும் புதிய—என்றும் இனிய—தென்றல் போல உலாவிவருகின்றன.

மாணிக்கவாசகர் பாடல்களில் பாஷாபிமானமும் தேசாபிமானமும் கலந்திருக்கின்றன. 'ஒண்தீந்தமிழ்' என்பது போன்ற சொற்றொடர்கள் இவரது மொழிப்பற்றினை இனிது விளக்குகின்றன.

" அப்பாண்டி நாட்டைச் சிவலோகமாக்குவித்த
அப்பார் சடையப்பன் "
" ...அருள்புரிவான் நாடென்றும்
தென்பாண்டி நாடே தெளி "

என்பன போன்ற திருவாக்கில் மாணிக்கவாசகரது நாட்டுப் பற்று நன்கு புலனாகின்றது. (இப்போதைக்கு) 10 நூற்றாண்டுகளுக்கு முன்னர் எழுந்த திருவாக்கு இன்றுபோல் என்றும் வாடாத இளமையோடு வனப்புற்றிலங்குமென்பது திண்ணம். பாண்டியனால் இவருக்களிக்கப்பட்ட 'பிரமராயர்' என்னும் பட்டப்பெயர் இவர் அந்நாளில் அறிவுக்கரசாக விளங்கினர்

என்பதை உள்ளவாறு உணர்த்துகின்றது. செந்தமிழ்த் தெய்வத்திற்குக்கண்ணாகி,

"ஊருணிநீர் நிறைந்தற்றே உலகவாம்
பேரறி வாளன் திரு."

என்ற தமிழ்மறைக் கிலக்கியமாக விளங்கிய பேரறிவாளருள் மணிவாசகரும் ஒருவராவர். ஒப்பற்ற கல்வி யறிவு, இவரது பெருந்துறவினை அரண்செய்தது; இவரது பக்திக் காதலுக்கு நற்றுணையாக அமைந்தது; இவரது கவித்திறனைச் சூழ்ந்து ஒளி செய்கின்றது. நூலறிவோடு இவர்பால் இயற்கை நுண்ணறிவும் கலந்தொளிர்ந்தது. தமது காலத்தில் வழங்கிய தென்மொழி வடமொழி நூல்களை நிலைகண் டுணர்ந்தவர் மாணிக்கவாசகர் என்பது தெய்வமணங்கமழும் இவரது திருவாக்கினின்றும் இனிது புலனாகின்றது. வேதவேதாங்க வேதாந்த நூல்களிலும் சித்தாந்த நூல்களிலும் இவர் உள்ளம் நன்கு பயிற்சி பெற்றிருந்தது; "முன்னோர் மொழிபொருளே யன்றி அவர் மொழியும் பொன்னேபோல் போற்றும்" தன்மை இவர் நூல்களின் சிறப்பியல்புகளிலொன்றாகும். பல நூல்களிலும் பயின்ற இவரது உள்ளம் உலக இயற்கையிலும் பயின்றுளதென்பது இவர் எடுத்தாளும் பழமொழிகளாதியவற்றால் நன்கு புலனாகும். முன்னோர் எழுதிவைத்த நூல்களைக் கற்பதோடு அமையாது இவரது கவியுள்ளம் நூல்களுக்கெல்லாம் முதனூலாக விளங்கும் இயற்கையினையும் நன்கு கற்றிருந்ததென்பதற்கு இவர் நூல்கள் தக்க சான்று தருகின்றன.

கவியென்ற பதவியோடு மணிவாசகருக்குத் தத்துவ சாத்திரி என்னும் பதவியும் உரியதாகும். ஆன்ம விசாரணையில்

மூழ்கிக் கிடக்கும் கவியுள்ள மன்றோ இவரது நூல்களில் வெளிப்படுகின்றது! 'கண்டதே காட்சி கொண்டதே கோலம்' என்ற ஜடமாயா வாதத்தோடு பொருந்திய உள்ளத்தினர்க்கு இவர் பேயராகவும் பித்தராகவுமே காணப்பட்டார் என்பதில் வியப்பொன்றுமில்லை. "'நீ எங்கேயிருந்து வருகிறாய்?' என்று தொட்டில் குழந்தையை வினவுகின்றது; 'நீ எங்கே போகிறாய்' என்று மயானம் பிரேதத்தைக்கேட்கின்றது" என்று ஓர் ஆங்கில ஆசிரியர் கூறியுள்ளார். இத்தகைய கேள்விகள் நித்தியமான (eternal) பிரசினைகளாகும். இவை மணிவாசகரது கவியுள்ளத்தில் எழுந்தவண்ணமாக விருந்தன. இவரது ஆன்மதாபமும் அறிவுத்தாகமும் இவரது திருவாசகத்தில் அடிக்கடி வெளிப்படுகின்றன.

" புன்புலால் யாக்கை புரைபுரை கனியப்
பொன்னெடுங் கோயிலாப் புகுந்தென்
என்பெலா முருக்கி எளியையை ஆண்ட
ஈசனே மாசிலா மணியே
துன்பமே பிறப்பே யிறப்பொடு மயக்காந்
தொடக்கெலா மறுத்தநற் சோதீ
யின்பமே உன்னைச் சிக்கெனப் பிடித்தேன்
எங்கெழுந்தருளுவ தினியே "

இத்தகைய ஞான பக்தி வெள்ளம் இவரது தாபத்திற்கும் தாகத்திற்கும் சாந்தி யளிக்கின்றது.

## ஒரு சிறப்பியல்பு

இவர் கவியுள்ளத்தின் சிறப்பியல்பு, கருங்கல் மனத்தினையும் கரைந்துருகச் செய்வதே யாகும்.

"குற்றாலத் தமர்ந்துறையுங் கூத்தாவுன் குரை கழற்கே
கற்றாவின் மனம்போலக் கசிந்துருக வேண்டுவனே."

என்பது மணிவாசகர் பிரார்த்தனை. இது முற்றும் கைகூடிய தென்பதற்கு இவரது நூல்களே சான்றாகும்.

"என்பு நைந்துருகி நெக்கு நெக்கேங்கி
அன்பெனு மாறு கரையது புரள
நன்புல னொன்றி நாதவென் றரற்றி
உரைதடு மாறி யுரோமஞ் சிலிர்ப்பக்
கரமலர் மொட்டித் திருதய மலரக்
கண்களி கூர நுண்துளி யரும்ப"

அகங்கரைந்துருகும் சிறப்பியல்பு மணிவாசகரது கவியுளத்தின் சிறப்பியல்பே யாகும். இவரது நூல்களை மெய்யன்போடு ஓதுவோர் தற்போத மிழந்து,

'நான்படிக்கும் போதென்னை நானறியேன்
நாவொன்றே.
ஊன்படிக்கும் உளம்படிக்கும் உயிர்படிக்கும்
உயிர்க்குயிரும்
தான்படிக்கும் அனுபவம்''

பெறுவரென்பதில் ஐயமில்லை. உணர்வை யுருக்கிப் புத்துயிரளிப்பதில் திருவாசகம் தலைசிறந்து விளங்குதலால், 'திருவாசகத்திற் குருகாதார் ஒரு வாசகத்திற்கும் உருகார்' என்னும் பழமொழி பிறந்தது. மாணிக்கவாசகரது உணர்வே உருகி ஞானனந்த வெள்ளமாகி இவரது திருவாக்கின் வாயிலாகப் பெருகுகின்றது. நாதமொடு பொழியும் ஞான கங்கையன்றோ, இவரது மலர்வாய்ப் பிறந்த வாசகத்தேன்! இவரது அருள் நூல்களில் மூழ்கிக்களிக்கும் வாசகருள்ளம், மாசுகழுவப்

பெற்ற ஜீவமாணிக்கமாக ஒளிர்வதாகும். எனவே, சென்ற பதினொரு நூற்றாண்டுகளாகப் பொதுவாகத் தமிழுலகும் சிறப்பாகச் சைவ உலகும் மணிவாசக மாகிய திருவாசகத்திலும் திருக்கோவையாரிலும் ஈடுபட்டிருப்பதில் என்ன ஆச்சரியமிருக்கின்றது ?

## யாப்பும் பொருளும்

'மனங்கரைத்து மலங்கெடுக்கும்' திருவாசகத்தில் பல வகை விருத்தங்களும் கலிவெண்பா, வெண்பா, அகவல், கலித்தாழிசை, கலிநிலைத்துறை ஆகிய பாட்டுவகைகளும் காணப்படுகின்றன. இத்தகைய யாப்பியல்பும், மணிவாசகர் மூவர்க்கும் பிற்பட்டவர் என்பதற்கு ஓர் சான்றுமென்பர். திருக்கோவையார், அகப்பொருள் இலக்கணத்துக்கு ஓர் அரிய இலக்கியமாகும்.

திருவாசகத்திற்குப் பொருள் அறிவிக்கவேண்டுமென்று வினவிய, தில்லை மூவாயிரவரைநோக்கி, மாணிக்கவாசகர் கனக சபையைச் சுட்டிக்காட்டி, இவ்வழகிய திருச்சிற்றம்பலமுடையாரே நூல்நுதலியபொருளாவார், என்று கூறியதாகப் புராணங் கூறும் அழகிய கதை நன்கு சிந்தைசெய்யத்தக்கது. இக்கதையினை உளங்கொண்டே சிவப்பிரகாச சுவாமிகள், திருவாசகத்திற்கு * வாச்சியம் இறைவனே யென்று கூறுவாராயினர். ஆன்ம விசாரணையின் விளைவாகவும் சற்குரு தரிசனத்தால் அடைந்த ஞானோபதேசத்தின் விளைவாகவும் இவரது உள்ளத்தில் பொங்கி யெழுந்த சிவஞானமே இவரது திருவாக்கின் தனிப்பெரும் பொருளாகும். உண்மையான சிவயோகியாக இவர் வாழ்ந்த வாழ்க்கை, பண்ணேறி விண்ணுலவும் இவரது

* வாசகம் நுதலிய பொருள்.

தெய்வமாக் கவிதையோடு இரண்டறக்கலந்து கிடக்கின்றது. இத்தகைய வாழ்க்கையின் ஜீவநாதமாக விளங்கிய சிவபோதம் இவரது கவிதையினைச் சூழ்ந்து சுடர்கின்றது.

## மணிவாசகரும் சைவசித்தாந்தமும்

'பண் சுமந்த பாடல்'களாகிய தேவாரத்தில் தழைத்தரும்பும் சைவசித்தாந்தம் மணிவாசகர் திருவாக்கிலே மலர்ச்சிபெறுகின்றது. செந்நாவலர் நாவிலே குடிகொண்டு விளையாடும் சிவபோதம், மணிவாசகனார் கவியுளத்தில் விசேட உரம்பெற்று வளர்கின்றது. சங்காரமூர்த்தியே முழுமுதற்கடவுளென்னும் சித்தாந்தக்கொள்கை திருவண்டப் பகுதியில் இனிது விளக்கப் பெறுகின்றது. தேவாரத்தைப் போன்றதோர் தோத்திர நூலே திருவாசகமென்று கொள்வது முழு உண்மையினையும் குறிப்பதாகாது. தோத்திரவடிவமாக எழுந்த சாத்திரமாகவும் திருவாசகம் விளங்குகின்றது. எனினும் சித்தாந்த சாத்திர உண்மைகளை அமைக்கும் பொருட்டு இவர் கவிச்சுவையினைக் கைநெகிழவிடுபவரல்லர். இவரது கவியுள்ளம், நூற்பழக்கம் பெரிதுமுடைய இவர் நாவினை நண்ணும்போது, சித்தாந்தக் கருத்துக்களைத் தானாகவே வெளியிடுகின்றது. பள்ளத்துப் பாயும் வெள்ளமெனக் கவிதா சந்தம் மண்டும்பொழுது சித்தாந்தசாத்திர உண்மைகள் இவ்வெள்ளப்பெருக்கோடு தாமாகவே துள்ளி வருகின்றன.

பதி பசு பாசமெனும் முப்பொருளியல்பும், பசுபாசங்களைந்தும், பதியினை எய்தும் நெறியும், முத்தியின்பமும், சித்தாந்த சாத்திரங்களில் நன்கு விரித்துரைக்கப் பெறுகின்றன. இவ்வுண்மைகளெல்லாம் 'ஆல் அமர்வித்' தென மணிவாசகர் திருவாக்கில் அடங்கிக் கிடக்கின்றன. பூவில் நாற்றம்போல், எள்

ளில் எண்ணெய்போல் இறைவன் எங்கும் ஒழிவற நிறைந்து விளங்கும் உண்மை திருவண்டப் பகுதியிலும் திருச்சதகத்திலும் விளங்கப்பெறுகின்றது. 'காரணங்களெல்லாம் கடந்து நின்ற' நீலகண்ட மூர்த்தியே 'அறுவகைச் சமயத் தறுவகை யோர்க்கும் வீடுபேறாய்' நின்றருள்வர். 'தாயிற்பெரிதும் தயாவுடைய தம் பெருமான்' என்று மணிவாசகர் கூறுவது சைவ சித்தாந்திகளோடு பிறமதத்தினரும் பாராட்டிப் போற்றும் ஓர் உண்மையே ஆகும். இவரது சித்தாந்தம் ஆழ்ந்தகன்ற அடிப்படையோடு இலங்குவதென்பது வெளிப்படை.

''பரமன் காண்க பழையோன் காண்க
பிரமன்மால் காணாப் பெரியோன் காண்க
அற்புதன் காண்க அநேகன் காண்க
சொற்பதங் கடந்த தொல்லோன் காண்க
சித்தமுஞ் செல்லாச் சேட்சியன் காண்க
பத்தி வலையிற் படுவோன் காண்க
ஒருவ னென்னும் ஒருவன் காண்க
விரிபொழின் முழுதாய் விரிந்தோன் காண்க
அணுத்தருந் தன்மை யிலையோன் காண்க
இணைப்பரும் பெருமையி லீசன் காண்க
அரியதி லரிய அரியோன் காண்க
மருவியெப் பொருளும் வளர்ப்போன் காண்க
நூலுணர் வுணரா நுண்ணியோன் காண்க
மேலொடு கீழாய் விரிந்தோன் காண்க
அந்தமும் ஆதியும் அகன்றோன் காண்க
பந்தமும் வீடும் படைப்போன் காண்க
நிற்பதும் செல்வதும் ஆனோன் காண்க
கற்பமு மிறுதியுங் கண்டோன் காண்க
யாவரும் பெறலரு மீசன் காண்க

தேவரு மறியாச் சிவனே காண்க
பெண்ணு ணலியெனும் பெற்றியன் காண்க
கண்ணால் யானுங் கண்டேன் காண்க ”

என்ற இத்தகைய பரந்த அடிப்படை மீது மணிவாசகரது ஞானப்பூங்கோயில் நிர்மாணமாகி நிமிர்கின்றது.

“கூவலாமை குரை கடலாமையைக்
கூவலோ டொக்குமோ கடல்”—என்ற

கதைக்கு இலக்காவதன்று மணிவாசகர் சித்தாந்தம். ‘வேதாந்த சித்தாந்த சமரச நன்னிலையும் சர்வசமய சமரச நன்னிலையும் பெற்றுள்ள வித்தகர்களெல்லாரும் கைகூப்பித்தொழுமாறு விளங்குவதன்றோ மணிவாசகரது நூல்களினின்று வெளிப்படும் ஞானவொளியுருவம்?

‘கரணங்களெல்லாம் கடந்து’நிற்கும் கடவுளே
“ஊனு யுயிராய் உணர்வா யென்னுட்கலந்து
தேனுயமுதமுமாய்த் தீங்கரும்பின் கட்டியுமாய்”

விளங்குகின்றாரென்று கூறும் மணிவாசகம் பக்தருள்ளத்திற்குத் தெவிட்டாத தேனமுதமன்றோ?

இங்ஙனம் அறிஞர்க்கு ஆரமுதமாகும் சித்தாந்தத்தின் உயர் நிலை கூறும் மணிவாசகர், அம்மையப்பனுகிய இறைவனைப் பன்முறையும் பாராட்டுகையில் புராதனனுகியசிவபெருமானது ஆகம புராணரூபங்களைச் சிறப்பாகச் சுட்டிக்கூறுகின்றார். எம்பெருமான் கோயில் கொண்டருளும் ஸ்தலங்களையும் இவர் எடுத்துப்பாராட்டுவர். முப்புரமெரித்தகதையும் தக்கன்கதையும் சிவபெருமானுக்குப் பரத்துவங்கூறும் வேறு புராணக்கதைகளும் இவர் திருவாக்கில் ஆங்காங்கே பயில்வனவாகும். திருவினையுடையமாலும் அறிவுத்தெய்வத்தினை நாவிலேதரித்த பிர

மனும், தேடிக்காணுதபடி ஒளித்தருளும் கதையிலும் தியாக மூர்த்தியாகியசிவபெருமான் தேவரைக் காத்தற்கு நஞ்சுண்டரு ளும் கதையிலும் மாணிக்கவாசகரது கவியுள்ளம் ஈடுபட்டுள் ளது.

"புல்லாகிப் பூடாய்ப் புழுவாய் மரமாகிப்
பல்விருக மாகிப் பறவையாய்ப் பாம்பாகிக்
கல்லாய் மனிதராய்ப் பேயாய்க் கணங்களாய்
வல்ல சுரராகி முனிவராய்த் தேவராய்ச்
செல்லாஅ நின்ற இத்தாவர சங்கமத்துள்
எல்லாப் பிறப்பும் பிறந்திளைத்தேன் எம்பெருமான்
மெய்யே யுன்பொன்னடிகள் கண்டின்று வீடுற்றேன்."

என்ற வாக்கியங்கள் சைவசித்தாந்தத்தை ஆதரிப்பதோடு, வேத வழக்கொடு ஒன்றுபட்ட பல வேறு சமயங்கட்கும் பொது வாக அமைபத்தக்க ஆதார வாக்கியங்களாகவும் விளங்குகின் றன. இறைவனே சற்குருவாக உபதேசஞ்செய்ய, ஆன்மா முத்தியடையும் என்ற தெய்விக உண்மையினை மாணிக்கவாச கர் தம்மேல் வைத்தே விளக்கி யருளுவர். இங்ஙனம், ஒன்றோ டொன்றொவ்வாது பூசலிடும் பல்வேறு சமயங்கட்கும் பொது வான அம்சங்கள் மாணிக்கவாசகரது திருவாக்கிலே இடம் பெற்றுள்ளன வெனினும், இவர் பரம சைவசித்தாந்தி யென்ப தில் எட்டுணையும் ஐயமில்லை.

சித்தாந்த சாத்திரத்தின் உண்மைகளோடு சாத்திர பரி பாஷைகளிலும் முக்கியமானவை இவரது நூல்களில் காணப் படுகின்றன.

" அவனருளாலே அவன்தாள் வணங்கி "

என்ற வாக்கியத்தில் சித்தாந்திகள் பாராட்டும் அருள்நெறி வெளியிடப் பெறுகின்றது. ' பாரொடு விண்ணாய்ப் பரந்த ' பரம்பொருளை,

"தோலுந் துகிலுங் குழையுஞ் சுருள்தோடும்
பால்வெள்ளை நீறும் பசுஞ்சாந்தும் பைங்கிளியும்
சூலமுந் தொக்க வளையுமுடைத் தொன்மைக்
கோலமே நோக்கிக் குளிர்ந்தூதாய் கோத்தும்பீ"

என்ற அடிகளில் சித்திரிக்கப்பெறும் கோலத்தில் மணிவாசகர் மகிழ்ந்து காண்கின்றார்.

"சித்தஞ் சிவமாக்கிச் செய்தனவே தவமாக்கும் அத்தன்,"

சைவருகந்து வழிபடும் கோலங்கொண்டே இவரை யாட்கொள்ளுகின்றார்.

"வான்கெட்டு மாருதம் மாய்ந்தழல் நீர் மண்கெடினும்
தான் கெட்டலின்றிச் சலிப்பறியாத் தன்மை"யனை,

'திருப்பெருந்துறையுறை' சிவனை வழிபடுவது இவருக்குப் பேரின்பமாகும்.

"இன்றெனக் கருளி இருள் கடிந்துள்ளத்து
எழுகின்ற ஞாயிறே போன்று
நின்றநின் தன்மை நினைப்பற நினைந்தேன்
நீயலாற் பிறிதுமற் றின்மை
சென்று சென்றணுவாய்த் தேய்ந்து தேய்ந் தொன்றாந்
திருப்பெருந்துறையுறை சிவனே
ஒன்றும் நீ யல்லை அன்றி ஒன்றில்லை
ஆருன்னை அறியகிற் பாரே"

"........................................சிவம்
வேண்டார் தமை நாளும்
தீண்டேன் சென்று சேர்ந்தேன் மன்னு
திருப்பெருந்துறை இறை தாள்
பூண்டேன் புறம் போகேன் இனிப்
புறம்போக வொட்டேனே."

என்பது மணிவாசகரின் மனநிலை. 'ஒன்று நீ யல்லை அன்றி ஒன்றில்லை' என்ற மகாவாக்கியம் வேதாந்த சித்தாந்த உண்மையினைத் திட்ப நுட்பமாக வெளியிடும் ஓர் சூத்திரம் போன்றதாகும். 'சொற்பதங் கடந்த தொல்லோன்,'

" இத்தந்திரத்திற் காண்டு மென்றிருந்தோர்க்கு
அத்தந்திரத்தின் அவ்வயின் ஒளித்து "

நிற்கின்றானென்றும், 'யான் எனது என்று அவரவரைக் கூத்தாட்டுவான்' என்றும்,

" மெய்ப் பொருட்கண் தோற்றமாய்
மெய்யே நிலை பேறாய்
எப்பொருட்கும் தானேயாய்
யாவைக்கும் வீடாகும்
அப்பொருளாம் நஞ்சிவன்"

என்றும், மணிவாசகர் கூறும் சித்தாந்தக் கருத்துக்கள் அறிஞர் அனைவர்க்கும் இன்பம் பயப்பனவாகும். சிவஞானபோதச் சூத்திரங்களில் உள்ள கருத்துக்களை வெளியிடும் வாக்கியங்கள் திருவாசகத்தில் ஆங்காங்கே காணப்படுகின்றன.

இனி, சைவசித்தாந்தக் கருத்துக்கள் திருக்கோவையாரிலும் காணப்படுகின்றன. உதாரணமாக அடியார் கூட்டத்தின் பெருமையினைத் திருவாசகம் எடுத்துரைப்பதுபோலத் திருக்கோவையாரும் இனிது விளக்குகின்றது.

"...........தன்சீரடியார் குலம்பணி கொள்ளவெனைக்
கொடுத்தோன்"
"உள்ளுருகி யுரோமஞ்சிலிர்ப்ப வுடையவனுட்
கொள்ளும் அவரிலொர் கூட்டந்தந்தான்"

அடியா ரியல்பினைக் குறித்துத் திருக்கோவையார்,

"மெய்த்தழை யாகின்ற வன்பினர் போல விதிர்விதிர்த்துக்
கைத்தழை யேந்தியக் கடமாவி னுய்கையில் வில்லின்றியே
பித்தழையா கிற்பரால்" (கோவை 102)

என்று கூறுகின்றது.

"என்றொல்பிறவி எழு மெழுதாவகை சிதைத்தோன்"

"அளவின யார்க்கும் அறிவரியோன்"

என்ற திருக்கோவையாரடிகள் பதியிலக்கணம் கூறுகின்றன.

" தன்னீரடிக் கென்னிரண்டு கரங்கள் தந்தான் "

என்ற திருக்கோவையார் காணங்கள் பெற்றபயனைக் குறிப்ப தாகும்.

## திருச்சிற்றம்பலக் கோவை

இறைவனே தமது திருவடி நிலத்திற்றோய எழுந்தருளி வந்து தம்மைக் கோவைபாடுதல் வேண்டுமென்று கட்டளை யிட்டருளினரென்றும், இறையருள் வழிப்பட்ட மணிவாசகர் ஆகமார்த்தயாகிய குறிப்புப் பொருளோடு திருக்கோவையார் திருவாய்மலர்ந்தருளினரென்றும் கூறுவர். இத்திருக்கோவை யாரின் துறைகளின் குறிப்புப்பொருள் வெளிப்படத் "திருச் சிற்றம்பலக்கோவையாருண்மை" என்ற பெயர்புனைந்து வெளியிடப்பெற்ற நூலொன்றும் உண்டு. தேவார திருக் கோவையாரின் பெருமையினை வியந்து பிற்காலத்து ஆன்றோர் ஒருவர் "தேனூறு செஞ்சொல் திருக்கோவை" என்று பாராட்டியுள்ளார்.

" ஆரணங் காணென்பர் அந்தணர் யோகியர் ஆகமத்தின்
காரணங் காணென்பர் காமுகர் காமநன்னூல தென்பர்
ஏரணங் காணென்பர் எண்ணர்எழுத்தென்பர் இன்புலவோர்
சீரணங் காயசிற் றம்பலக் கோவையைச் செப்பிடினே "

என்னும் ஆன்றோர் வாக்கு இந்நூற்சிறப்பினை இனிது விளக்கு கின்றது.

“ வருவாசகத்தினின் முற்றுணர்ந்தோனை
வண்டில்லை மன்னைத்
திருவாதவூர்ச் சிவ பாத்தியன் செய்திருச்
சிற்றம்பலப்
பொருளார் தருதிருக்கோவை கண்டேயு
மற்றப் பொருளைத்
தெருளாத வுள்ளத் தவர்கவிபாடிச்
சிரிப்பிப்பரே ”

என்று திருமுறை வகுத்த நம்பியாண்டார் நம்பிகள் கூறுவதும் திருக்கோவையாரின் சிறப்பினை வெளியிடுவதாகும்.

“ பல்காற் பழகினுந் தெரியாவுளவேல்
தொல்காப்பியந் திருவள்ளுவர் கோவையார்
மூன்றினு முழங்கும் ”

என்று இலக்கணக் கொத்துடைய சுவாமிநாத தேசிகர் கூறியுள்ளார். “ அழகிய திருச்சிற்றம்பலமுடையார் அவர் வாக்கிற் கலந்திருந்து அருமைத் திருக்கையால் எழுதினர் ” என்பது இவர் கொள்கை.

கோவை யென்பது கோக்கப்பட்ட பிரபந்தம் என்று பொருள்தரும். அகப்பொருட்டுறைகள் அமைந்துள்ள பாக்களால் கோவை செய்யப்பட்ட பிரபந்தமே கோவையாகும். மாணிக்கவாசகர் தோத்திரப் பாடல்கள் திருவாசகமென்ற பெயரால் சிறப்பாகக் கூறப்படுகின்றன. அவ்வண்ணமே இவர் அருளிய கோவையும் திருக்கோவையாரென்ற பெயரால் சிறப்பித்துக் கூறப்படுகின்றது. திருக்கோவையாரே தமிழிற் செய்யப்பெற்றுள்ள முதற் கோவை யாகுமென்று கருதுவோரு முண்டு. அகப்புறமென்ற பாகுபாடு அறம்

பொருள் இன்பம் வீடு (தர்மார்த்த காம மோக்ஷம்) என்ற சதுர்வித புருஷார்த்தத்திற்குப் பதிலாகப் பண்டைத் தமிழ் மக்களுள் வழங்கி வந்ததாகும். அகம் என்பது உள்ளத்தில் நிகழும் காதலின்பத்தைக் குறிப்பது. இது களவென்றும் கற்பென்றும் இரண்டுபிரிவுகளையுடையது. ஒத்த குலம், ஒத்த அறிவு, ஒத்த பண்பு முதலியவற்றாற் பொருத்தமுடைய தலைவனும் தலைவியும் தாமே சந்தித்து மணந்துகொள்ளும் காந்தருவ மணமுறையினைப் பண்டைத்தமிழ் மக்கள் களவு என்று கூறுவர். பொய்யும் வழுவும் தோன்றிய பின்னர் வைதிக ஒழுங்கை அனுசரித்துக் கரணங்கள் வகுக்கப்பெற்றன. இங்ஙனம் மணம் நிகழ்ந்தபின் கற்பு நிகழ்வதாகும். களவிலும் கற்பிலும் பல துறைகளுள்ளன.

பண்டைத்தமிழ் மக்கள் 'கண்வழி புகுந்த காதலு'க்குப் பெருமையளித்தனர் என்பது பிரசித்தம். காதல் நிலத்தினும் பெரிது; வானிலும் உயர்ந்தது; ஆழ்ந்த ஆழியிலும் ஆழமானது என்பது பண்டைத்தமிழர் கொள்கை. இயற்கை வனப்பினைக் காதலித்தது போல அன்னார் காதலின்பத்தினையுங்காதலித்துவந்தார். காதலர் தெய்வம் துணையாகத் தாமே சந்தித்து மணந்துகொள்வதே பண்டைத்தமிழர் மணமுறை. தெய்வத் தன்மை வாய்ந்த காதலுக்கும் உடலையும் உயிரையும் ஒருங்கே ஒளிமழுங்கச்செய்யும் பேயுணர்வாகிய மையலுக்கும் பொருளளவில் பண்டைத்தமிழ் மக்கள் வேறுபாடு கண்டிருந்தனர் என்று கருதுவது தவறாகாது. எனவே பிற்காலத்தில் செந்தமிழ்ப் பெரியோர்களாகத் திகழ்ந்த ஆழ்வார் நாயன்மார்களும் அகப்பொருட்டுறைகளமைந்த பிரபந்தங்கள் இயற்றுவாராயினர். அகத்தூய்மை வாய்ந்த காதலும் பக்திப் பெருங்காதலும் சாராம்சத்தில் ஒன்றேயன்றோ?

" அறிவனூற் பொருளும் உலகநூல் வழக்குமென
இருபொருளு நுதலி யெடுத்துக் கொண்டனர் "

என்றபடி, திருக்கோவையார் அகப்பொருட்டுறைகள் அமைந்த தாயினும், குறிப்புப் பொருளாகிய ஞானார்த்தமும் உடைய தாகும். திருவாசகத்தில் வெளிப்படும் பக்திப் பெருங்காதற் சுவை, காதல் மணங்கமழும் திருக்கோவையாரிலும் காணப்படுகின்றது.

"தோத்திரங்களில் துறை சொல்லவேண்டுவ தென்னெனில், தோத்திரமாவது அன்பினாலே நிகழு மொழி. துறையை அன்பென்று சொல்வது எப்படியெனில், அன்பாவது தொடர்ச்சி யுடையோரிடத்து வைத்த பற்று. பசுவானது கன்றிடத்து வைத்த இரக்கமென்று சொல்லலாம். அந்த இரக்கத் தொடர்ச்சியால் உள்ளமட்டும் உருகுந்தன்மை வருணிக்கப் பாராட்டக்கூடாது, நாயகன் நாயகி இவர்களன்புத் தொடர்ச்சியை நானூறுவிதமாகப் பாராட்டி வருணிக்கக் கூடுமாதலாலும், நாயன்மார் வாக்குக்களும் அப்படியே இருக்கையாலும், துறையாவது அன்பின் முதிர்ச்சியென்றே கொள்வது. இஃதன்றியும் உலகத்திற் காணாததற் குவமையாகக் கண்டதையே உவமித்தாலன்றி வேறொன்றா லறிவித்தால் அது புலப்படாது."* என்ற வாக்கியங்கள் சிந்திக்கத்தக்கன.

## திருக்கோவையார்—நூல் நயம்.

திருக்கோவையாரிலும் திருவாசகத்தில் காணப்படுவது போல நயங்களும் அணிகளும் காணப்படுகின்றன. திருக்கோவையாரின் கவிநயம் இரசிகராற் பெரிதும் பாராட்டப்படுவதாகும்.

* திருக்கோவையாருண்மை.

"மாலயன்பால் இருளாயிருக்கு மொளி" என்னும் வாக்கியம் எவ்வளவு சாதுரியமாக அமைந்துளது!

"...........விண்ணோர் தக்கன் வேள்வியன் வாய்ப்
பாயின சீர்த்திய னம்பலத்தானைப் பழித்துமும்மைத்
தீயன தாற்றல் சிரங்கண்ணிழந்து திசை திசை தாம்
போயின வெல்லையெல்லாம் புக்கு நாடுவன்
பொன்னிலையே"

இப்பாட்டு எத்தகைய சுவையோ டிலங்குவதென்பதை வாசகர் ஓதியுணர்வாராக.

"பணிவார் திறையும் பகைத்தவர் சின்னமுங்
கொண்டு வண்டேர்
அணிவார் முரசினொ டாலிக்கு மாவொ
டணுகினரே"

இவ்வடிகள் இரண்டு சுவைகள் கலந்து இன்பம் தருவது காண்க.

"ஈசற்கி யாம்வைத்த வன்பி னகன்றவன் வாங்கியவெம்
பாசத்திற்காரென் றவன்தில்லை யின்னொளி போன்றவன்றோள்
பூசத் திருநீ றெனவெளுத் தாங்கவன் பூங்கழல்யாம்
பேசத் திருவார்த் தையிற்பெரு நீளம் பெருங்கண்களே"

இப்பாட்டில் பக்திச்சுவை கொழிப்பது காண்க.

பழமொழிகளைச் சுவையோடு எடுத்தாளும் திறமை வாய்ந்த மகா கவிகளில் மணிவாசக ரொருவர்.

"கொடுங்குன்றினின் குடுமி மேற்றேன்
விரும்பு முடவனைப்போல்"

"வறியார் இருமையு மறியார்"

"நெருப்புறு வெண்ணெயும் நீருறு மூப்புமென"
"ஊசி கொற்சேரியில் விற்று"
"பேய்வயினு மரிதாகும் பிரிவு"

காலங்கண்ட அறிவுக்களஞ்சியமாகிய இத்தகைய பழமொழிகள் திருக்கோவையாரில் ஆங்காங்கே பதித்துள்ள மணிகள் போல மிளிர்கின்றன.

திருக்குறளின் சொல்லும்பொருளும் தேவார ஆசிரியர்களது எதிரொலிகளும் திருக்கோவையாரில் காணப்படுகின்றன. 'தெய்வம்பணிந்தறியாள்' என்னும் திருக்கோவை "தெய்வம் தொழாஅள்" என்னும் திருக்குறளினை நினைப்பூட்டுகின்றது.

"பிணியும் அதற்கு மருந்தும் பிறழப் பிறழுமின்னும்"
என்ற திருக்கோவையார்.

"ஒன்றுநோய் நோக்கொன் றந்நோய் மருந்து"
என்னும் குறளினை நினைப்பூட்டுகிறது.

"திருவளர் தாமரை சீர்வளர் காவிக ளீசர்தில்லைக்
குருவளர் பூங்குமிழ் கொங்குபைங் காந்தள்"
என்று தொடங்கும் முதற்செய்யுளின் அடிகள்,

"திருவளர் தாமரை சீர்வளர் செங்கழுநீர்கொள்நெய்தல்
குருவமர் கோங்கம்"
என்ற வாகீசர் திருவாக்கின் எதிரொலியாகும்.

"குஞ்சரங் கோளிழைக்கும்"
என்பது,

"குஞ்சரங் கோளிழைத்தீர்"
என்ற சுந்தரர் வாக்கின் எதிரொலி. திருமூலர் திருமந்திரத்தின் எதிரொலியும் திருக்கோவையாரிலுண்டு.

"தாயுமகளும் நற்றாரமுமாவளே"

என்ற திருமந்திரம், திருக்கோவையாரில்

"தன்னொருபாலவள் அத்தனும் மகனும் தில்லையான்"

என்னுமடியாகப் பரிணமிக்கின்றது. இத்தகைய ஆராய்ச்சியினை வாசகர் தொடர்ந்து செய்வாராக.

திருக்கோவையாரில் உள்ள பலபாடல்களும் பாடியவாய் தேனூறுஞ் செஞ்சொற்களால் அமைந்துள்ளன.

"போதோ விசும்போ புனலோ பணிக ளதுபதியோ
யீதோ வறிகுவ தேது மரிதி யமன்விடுத்த
தூதோ வனங்கன் றுணையோ இணையிலி தொல்லைத்தில்லை
மாதோ மடமயி லோவென நின்றனர் வாழ்பதியே"

"வளைபயில் கீழ்கட னின்றிட மேல்கடல் வானுகத்தின்
றுளைவழி நேர்கழி கோத்தெனத் தில்லைத்தொல்லோன்கயிலைக்
கிளைவயி னீக்கியிக் கெண்டையங் கண்ணியைக் கொண்டுதந்த
விளைவையல் லால்விய வேனய வேன்றெய்வ மிக்கனவே"

"சிந்தாமணி தென்கடலமிர்தம் தில்லையானருளால்
வந்தா விகழப் படுமே மடமான் விழிமயிலே
அந்தாமரை யன்னமே நின்னையான் அகன்றாற்றுவனோ
சிந்தா குலமுற் றென்னோ என்னை வாட்டம் திருத்துவதே"

"தேவரிற் பெற்றநஞ் செல்வக் கடிவடி வார்திருவே
யாவரிற் பெற்றினி யார்சிதைப் பார்இமை யாதமுக்கண்
மூவரிற் பெற்றவர் சிற்றம் பலமணி மொய்பொழில்வாய்ப்
பூவரிற் பெற்ற குழலியென் வாடிப் புலம்புவதே"

"சிறைவான் புனற்றில்லைச் சிற்றம் பலத்துமென் சிந்தையுள்ளும்
உறைவான் உயர்மதிற் கூடலின்ஆய்ந்தஒண் தீந்தமிழின்
துறைவாய் நுழைந்தனை யோஅன்றி ஏழிசைச் சூழல்புக்கோ
இறைவா தடவரைத் தோட்கு என்கொலாம்புகுந் தெய்தியதே"

"மீண்டா றெனவுவந் தேன்கண்டு நும்மைஇம் மேதகவே
பூண்டா ரிருவர்முன் போயின ரேபுலி யூரெனநின்
றூண்டானருவரை யாளியன் றுனைக்கண்டேனயலே
தூண்டா விளக்கனை யாய்என்னை யோஅன்னை சொல்லியதே."

இத்தகைய பாடல்கள் முழுமாணிக்கங்களாக மிளிர்கின்றன வன்றோ?

"அமிர்தங் குணங்கெடினும்
காலத்தினுல்மழை மாறினும் மாறாக் கவிகை நின்பொற்
சீலத்தைநீயும் நினையாதொழிவதென் தீவினையே"

என்று பாங்கன் நொந்துரைப்பதில் காணப்படும் நயம் இரசிகர் மனத்தைக் கொள்ளை கொள்ளுவதாகும். இத்தகைய நயங்களுக்கு ஓர் கொள்கலமாக விளங்குவது திருக்கோவையார்.

இந்நூல் 'சொன்னோக்கும் பொருள்நோக்கும் தொடை நோக்கும் நடைநோக்கும் துறையினோக்கோ டெண்ணோக்குங் காண' ஓர் அரிய இலக்கியமாக அமைந்துள்ளதாகும். இது பற்றியன்றே சிவப்பிரகாசரும்,

"......திருக்கோவையு மெழுதிக்கொளினும்
நந்தாவுரையை யெழுதவெவ்வாறு நவின்றருளே"

என்று பாராட்டுவாராயினர்.

"பொன்னும் மணியும் பவளமும் போன்று
பொலிந்திலங்கி மின்னும்"

சொற்றொடர்கள் பல பாடல்களிலும் காணப்படுகின்றன. செந்தமிழ்த்தெய்வத்தை "ஒவியப் பொற்கொழுந்"தாக்கி அழகு செய்யும் மெய்யணிகளில் திருக்கோவையார் ஒன்றென்பதில் ஒரு சிறிதும் ஐயமில்லை. இப்பாடல்களின் சொல்நயம்

பொருள் நயத்தோடு இசைநயமும் பெரிதும் பாராட்டத் தக்க தாகும்.

## திருவாசகம்

மணிவாசகர் திருவாக்கிலே விளைந்த இரண்டு நூல்களி லும், திருவாசகமே தலைசிறந்து விளங்குவதாகும். சைவத் திருமுறைகளில் எட்டாவது திருமுறையாக, திருவாசகம் திருக்கோவையார் இரண்டும் அமைவன என்பதை முன்னரே குறித்துள்ளோம். எனினும் திருவாசகம் மட்டுமே எட்டாவது திருமுறையாக அமைவதாகும் என்ற கொள்கையும் சைவருள் வழங்கிவருகின்றது. திருமுறைகண்ட புராணம் உமாபதி சிவாச்சாரியார்.

"வள்ளுவர்நூல் அன்பர் திரு வாசகம் தொல் காப்பியமே
தெள்ளுபரி மேலழகர் செய்தவுரை—ஒள்ளியசீர்த்
தொண்டர் புராணந் தொகுசித்தி யோராறுந்
தண்டமிழின் மேலாந் தரம்"

என்று கூறும் ஆறுசிறந்த நூல்களில் திருவாசக மொன்றாக மதிக்கப்பெறுகின்றது.

"தேவர் குறளுந் திருநான் மறைமுடிவும்
மூவர் தமிழு முனிமொழியுங்—கோவை
திருவா சகமும் திருமூலர் சொல்லும்
ஒருவா சகமென் றுணர்."

என்னும் தனிப்பாட்டிலிருந்து, திருக்கோவையாரும் திரு வாசகமும், திருக்குறள், திருநான்மறை, தேவாரம், திருமூலர் திருமந்திரம் என்று வடமொழியிலும் தென்மொழியிலும் பிர சித்தியாக வழங்கப்பெறும் பெருநூல்களோடு சமமாகவைத்து எண்ணப்பட்டனவென்பது இனிது புலனாகின்றது.

திருவாசகம் திருப்பெருந்துறையில் அருளிச்செய்யப் பட்டதாகக் கருதப்படும் சிவபுராணத்தோடு தொடங்கி அச்சோப்பதிகத்தோடு முடிவு பெறுகின்றது. சிவபுராண மென்பது சிவபெருமானது அநாதி முறைமையான பழமையினைக் குறிப்பதாகும். இப்பாட்டு, "நமச்சி வாய வாஅழ்க, நாதன்தாள் வாழ்க, இமைப்பொழுதும் என் னெஞ்சில் நீங்காதான் தாள் வாழ்க" என்று கம்பீரமாகத் தொடங்குகின்றது. இறைவனது அருவநிலையினைச் சொற்க ளால் சித்திரிக்க முயல்வது இது. ஏகனைகவும் அநேகனைகவும், ஈசனைகவும், எந்தையாகவும், நேயத்தேநின்று அன்பர்களை மகிழ்வித்து ஓங்குவிக்கும் பெருமான் பெருந்துறையிலும் மணிவாசகர் சிந்தையிலும் நின்று அருள்செய்கின்ருர்; "விண் ணிறைந்து மண்ணிறைந்து மிக்காய் விளங்கொளியாய் எண் ணிந்து எல்லையிலாது" பரந்துநிற்கும் பரம்பொருள் பொய்யா யினவெல்லாம் போயகல வந்தருளி மெய்ஞ்ஞானமாகி மிளிர் கின்றது.

"கறந்தபால் கன்னலொடு நெய் கலந்தாற்போலச்
சிறந்தடியார் சிந்தனையுள் தேனூறி நின்று"

அருள் சுரக்கும் இறைவன்

"நேச அருள் புரிந்து நெஞ்சில் வஞ்சங்கெடப்
பேராது நின்ற பெருங்கருணைப் போரா"ருகக்

காட்சி தருகின்ருன்.

## திருவருட் புகழ்ச்சி முதலியன

இறைவனது திருவருட்புகழ்ச்சி முறையினைக் கூறுவது கீர்த்தித் திருவகவல். இறைவனது இன்னருளைப் புகழும் பாசுரங்கள் பல திருவாசகத்தில் காணப்படுகின்றன. திருவண்

டப்பகுதி இறைவனது தாலகுக்குமத்தை வியப்பதாகும். இவ்விரண்டும், போற்றித் திருவகவலும் தில்லையில் அருளிச் செய்யப்பட்டன வென்பர். இப்பாடல்களின் நடையும் பொருளும் கம்பீரமாகவும் மிடுக்காகவும் அமைந்துள்ளன.

" தில்லை மூதூ ராடிய திருவடி
பல்லுயி ரெல்லாம் பயின்றன னாகி
எண்ணில் பலகுணம் எழில்பெற விளங்கி
மண்ணும் விண்ணும் வானோர் உலகும்
துன்னிய கல்வி தோற்றியு மழித்தும்
என்னுடை யிருளை யேறத் துரந்தும்
அடியா ருள்ளத் தன்பு மீதூரக்
குடியாக் கொண்ட கொள்கையுஞ் சிறப்பும்

(கீர்த்தித்திருவகவல்)

" பரமா னந்தப் பழங்கட லதுவே
கருமா முகிலிற் றோன்றித்
திருவார் பெருந்துறை வரையி லேறித்
திருத்தகு மின்னொளி திசைதிசை விரிய
ஐம்புலப் பந்தனை வாளா இரிய
வெந்துயர்க் கோடை மாத்தலை கரப்ப
நீடெழிற் றோன்றி வாளொளி மிளிர
எந்தம் பிறவியிற் கோப மிகுத்து
முரசெறிந்து மாப்பெருங் கருணையின் முழங்கிப்
பூப்புறை யஞ்சலி காந்தள் காட்ட
எஞ்சா இன்னருள் நுண் துளிகொள்ளச்
செஞ்சுடர் வெள்ளம் திசைதிசை தெவிட்டவரையுறக்
கேதக்குட்டம் கையற வோங்கி
இருமுச்சமயத் தொருபேய்த் தேரினை
நீர்நசைதரவரும் நெடுங்கண் மானகணம்

தவப்பெருவாயிடைப் பருகித் தளர்வொடும்
அவப்பெருந் தாபம் நீங்கா தசைந்தன
வாயிடை வானப் பேரியாற் றகவயில்
பாய்ந்தெழுந் தின்பப் பெருஞ்சுழி கொழித்துச்
சுழித்தெம்பந்த மாக்கரை பொருதலைத்திடித்
தூழூ ழோங்கிய நங்கள்
இருவினைமாமரம் வேர்பறித்தெழுந்து
உருவ வருணீ ரோட்டா வருவரைச்
சந்திரன்வான்சிறை கட்டிமட்டவிழ்
வெறிமலர்க்குளவாய் கோலி நிறையகின்
மாப்புகைக் கரைசேர் வண்டுடைக் குளத்தின்
மீக்கொள மேன்மேன் மகிழ்தலி னோக்கி
அருச்சனை வயலுள் அன்புவித் திட்டுத்
தொண்ட வுழவ ராரத் தந்த
அண்டத்தரும்பெறன் மேகன் வாழ்க" (திருவண்டப்பகுதி)

"அடியொடு நடுவீ றானாய் போற்றி
நரகொடு சுவர்க்க நானிலம் புகாமல்
பரகதி பாண்டியற் கருளினை போற்றி
ஒழிவற நிறைந்த ஒருவ போற்றி
செழுமலர்ச் சிவபுரத் தரசே போற்றி
கழுநீர் மாலைக் கடவுள் போற்றி
தொழுவார் மையல் துணிப்பாய் போற்றி
பிழைப்பு வாய்ப்பொன் றறியா நாயேன்
குழைத்தசொன் மாலை கொண்டருள் போற்றி
புரம்பல எரித்த புராண போற்றி
பரம்பரஞ் சோதிப் பரனே போற்றி
போற்றி போற்றி புயங்கப் பெருமான்
போற்றி போற்றி புராண காரண
போற்றி போற்றி சயசய போற்றி (போற்றித்திருவகவல்).

மேலே குறித்த அடிகளை ஓதுந்தோறும் ஓதுந்தோறும் தமிழ் மொழியின் ஆற்றல் நன்கு புலனாகும். போற்றித்திருவகவல் மணிவாசகப்பெருமானது உள்ளத்தில் விளைந்த பலவகை யான நிகழ்ச்சிகளை வெளியிடுகின்றது.

"தெய்வம் என்பதோர் சித்தமுண்டாகி முனிவிலாத தோர் பொருளது கருதலும்" மாயாசக்திகள் வெவ்வேறுயுள்ள தம் மாயைகளைத் தொடங்கின. அன்பரும் அயலவரும் கூடி நாத்திகம்பேசி நாத்தழும்பேறினர், உறவினர் பதறினர்.

" விரதமே பரமாகவேதியரும்
சரத மாகவே சாத்திரங் காட்டினர்
சமய வாதிகள் தத்த மதங்களே
அமைவ தாக அரற்றி மலைந்தனர்
மிண்டிய மாயா வாத மென்னும்
சண்ட மாருதம் சுழித்தடித் தாஅர்த்து
உலோகா யதனெனும் ஒண்டிறற் பாம்பின்
கலாபே தத்த கடுவிட மெய்தி
அதிற்பெரு மாயை எனைப்பல சூழவும்
தப்பா மேதாம் பிடித்தது சலியாத்
தழலது கண்ட மெழுகது போலத்
தொழு துளமுருகி யழுதுடல் கம்பித்து
ஆடியும் அலறியும் பாடியும் பரவியும்
கொடிறும் பேதையும் கொண்டது விடாதெனும்
படியே யாகிநல் லிடையறா அன்பிற்
பசுமரத் தாணி யறைந்தாற் போலக்
கசிவது பெருகிக் கடலென மறுகி
அகங்குழைந் தனுகுல மாய்மெய் விதிர்த்துச்
சகம்பே யென்று தம்மைச் சிரிப்ப

நாணது வொழிந்து நாடவர் பழித்துரை
பூணது வாகக் கோணுத லின்றிச்
சதுரிழந் தறிமால் கொண்டு சாரும்
கதியது பரமா வதிசய மாகக்
கற்று மனமெனக் கதறியும் பதறியும்,
மற்றோர் தெய்வம் கனவிலும் நினையா
தருபரத் தொருவன் அவனியில் வந்து
குருபர னாகி யருளிய பெருமையைச்
சிறுமையென் றிகழாதே திருவடி யிணையைப்
பிறிவினை யறியா நிழலதுபோல
முன் பின்னாகி முனியா தத்திசை
என்புநைந் துருகி நெக்குநெக் கேங்கி
அன்பெனு மாறு கரையது புரள
நன்புல னொன்றி நாதவென் றரற்றி
உரைதடு மாறி யுரோமஞ் சிலிர்ப்பக்
கரமலர் மொட்டித் திருதய மலரக்
கண்களி கூர நுண்டுளி யரும்பச்
சாயா வன்பினை நாடொறுந் தழைப்பவர்
தாயே யாகி வளர்த்தனை போற்றி."

இவ்வடிகளில் ஆன்ம விசாரணை செய்துவந்த மணிவாசகர் உள்ளத்தில் எத்தகைய பூசல்கள் விளைந்தன, எத்தகைய சோதனைகள் நிகழ்ந்தன-என்பது திறமையோடு சித்திரிக்கப் பெறுகின்றது.

## திருச்சதகம்.

இது மாணிக்கவாசகரது 'பக்திவைராக்கிய விசித்திரம்' கூறுமென்பர். மெய்யுணர்தல் என்பது தொடங்கி 'ஆநந்தாதீதம்' இறுதியாகப் பத்துவகையாய்த் திகழ்வது திருச்சதகம்.

"மெய்தா னரும்பி விதிர்விதிர்த்துன் விரையார் கழற்கென்
கைதான் றலைவைத்துக் கண்ணீர் ததும்பி வெதும்பியுள்ளம்
பொய்தான் றவிர்ந்துன்னைப் போற்றி சயசய போற்றியென்னும்
கைதான் நெகிழ விடேன் உடையாய் என்னைக் கண்டுகொள்ளே"

'என்னையாளுடைய ஐயனே! உன் திருவருளுக் கிலக்காகிய திருவடியைப் பெறும்பொருட்டு என் மெய்பொடித்து, விதிர்விதிர்த்து, கைகளைத் தலைமேல்வைத்து, கண்ணீர்ததும்பி, மனம் வெதும்பி, பொய்யொழிந்து, மெய்ப்பொருளாகிய உன்னை ஜெயஜெய போற்றியென்று துதிக்கின்ற ஒழுக்கத்திற் சோர்விலேன். யாண்டும் கண்ணுகப்பரந்துள்ள நீயே கண்டு கொள்வாயாக என்று இங்ஙனம் மணிவாசகர் மனமுருகிச் செய்யும் பிரார்த்தனையோடு திருச்சதகம் தொடங்குகின்றது.

"கொள்ளேன் புரந்தரன் மாலயன் வாழ்வு குடிகெடினும்
நள்ளேன் நினதடி யாரொடல் லால்நர கம்புகினும்
எள்ளேன் திருவரு ளாலே இருக்கப் பெறின் இறைவா
உள்ளேன் பிறதெய்வம் உன்னையல்லா தெங்க ளுத்தமனே"

என்பது, குலகிரிகளசைந்தாலும் அசையாத, பக்தரது தெய்விக மனநிலையாகும்.

"யானேதும் பிறப்பஞ்சேன் இறப்பதனுக் கென்கடவேன்
வானேயும்பெறில்வேண்டேன் மண்ணாள்வான்மதித்துமிரேன்"

என்பதும் பக்தரது கலங்காமன நிலையேயன்றோ! 'வானம் முதலாகிய பல பொருள்களாகியும் அவற்றின் உண்மையின்மைகளாகியும் அவற்றை இயங்குவிப்போனாகியும் இருக்கின்ற இறைவனை என்சொல்லி வாழ்த்துவேன்' என்று ஒருகால் மணிவாசகர் அதிசயித்துநிற்பர். 'தேவர் உன்னைப் பரவுகின்றனர்; வேதங்கள் பாடாநின்றன; உமாதேவியார் ஒருபாகத்து

நீங்காதிருக்கின்றனர்; மெய்யடியார்கள் கூடித் தரிசியா நின்றனர்; யான் ஒன்றும் செய்திலேன்; ஆயினும் என்னை உன் பெருங்கருணையால் ஆட்கொள்ளவேண்டும்'—என்று, ஒரு கால் பிரார்த்தனை செய்வர். 'நெஞ்சமே! நீ இறைவனது பிரிவுக்காற்றாது உருகி இறந்துபட்டாயில்லை. ஆதலால் நீ பயனடையாது ஒழிகின்றனை' என்றொருகால் நெஞ்சொடு புலம்புவர். மீண்டும் நெஞ்சினை நோக்கி 'யான் வற்புறுத்திச் சொல்லியும் இறைவனை வழிபட்டுய்யாமல் உனக்கு நீயே கேடுசூழ்ந்து துன்பக்கடலில் வீழ்கின்றாய்! உன் அறியாமைக்கு நான் என் செய்வேன்?' என்றிரங்கி அறிவுறுத்துவார். இத்தகைய பலவகை மனநிலைகளும் திருச்சதகத்தில் காணப்படுகின்றன.

"வெள்ளந்தாழ் விரிசடையாய் விடையாய் விண்ணோர்
பெருமானே யெனக்கேட்டு வேட்ட நெஞ்சாய்ப்
பள்ளந்தா ழுறுபுனலிற் கீழ்மே லாகப்
பதைத்துருகு மவர்நிற்க என்னை யாண்டாய்க்
குள்ளந்தா ணின்றுச்சி யளவு நெஞ்சா
யுருகாதா லுடம்பெல்லாங் கண்ணா யண்ணா
வெள்ளந்தான் பாயாதா னெஞ்சங் கல்லாங்
கண்ணிணையு மரமாந்தீ வினையி னேற்கே."

இத்தகைய பாடல்கள், சுடர்ச்சோதி வெள்ளமாகப் பெருகி வரும் மணிவாசகத்திலே கண்டோர் மருளும்படி தோன்றும் சுழிகளாகும். இதுபோன்ற பாடல்கள் 'கல்லைப்பிசைந்து கனியாக்கும்' அற்புதம் நிகழ்த்துவன வென்பதில் ஐயமில்லை.

"கேட்டாரு மறியாதான் கேடொன்றில்லான்
கிளையிலான் கேளாதே யெல்லாங் கேட்டான்
நாட்டார்கள் விழித்திருப்ப ஞாலத்துள்ளே
நாயினுக்குத் தவிசிட்டு நாயி னேற்கே

காட்டாதன வெல்லாங் காட்டிப் பின்னுங்
கேளாதன வெல்லாங் கேட்பித் தென்னை
மீட்டேயும் பிறவாமற் காத்தாட் கொண்டா
னெம்பெருமான் செய்திட்ட விச்சைதானே.''

என்றபாசுரத்தில் பொதிந்துள்ளகருத்துக்கள் நம்மைத் தாங்கி நிற்கும் அற்புதப் பெருஞ் சக்தியின் இயல்பினை வெளியிட முயல்கின்றன. சொற்களாற் சொல்லவொண்ணாத இரகசிய உண்மைகளைச் சொற்கொண்டு சித்திரிக்க வல்ல 'மாய வித்தை'யில் கைதேர்ந்தவர் மணிவாசகப் பெருமானவர். ஒழுக்க நெறி யொன்றினையே வற்புறுத்தும் சமயங்களில் மக்கள் உள்ளத்திற்கு இத்தகைய ஆறுதலும் ஆனந்தமும் கிடைப்பதரிது. அன்பு நெறியினை உயிர் நிலையாகக்கொண்ட சமயங்கள் இறைவனது கோலத்தினைக்குறிப்பதுபோற் சீலத்தினையும் வற்புறுத்துகின்றன. இறைவனது ஞானத்திருக்கோயிலில் இரண்டு வாயில்களுண்டு. ஒன்று அவனது பெருமை அல்லது கோலம். இவ்வாயிலை அணுகத்துணிவோர் யாருமில்லை. இரண்டாவது வாயில் பொறை அல்லது சீலமாகும். இதுவே அடியார் அருள்நெறி யெய்திச்சென்று அடிவணங்குதற்குரிய வாயிலாகும். இறைவனது முகச்சோதியை நோக்கும் கண்கள் கூசிக்குலைகின்றன. ஆனால் அடிச்சோதியோ அடியவர்க்குரியதாகும். அன்னையர் தீம்பால் குழந்தைகளுக்கே உரியது. அவ்வண்ணமே இறையருளின் அறிகுறியாகிய திருவடி 'பணிவினால் மனமதொன்றும்' பக்தமணிகளுக்கே உரியதாகும். அன்பு நெறியின் பரம இரகசியங்களை மணிவாசகரது அருள்வாக்கு, வாசகர் மனக்கண்ணுக்கு இலக்காக்குகின்றது.

---

## நீத்தல் விண்ணப்பம்.

இது பிரபஞ்ச வைராக்கியத்தைக் கூறுமென்றும் திருவுத்தர கோசமங்கையில் அருளிச் செய்யப்பட்டதென்றுங் கூறுவர். பக்திக்கு விவேகமும் வைராக்கியமும் இன்றியமையாதனவாகும். விவேகமில்லாத பக்தி மூடபக்தியாகும். வைராக்கியமில்லாத பக்தி இறைவனது சோதனைகளுக்கு உடைந்து சிதறிப்போகும். "எம் இறைவனே! எம் குற்றங்களை உன் திருவருள் நீக்குவதெவ்வாறென்று மனம் புழுங்குகின்ற என்னைக் கைவிடுதல் உனக்குத் தகுதியன்று. ஆசையும் அச்சமும் என்னை இரண்டு பக்கத்திலும் இழுக்கின்றன. இருதலைக் கொள்ளியின் உள்ளுறும் எறும்பு போல உன்னைப் பிரிந்து வருந்தும் என்னைக் கைவிடுதல் தகுதியன்று. ஐம்புலன்களால் வஞ்சிக்கப்பெற்று உன் திருவடிகளைப் பிரிந்தேன். என்னைக் கைவிடுதல் உனக்குத் தகுதியன்று. இறைவனே! நீ என்னைத் தடுத்தாட்கொள்ளவும் யான் ஐம்புலவாசையால் உன்னைவிட்டு நீங்கும் இயல்பினேனாயினும் என்னைக் கைவிடுதல் தகுதியன்று. நீர்ப்பெருக்கில் நின்றும் நாவறண்டவன்போல உன் அருட்பெருக்கினைப் பெற்றிருந்தும் துன்பத்தினின்றும் நீங்காத என்னைக் கைவிடுதல் உனக்குத் தகுதியன்று. எஞ்ஞான்றும் யான் கண்டறியாத பெருங்களிப்பைத் தந்தருளல்வேண்டும். இறைவனே! என்னை, 'அப்பா! அஞ்சல்!' என்பவரின்றி எய்த்தலைந்தேன். என்னைக் கைவிடுதல் உனக்குத் தகுதியன்று. இறைவனே! என்னை யாண்டருள், விற்றுக்கொள், ஒற்றிவை என்பேனன்றி வேறு யாது செய்யக்கடவேன்? என் வல்வினைக்காட்டை உன் அருளாகிய தீயினால் எரித்தவனே! கைவிடுதல் தகுதியன்று. கோமளமே! கொம்பரில்லாக் கொடிபோல் சுழன்று வெதும்புகின்றேன்.

என்னைக் கைவிடுதல் தகுதியன்று" என்று இவ்வாறு பலபல பண்பினராகி வருந்திக் கதறும் குழந்தையுள்ளம் நீத்தல் விண்ணப்பத்தில் பிரதி பலிக்கின்றது.

## திருவெம்பாவை

இது திருவண்ணாமலையில் அருளிச் செய்யப்பட்டதென்பர். பண்டைநாளில் மகளிர் 'பாவைநோன்பு' என்ற ஓர் நோன்பினை அனுஷ்டிப்பதுண்டு. இதனைத் தழுவி மணிவாசகர் இயற்றிய இருபது பாசுரங்களும் இருபது விலையிலா முழு மணிகளாகவே போற்றத்தக்கன. ஆதியும் அந்தமுமில்லா அருட்பெருஞ் சோதியைப் பாடும்பெண்கள், "வாட்டடங்கண் மாதே! வளருதியோ, வன்செவியோ, நின்செவிதான் போதார் அமளியின்மேல் நின்றும் புரண்டு இங்ஙன் ஏதேனும் ஆகாள் கிடந்தாள், என்னே! என்னே! எப்போது இப்போதா ரமளிக்கு நேசமும் வைத்தனையோ?" என்றிவ்வாறு நகைச் சுவை தோன்ற விளையாடி மகிழ்வது .பேரினிமை பயப்பதாகும்.

"முத்தன்ன வெண்ணகையாய் முன்வந்தெதிரெழுந்தென்
அத்தன் ஆனந்தன் அமுதன் என்றள்ளூறித்
தித்திக்கப் பேசுவாய் வந்துன் கடைதிறவாய்
பத்துடையீரீசன் பழவடியீர் பாங்குடையீர்
புத்தடியோம் புன்மை தீர்த்தாட்கொண்டால் பொல்லாதோ
எத்தோநின் னன்புடைமை யெல்லோ மறியோமோ
சித்த மழகியார் பாடாரோ நஞ்சிவனை
யித்தனையும் வேண்டு மெமக்கேலோ ரெம்பாவாய்."

என்னும் பாட்டை வாசிக்கும்போதே 'அள்ளூறித் தித்திக்கும் பேறுபெறுகின்றோம். 'பழவடியீர்! புதிய அடியேமுடைய புன்

மைதீர்த்து ஆட்கொண்டால் பொல்லாதோ" என்று ஏசும் பெண்மணியின் செம்மனமும் இள நகையும் எவ்வளவு அழகாகச் சித்திரிக்கப்படுகின்றன ! 'முத்துப்போன்ற வெண்ணகையாய்! இன்னம் விடிந்ததில்லையே ?' என்று தலைவாயிலில் நின்று வினவுகின்ற பெண்மணிக்கு உள்ளேயிருந்து, 'வண்ணக்கிளிமொழியார் எல்லாரும் வந்தாரோ ?' என்ற வினா எதிர்மொழியாக வருகின்றது. 'எண்ணிக்கொண்டு உள்ளவாறு சொல்லுவோம். அதுவரையும் கண்துயின்று காலம்போக்காதே! நீயே வந்து எண்ணித் தொகைசெய்து குறைந்தால் மீண்டும் கண்ணுறங்குவாயாக.' என்று முதலாவது பெண்மணி கூறி நகையாடுகின்றாள். பக்திச் சுவையோடு நகைச்சுவையும் கலந்து பரிமளிக்கும் இப்பாடல்களில் கள்ளமற்ற பெண்மையுள்ளம் புலனாகின்றது. 'விண்ணுக்கொரு மருந்தை வேதவிழுப்பொருளைக் கண்ணுக்கினியானை'ச் சித்தமழகியார் பாடும் பரிசு, சிந்திக்கும் நெஞ்சிற்கும் ஓதும் நாவிற்கும் ஒருங்கே பேரின்பம் பயப்பதாகும்.

"கோழி சிலம்பச் சிலம்பும் குருகெங்கும்
ஏழில் இயம்ப இயம்பும்வெண் சங்கெங்கும்"

என்றவண்ணம் கோழிகள் கூவுகின்றன; சிலம்பும் பறவைகளெல்லாம் எவ்விடத்தும் கீதம் பாடுகின்றன. வெள்ளிய சங்கங்கள் எங்கனும் இயம்புகின்றன. இத்தகைய ஆனந்த மயமான காலைவேளையிலே, காண்பதெலாம் கேட்பதெலாம் இன்பமேயன்றோ! இவ்வேளையில் ஒப்பில்லாத பரஞ்சோதியின் ஒப்பற்ற பெருங்கருணையாகிய விழுப்பொருளைப் பாடும் பெண்களின் தீங்குரலின்பம் பேரின்பமேயன்றோ!

"முன்னைப் பழம்பொருட்கும் முன்னைப் பழம்பொருளே!
பின்னைப் புதுமைக்கும் பேர்த்துமப் பெற்றியனே!"

என்ற வண்ணம் இறைவன் அநாதியாகவுள்ள பழமைக்கும் பழமையாகி நிற்கின்றான்; பின்னைப் புதுமைக்கும் புதுமையாக இருக்கின்றான். இத்தகைய பரம்பொருளினைப்பாடும் பெண்மணிகள் அவனருளால் அவன் பெருமையினைத் தங்கள் இசையிலே இசைவித்துக்கொள்ளப் பார்க்கின்றனர்.

"பாதாள மேழினுங்கீழ் சொற்கழிவு பாதமலர்
போதார் புனைமுடியு மெல்லாப் பொருள்முடிவே
பேதை யொருபாற் றிருமேனி யொன்றல்லன்
வேதமுதல் விண்ணோரு மண்ணுந் துதித்தாலு
மோத வுலவா வொருதோழன் றொண்டருளன்
கோதில் குலத்தான்றன் கோயிற்பிணாப் பிள்ளைகாள்
ஏதவனூ ரேதவன்பே ராருற்றா ராரயலார்
ஏதவனைப் பாடும் பரிசேலோ ரெம்பாவாய்''

என்ற இப்பாட்டில் 'தேவதேவன்சிவன் பெருந்தன்மை' யென்று அப்பர்சுவாமிகள் குறித்துள்ள இறைநிலை நன்கு வெளியிடப் பெறுகின்றது.

'பாரொருகால் வந்தனையாள்' 'முதேரென்னக் கையால் குடைந்து குடைந்துன் கழல்பாடி' 'பைங்குவளைக் கார்மலரால் செங்கமலப் பைம்போதால்' 'காதார் குழையாடப் பைம்பூண் கலனாடக் கோதை குழலாட வண்டின் குழாமாடச் சீதப் புனலாடிச் சிற்றம்பலம்பாடி' 'பொன்னஞ் சிலம்பிற் சிலம்பி எங்குமிலாததோர் இன்பம் நம்பாலதா' 'கண்ணாரிரவி கதிர் வந்து கார்கரப்பத் தண்ணொளி மழுங்கித் தாரகைகள் தாமகல' ஆதிய சொற்றொடர்கள் பூவினும் மென்மைவாய்ந்து பொலிவனவாகும்.

---

## திருவம்மானை

இது திருவண்ணாமலையில் அருளிச் செய்யப்பட்டதென் பர். இப்பாடல்கள் உள்ளத்திற்கு ஆனந்த வெறியூட்டுவன வாகும்.

"கையார் வளைசிலம்பக் காதார் குழையாட
மையார் குழல்புரளத் தேன்பாய வண்டொலிப்பச்
செய்யானை வெண்ணீ றணிந்தானைச் சேர்ந்தறியாக்
கையானை யெங்குஞ் செறிந்தானை யன்பர்க்கு
மெய்யானை யல்லாதார்க் கல்லாத வேதியனை
யையா றமர்ந்தானைப் பாடுதுங்கா ணம்மானாய்"

இத்தகைய பாடல்கள் தேனையும் பாலையும் கன்னலையும் ஒத்து உள்ளத்திற்கு இனிமைதருவனவாகும்.

"ஊனா யுயிராய் உணர்வாயென் னுட்கலந்து
தேனா யமுதமுமாய்த் தீங்கரும்பின் கட்டியுமாய்"

விளங்கும் இறைவன் அன்பு நெறி நிற்போர்க்கு எளிதில் வச மாவன். அன்பின் முதிர்ச்சியே காதலாகக் கனிகின்றது. இத் தகைய காதலோடு "இறைவனை 'உள்ளுருகித்தேடும்' பக்தர் தம்மை மறந்து பெண்மைநிலையினை எய்துகின்றார். இந்நிலையில்,

"சூடுவேன் பூங்கொன்றை சூடிச் சிவன்திரள் தோள்
கூடுவேன் கூடி முயங்கி மயங்கி நின்று
ஊடுவேன் செவ்வாய்க் குருகுவேன் உள்ளுருகித்
தேடுவேன் தேடிச் சிவன் கழலே சிந்திப்பேன்
வாடுவேன் பேர்த்து மலர்வேன்."

என்று பேசுவது பொருத்தமுடையதேயாகும். காதல் மய யாக ஒளிரும் பக்தியுள்ளம் ஒரு தூய நறுமலரினை யொத்தது. ஞானவொளி வீசி அன்புமணம் கமழும் இம்மலர் இறைவன்

சந்நிதியிலன்றோ மலர்ச்சி பெற்றிலகுவது? இறைவனோடு கூடி முயங்கும்போது மலர்ச்சியும் விலகி ஊடும்போது வாட்டமும் ஏற்படுவது இயல்பேயன்றோ? 'வாடுவேன் பேர்த்தும் மலர்வேன்' என்ற மணிவாக்கிலே ஊறித்ததும்பும் கவியின்பம் 'அறிதோறறியாமை' காணும் காதலின்பத்தினை ஒத்திருப்பதாகும்.

## திருப்பொற்சுண்ணம் முதலியன

திருப்பொற்சுண்ணம், திருக்கோத்தும்பி, திருச்சாழல், திருத்தெள்ளேணம், திருப்பூவல்லி முதலிய பிரபந்தங்கள் வெண்சொல்லும் புதைபொருளுமுடையன. "மங்கைமீர்: வளை முதலாயின ஆரவாரிக்க இறைவன் நம்மை ஆட்கொண்ட விதங்களைப் புகழ்ந்து பாடி யாம் பொற்சுண்ணமிடிப்போம். நகை நிலவெறிக்கவும் வாய்ப்பவளம் துடிக்கவும், எம்பெருமானைப் பாடுங்கள். பொய்யர்க்குப் பொய்யனும், மெய்யர்க்கு மெய்யனுமாகிய சிவபெருமானைப் பாடுங்கள். இறைவனது வீரகுணங்களையும் வண்மைக் குணத்தையும்பாடி இறைவன்பொருட்டு நாம் பொற்சுண்ணமிடிப்போம்" என்றிவ்வாறு மகளிரை நோக்கிக் கூறுவது திருப்பொற் சுண்ணமாகும்.

"உயர்போதம் ஒரு வண்டாகச் சித்த விகாரத் தூது செப்பிவிடல் கோத்தும்பி" என்ற வண்ணம், அரசவண்டை நோக்கி அவன் திருவடியிற் சென்று ஊதுவாயாக என்று முழங்குவது திருக்கோத்தும்பி.

"தினைத்தனை யுள்ளதோர் பூவினிற்றே னுண்ணாதே
நினைத்தொறுங் காண்டொறும் பேசுந்தொறும் எப்போதும்
அனைத்தெலும் புள்நெக ஆனந்தத் தேன்சொரியும்
குனிப்புடை யானுக்கே சென்றூதாய் கோத்தும்பீ."

'அரசவண்டே! அற்பமாகிய பூந்தேனை யுண்ணுமல், நினைக்குந் தோறும், காணுந்தோறும், பேசுந்தோறும் ஆகிய எப்போதும் உடலுயிர்கள் உருகும்படி ஆனந்தத்தேன் பொழியும் ஆனந் தக்கூத்தனுக்கே சென்று ஊதுவாயாக,—என்று கூறும் நயம் சிந்திக்கச் சிந்திக்க இன்பம் பயப்பதாகும். இப்பாட்டோடு பின்வரும் அப்பர் சுவாமிகளது அருள்மொழியினை ஒப்பிடுக.

"கனியினும் கட்டிபட்ட கரும்பினும்
பனிமலர்க்குழற் பாவை நல்லாரினும்
தனிமுடி கவித்தாளு மரசினும்
இனியன் தன்னடைந்தார்க்கு இடைமருதனே."

இத்தகைய கருத்துக்கள் 'ஸூபி' (Sufi) கவிஞர் கவிகளி லும் காணப்படுகின்றன. இங்ஙனம் 'ஒன்றாய் முளைத்தெழுந்து எத்தனையோ கவடுவிட்டு' நம்மை நன்ருகவைத்துள்ள பெருஞ் செல்வமாகிய இறைவனையே முதற்கண் நாடுதல் வேண்டும் என்ற கருத்து மணிவாசகர் பாடல்களில் மணிகளைக் கோக் கும் பொற்சரடுபோல் ஊடுருவிச் செல்லுகின்றது.

இறைவனுடன் சென்று கூடுவதைக் கூறுவது திருத்தெள் ளேணமென்பர். 'புத்தன் புரந்தராதியர் அயன்மால் போற்றிசெயும் பித்தன்' இவரை 'உலகச்சமயங்கள் ஒவ் வாத சாத்திரமாம்' கடலினின்றுங் கரையேற்றியருளிய அருள் மாட்சியினை வியந்து கூறுவது, இவரது அனுபவத்தினை வெளி யிடுவதேயாகும். திருச்சாழல் இறைவனுடைய அருட்சத்தி விளையாட்டினைக் கூறுமென்பர். புத்தவாதம் செய்தபொழுது ஈழமன்னனது ஊமைப்பெண் வாயிலாக மாணிக்கவாசகர் சைவத்திறத்தை வெளிப்படுத்தினரென்றும் அப்பெண் ஊமைத் தன்மை நீங்கிய நிலையில் வினக்களுக்கு வாய்திறந்து

விடை பகர்ந்தனளென்றும் புராணங் கூறுகின்றது. இவ் வினு விடைகளுக்கு ஓர் உதாரணந் தருவோம்.

வினு:—" கோயில் சுடுகாடு கொல்புலித்தோல் நல்லாடை
தாயுமிலி தந்தையிலி தான்தனியன் காணேடீ

விடை:—தாயுமிலி தந்தையிலி தான்தனியன் ஆயிடினும்
காயில் உலகனைத்துங் கற்பொடிகாண் சாழலோ.

இவ்வாறு பௌத்தாசாரியன் கேட்டவைகளுக்கு ஊமைப் பெண் ஏற்ற விடைபகர, அவ்வினுவிடைகளை மணிவாசகர் திருச்சாழல் என்ற பகுதியாகத் திருவாசகத்தில் தொகுத் தருளினரென்று கூறுவர்.

திருப்பூவல்லி என்பது

" தேவாறியாத சிவன்தேடியே யாண்டநலம்
ஆவலொடுஞ் சொல்லி யடியாரொடுங் கூடிப்
பூவியந்து கொய்தல் " ஆகுமென்பர்.

இறைவன் சீரினைத் தீமையறப் பாடுவீது திருவுந்தியென்பர். ' சித்தஞ் சிவமாக்கிச் செய்தனவே தவமாக்கும் ' இறைவனது கருணைக்கு ஆராமை யுள்மிகுந்து கைகாட்டிப் புகழ்தல் திருத் தோள் நோக்கமென்பர். இதன் திருவுள்ளக்கிடை பிரபஞ்ச சுத்தியாகுமென்பர். பொற்பலகை மீதிவர்ந்து திருவடியினை யும் இறைவனழகையும் குணங்களையும் புகழ்ந்துபாடிப் பொன் னூசல் ஆடுவோம் யாம் என்று முழங்குவது திருப்பொன் னூசல். அன்னையை நோக்கி ' நித்தமணுளர் நிரம்ப அழகியர் என் உள்நின்று உருக்கி அன்புசெய்வர். இது என்ன அதி சயம்!' என்றுபெண் கூறுவதாகப் பாடுவது திருவன்னைப்பத்து.

## மணிவாசகரும் இயற்கையழகும்

கீதமினிய குயிலினைக் கூவியழைத்து இறைவன் வரும் வண்ணம் நீ கூவாய்! என்று வேண்டுவது குயிற்பத்து. 'நீல உருவிற்குயிலே' 'தேன்பழச் சோலை பயிலும் சிறுகுயிலே' 'சுந்தரத் தின்பக்குயிலே' 'உண்மையுகப்பன்குயிலே உன் துணைத்தோழியுமாவன்' 'வா இங்கே நீ குயிற்பிள்ளாய்' 'காருடைப்பொன் திகழ்மேனிக் கடிபொழில் வாழுங்குயிலே' என்றிவ்வாறு அமைந்த சொற்றொடர்கள், இயற்கை யழகில் மணிவாசகருள்ளம் எவ்வாறு ஈடுபட்டுள்ளது என்பதைக் காட்டுகின்றன. இவ்வண்ணமே திருத்தசாங்கத்தில் 'ஏரார் இளங்கிளியே' 'ஏதமிலா இன்சொல் மரகதமே' 'தாதாடு பூஞ்சோலைத் தத்தாய்' 'செய்யவாய்ப் பைஞ்சிறகிற் செல்வி' 'கிஞ்சுகவாய் அஞ்சுகமே' 'கோற்றேன் மொழிக்கிள்ளாய்' 'இன்பால் மொழிக்கிள்ளாய்' 'சோலைப் பசுங்கிளியே' ஆகிய சொற்றொடர்கள், பொற்றகட்டில் பதியவைத்த நவரத்தினங்கள்போல மின்னி இயற்கையழகினை இனிது காட்டுகின்றன. இன்னும் இயற்கை வர்ணனையின் பொலிவினை மணிவாசகரது திருப்பள்ளி யெழுச்சியிலும் கண்டுகளிக்கின்றோம்.

"கூவின பூங்குயில் கூவின கோழி
குருகுக ளியம்பின இயம்பின சங்கம்
ஓவின தாரகை யொளியொளி யுதயத்
தொருப் படுகின்றது விருப்பொடு நமக்கு"

இவ்வடிகளில் எளிய பதங்களில் இயற்கையினைப் படம் பிடித்துக்காட்டும் பேராற்றல் இனிது புலனாகின்றது. இவை "கோழி சிலம்பச் சிலம்புங் குருகெங்கும் ஏழிலியம்ப இயம்பும் வெண் சங்கெங்கும்" என்ற திருவெம்பாவை யடிகளை நினைப்பூட்டுகின்றன.

## திருவாசகத்தின் வேறு பகுதிகள்

கோயில் மூத்த திருப்பதிகமென்பது சிதம்பரத்தில் அருளடையுங் குறிப்பாகுமென்றும் கோயிற்பதிகமென்பது பெருந்துறைத் தேசிகர்பால் பெருந்துறைப்பிள்ளையார் இயம்பியமோகமாகுமென்றும் கூறுவர். தற்போதமுற்றுங் கெடவேண்டல் செத்திலாப்பத்து. வாதனைகள் வந்து அணுகாவண்ணம் உரைப்பது அடைக்கலப்பத்து. திருவருளில் கலக்கும் ஆர்வமொடு பாடுதல் ஆசைப்பத்து. அடியர் குழாத்துடன் கூட்டும் அருட்பெருமையினை அதிசயிப்பது அதிசயப்பத்து. சற்குருவைப் பிரியாது அணைந்து பணிபுரிந்து இன்ப அன்புபூண்டு கிடக்கப் பெறுவது என்றுகொலோ, எனும் விருப்பம் அத்துவித இலக்கணமாகிய புணர்ச்சிப்பத்தாக வெளிப்படுகின்றது. இவ்வுடற் கண்ணின்று வாழேன், நின்பத நிழற்கீழ்வருக என்று அருள் புரி என்னுஞ்சொல் வாழாப்பத்தாக விரிகின்றது. ஆதரித்து அழைத்தால் அஞ்சற்க என்றும் அருள்வாயாக என்றும் இறைவனைநோக்கி எழுந்த விண்ணப்பம் அருட்பத்தாகும். திருக்கழுக் குன்றப் பதிகத்தில் குருவடிவம் கண்டகாதலும் களிப்பும் வெளியிடப்பெறுகின்றன. கண்டபத்தில், இந்திரியவயம் மயங்காதே எடுத்துத்தாளுக்கும் ஆனந்தத்தினைத் தில்லையினுங் கண்டேனென்று மணிவாசகர் உவந்துரைக்கின்றார்.

"வேண்டாதொன்றும் வேண்டாது மிக்கஅன்பே மேவுதல்" வேண்டும் என்று சிந்தைகலந்தெழும் பிரார்த்தனையே பிரார்த்தனைப் பத்தாம். இப்பாடல்களில் கள்ளமிலாத பக்தமணியின் தூய உள்ளமும் கருணைவாசகமும் 'தெள்ளத்தேறித்தெளிந்து' வருகின்றன.

"கலந்து நின்னடியாரோடன்று வாளா களித்திருந்தேன்
புலர்ந்துபோன காலங்கள் புகுந்து நின்றதிடர்பின்னாள்"

இவ்வாறு தொடங்கும் பிரார்த்தனைப்பத்தில் அடியாரோடு மணிவாசகர் கூடிக்களித்திருந்த பழநினைவுகள் நன்கு சித்திரிக்கப்பெறுகின்றன.

" ......பேரா வொழியாப்பிரிவில்லா
மறவாநினையா அளவிலா மாளா இன்பமாகடலே"

என்று இறைவனை அழைக்கும் அருமைத்திருவாக்கின் பொலிவினை வேறு எங்கே பார்த்தல் கூடும்?

நேயத்தோடு ஒன்றும் ஆன்மநிவேதனம் குழைத்தபத்தாகும். நேயம் மேலிடுதல் உயிருண்ணிப்பத்து. ஆனந்தமுறுவதும் சிவானந்தவிளைவும் அச்சப்பத்து, திருப்பாண்டிப்பதிகம் ஆகியவற்றின் உட்பொருளாகும். இன்னும் பிடித்தபத்து, திருவேசறவு, திருப்புலம்பல், குலாப்பத்து, அற்புதப்பத்து ஆகிய பகுதிகளையும் ஆராய்வோர், கவிச்சுவையும் உள்ளக்கிடையும் அறிந்தனுபவித்தல் கூடும். திருவாசகத்தின் இறுதியில் அமைந்திருப்பது அனுபவத்தினதிசயங்கூறும் அச்சோப்பதிகமாகும்.

" முத்திநெறி யறியாத மூர்க்கரொடு முயல்வேனைப்
பத்திநெறி யறிவித்துப் பழவினைகள் பாறும்வண்ணம்
சித்தமல மறுவித்துச் சிவமாக்கி யெனையாண்ட
அத்தனெனக் கருளியவா றார்பெறுவார் அச்சோவே"

இவ்வாறு தொடங்கி இன்னிசை வெள்ளமாகப் பெருகும் அச்சோப்பதிகம் கற்றார்க்கும் கல்லார்க்கும் ஒருங்கே களிப்பருளும் பெருமை வாய்ந்தது.

திருவாசகத்தின் கவிநயங்கள் இன்னும் பலவாகும். பொருளாழமோ அளவிடற்கெளிதன்று. பாடல்கள் அறுநூற்று ஐம்பத்தாறே யெனினும் இந்நூல் பாவின் சுவைக் கடலாக விளங்குகின்றது. இந்நூலிலுள்ள பக்திச் சுவையை வீர

ழும் இரௌத்திரமும் நகைச்சுவையும் சாந்தச்சுவையோடு
லந்து அரண்செய்கின்றன. மணிவாசகர் எடுத்தாளும் உவமை
ள் பக்திச்சுவைக்குப் பெரிதும் பொருத்தமாக அமைந்துள்
ளன. இவர் வாக்கிலே பயிலும் பழமொழிகளும் பிறவும் இவ
து அனுபவஞானத்திற்கு அளவுகோலாகின்றன. இவரால்
ஆளப்படும் முன்னோர் மொழியும் பொருளும் இவரது புல
மைக்குச் சான்று தருகின்றன. இத்தகைய பேரறிவாளராகிய
திருவாதவூர் மகிழ் செழுமறைமுனிவர்' நந்தமிழ் மக்
களுக்கு அழியாத குலதனமாக அருளிய திருவாசகத்தின்
பெருஞ்சிறப்பினை ஆன்றோர் பின்வருமாறு பாராட்டிக் கூறு
வர்.

"தொல்லை யிரும்பிறவிச் சூழுந் தளைநீக்கி
அல்லலறுத் தானந்த மாக்கியதே—எல்லை
மருவா நெறியளிக்கும் வாதவூ ரெங்கோன்
திருவா சகமெனுந் தேன்."






PRINTED AT THE B. N. PRESS, MOUNT ROAD, MADRAS.